Valliammai

சிவமயம்.

# பிரபோதசந்திரோதயவசனம்.

இது

கிருஷ்ணமிசிரபண்டிதர்

வடமொழியில் இயற்றியதையும், அதனைத்தமிழில்

மாதைவேங்கடேசபண்டிதர்

இயற்றியதையும் கொண்டு

யாழ்ப்பாணத்துமானிப்பாய்

ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை F. T. S.

கத்தியரூபமாக இயற்றியது.

PUBLISHED BY **M. TAMBY & Co.**
*156, Broadway.*

Madras.
PRINTED BY S. R. C. AT THE MADRAS RIPON PRESS.
*316, Thambu Chetty Street.*

1889.

விலை

Valamuladai



# முகவுரை.

இப்பிரபோதசந்திரோதய மென்னும் நூல் வட மொழியிலே கிருஷ்ணமிஸ்ரர் என்னும் பண்டிதரால் நாடகரூபமாக இயற்றப்பட்டது. மனம் முதலியவற்றை ஒருபக்கமாகவும், விவேகம் முதலிய வற்றை மற்றொருபக்கமாகவும் நிறுத்தி அவ்வவற்றது இயல்புக்கேற்ப ரூபகாரம் பண்ணிப் பாரதகதையை நிகர்க்குமாறு கட்டி நடாத்தப்பட்ட இந்நூல், இயல்பிலே கதைகளாற் கவரப்படுவதாகிய மன மென்னு மகவுக்குக் கதை யென்னும் சர்க்கரையிலே ஞானம் என்னும் மருந்தைப் பொதிந்து ஊட்ட எழுந்த தொருதாய்போல்வது. கிருஷ்ண மிஸ்ரர் இற்றைக்கு ஏறக்குறைய 1250 வருஷங்களுக்கு முன்னே மிதிலாபுரியில் அவதரித்து விளங்கிய மகா பண்டிதர். இந்நாடகத்தின் பெருமையைக் கேள்வியுற்ற மகத தேசத்தரசனாகிய கீர்த்திவர்மன் தனது பரிவாரங்களோடு மிதிலைக்குச் சென்று அந்நாடகத்தை அரங்கேற்றுவித்துக் கண்டுகளித்தான் என்றால் அதன்பெருமையையானு சொல்லவல்லேன்!

அதுநிற்க, அவ்வட மொழிநூலை இற்றைக்கு 300 வருஷங்களுக்கு முன்னே மாதை "வேங்கடேச சுவாமிகள்" தமிழிலே செய்யுள் ரூபமாக மொழிபெயர்த்தனர். அதனை யான் வடமொழியையும் தழுவி யாவரும் எளிதி லுணருமாறு வசன ரூபமாக்கினேன். பாடபேதத்தாலும் எனது நிரம்பா அறிவாலும் அர்த்த பேதங்கள் முதலியன காணப்படுமாயின் அவற்றை இயைபப்படித்துக்கொள்வது பெரியோர்கடன்.

இங்ஙனம்.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

Valambikakal

உ

பரமபதிதுணை.

# பிரபோதசந்திரோதயம்.

## உற்பத்திச் சருக்கம்.

(இதிலே மனம் முதலியவற்றை ஆண் பெண் என இயல்புக்கேற்ப உருபகாரம் பண்ணி அவற்ற துற்பத்தி கூறப்படுகின்றது.)

சருவசாட்சியாகிய பிரமசந்நிதானத்திலே மாயையெ ன்னுமொருபெண் விகாரம்புரிந்து கருப்பந்தாங்கி மான தன் என்னு மொருபுத்திரனைப்பெற்றாள். இருளையொளி யாகவும் ஒளியை இருளாகவும் இன்பத்தைத் துன்பமாக வும் துன்பத்தை இன்பமாகவும் செய்வதே தொழிலாக வுடைய அம்மாயாதேவி, தான்பெற்ற மானதன் என்னும் புத்திரனை அன்போடணைத்துத் தாராட்டிப் பாராட்டிசீரா ட்டிச் ஊனூட்டிவளர்க்க, அவனும் வளர்ந்து, நல்லமரத் திற் புல்லுருவிதோன்றினாற்போல, சச்சிதானந்தசுத்தராய பிரமத்தினது சுயம்பிரகாசகுணத்திற்கு மாறுகியகுணங்க ளோடும் விளங்கத்தொடங்கினான். அப்பால், பதினாறாண் டளவில், பிரவிருத்தி, நிவிர்த்தி என்னும் இருபெண்களை மணம்புணர்ந்து, தன்னை ஈன்றுவளர்த்த மாயாதேவி கண்டு களிகூருமாறு அதி சம்பிரமத்தோடு வாழ்ந்துவருநாளில், முதன்மனையாளாகிய பிரவிருத்தி என்பவள்வயிற்றில், மோ கன், அங்காரன், மதனன், மானன், காமன், கோபன், மச் சரன், சங்கற்பன், இராசதன், சந்தேகன், தாமதன் என் னும் புத்திரரும், அவர்க்குச் சகோதரியாய்த்தீவினை மாது

கபடி, அகீர்த்தி, அநீதி என்னும் புத்திரிகளும் உற்பவமாயினர். இரண்டாம்மனையாள்வயிற்றில், நிரூபகன், விவேகன், சாந்தன், சந்தோஷன், சமன், தமன், விராகன், சத்துவன், அமுதன், தவன் என்போரும் * இயமாதியர் எண்மரும் புத்திரராக உற்பவித்தார். பின்னரும், இம்மாது வயிற்றிலே, மைத்திரி (சிநேகம்), கருணை, நீதி, முதிதை (மகிழ்வு) உபேட்சை என்னும் ஐந்துபுத்திரிகள், பாற்கடலிடைப்பிறந்த அமுதம்போலப் பிறந்தார்கள்.

அப்பால் மாயாதேவி தனதுபௌத்திரருக்கு மணம் புரிவித்தலாவசியகமென்றெண்ணி, மோகன் என்பவனுக்குத் துன்மதி என்னும் மாதையும், அகங்காரனுக்கு அகந்தை என்பவளையும், காமனுக்கு இரதியையும், கோபனுக்குக் கொலை என்னும் சுந்தரியையும், மச்சரனுக்கு அசூயையையும், மதனுக்கு மறதியையும், மானனுக்கு வெகுமதியையும், இராசதனுக்கு முயற்சியையும், தாமதனுக்குச் சோம்பலையும், சங்கற்பனுக்குக் கற்பனையையும், சந்தேகனுக்கு அசித்தியையும் முறையே மணம்புரிவித்து, அவ்வவர்க்கேற்ப வரிசைகளும் கொடுத்து அவர்களைக் குறைவறவிருத்திய பின்னர், மற்றைய பௌத்திரிகளையும் மணம்புரிவித்தலே தகுதியெனக்கருதி, அவருள் தீவினையையும் அகீர்த்தியையும் அநுசாரன் என்பான் ஒருவனுக்கும், கபடியையும், அநீதியையும், கலியன் என்னு மொருவனுக்கும் கன்னிகாதானம் செய்வித்துக் களிகூர்ந்தாள்.

இங்ஙனம் வாழ்வுபூண்ட மக்களுள்ளே, அகந்தையை விவாகஞ்செய்த அகங்காரன் என்பவன், மமதை என்னும் ஒரு புதல்வியையும், லோபன் என்னு மொருபுத்திரனையும்பெற்றான். அவ்வுலோபன் இச்சை என்பாளொரு

---

* ஆதனன். இயமன், நியமன், சமாதி, தாரணன், தியானன், பிரத்தியாகாரன், பிராணயாமன்.

கன்னியைமணந்து இடம்பன் என்னும் புத்திரனை யீன்றான். அவ்விடம்பன் வஞ்சனைதேவியைமணந்து அசத்தியனை ஈன்றான்.

இரதியைப்புணர்ந்த காமன் விடயானந்தன் என்னும் புத்திரனைப்பெற்றான். கொலையை மணம்புணர்ந்த கோபன் கலகன் என்னும் புத்திரனைப்பெற்றான். மறதியைப்புணர்ந்த மதன் நாசனைப்பெற்றான். நாசன் கெடுதியைப் புணர்ந்து அச்சனைப்பெற்றான்.

அசூயையை வதுவைசெய்த மச்சரன் வயிரனைப் பெற்றான். வயிரன், மரியாதையைப் புணர்ந்து அக்கிரமனைப்பெற்றான்.

வெகுமதியைப்புணர்ந்த மானன் உற்சாகனைப் பெற்றான். கற்பனையைப்புணர்ந்த சங்கற்பன் விகற்பனை ஈன்றான். விகற்பன் யோசனையைச்சேர்ந்து வெகு முகனைப் பெற்றான்.

அசித்தியைப்புணர்ந்த சந்தேகன் கல்க்கனைப்பெற்றான். சோம்பியைமணந்த தாமதன், நித்திரை, அசிரத்தை யென்னும் கன்னியரிருவரைப்பெற்றான்.

முயற்சியைப்புணர்ந்த இராசதன் சிரத்தை யென்னுமொருபுத்திரியையும் காரியன் என்னும் ஒருமைந்தனையும் பெற்றான். அகீர்த்தியைப்புணர்ந்த அநாசாரன் பொய்மாதையும், சிற்றின்பனையும் பெற்றான்.

சுபடியைப்புணர்ந்த கலியன், சஞ்சலன், அதன்மன் என்னு மிருவர் மைந்தரைப்பெற்றான். அதன்மன் அசேதகியைப்புணர்ந்து துக்கனைப்பெற்றான்.

இனி நிவிர்த்தி உத்தமகுணத்தராகப் பெற்ற மக்களுள்ளே, விவேகன் சுமதியையும், நிரூபகன் உத்தியையும், சாந்தன் உறுதியையும், சந்தோஷன் மகிழ்ச்சியையும், சமன் சாந்தியையும், தமன் தாந்தியையும், விராகன் விர

த்தியையும், சுசீலன் கீர்த்தியையும், தவன் நல்விருத்தி யையும் சத்துவன் புனிதையையும், இயமன் அவிச்சை யையும், நியமன் மனநிலையையும், ஆதனன் திதியையும், பிராணயாமன் பூர்த்தியையும், பிரத்தியாகாரன் மீட்சி யையும், தியானன் காட்சியையும், தாரணன் திருதியை யும், சமாதி தன்னிலைமாதையும் அன்போடு மணம்புணர் ந்து மகிழ்கூருவாராயினர். அப்பால் இவர்சகோதரியரான உத்தமகன்னியருள்ளே, மைத்திரி நியாயனுக்கும், நீதிகரு மனுக்கும், கருணை பூரணனுக்கும், உபேட்சை முயற்சிக் கும், முதிதை அவிரோதனுக்கும் மாலைசூட்டினர்.

யுத்தியைப்புணர்ந்த நிருபகன் நிச்சயனை யீன்றான். உறுதியைமணந்த பொறையன் அடக்கனைப் பெற்றான். மகிழ்ச்சியைமருவிய சந்தோஷன் அற்புதயனைப்பெற்றான். சாந்தியைப்புணர்ந்த சமன் அகமுகனை யீன்றான். தாந்தி யைப்புணர்ந்த தமன் தனிவைத்துநோக்குவானைப் பெற் றான். விரத்தியைப்புணர்ந்த விராகன் சுகனைப்பெற்றான். கீர்த்தியைப்புணர்ந்த சுசீலன் பிரசித்தியைப்பெற்றான். வி ருத்தியைப் புணர்ந்த தவன் பரோபகாரனைப் பெற்றான். புனிதையைப்புணர்ந்த சத்துவன் தருமனையும் சிரத்தை யென்னும் புதல்வியையும் பெற்றான். அச்சிரத்தை வயிற் றிலே சாந்தி உற்பவித்தாள்.

அவிச்சையைப்புணர்ந்த இயமன் இரவாமை என்னு மகவையீன்றான். மனநிலைப்பெண்ணைப்புணர்ந்த நியமன் சத்தியனைப்பெற்றான். திதியைப்புணர்ந்த ஆதனன் தேய னைப்பெற்றான். பூர்த்தியைமணந்த பிராணயாமன் தீர்க் காயுவனைப் பெற்றான். மீட்சியைப்புணர்ந்த பிரத்தியாகா ரன் நிருலேபனைப்பெற்றான். காட்சியைப்புணர்ந்த தியா னன் ஐயமில்லானைப் பெற்றான். திருதியைப்புணர்ந்த தாரணன் அப்பிரமன் ஆத்திகன் என்னு மிரு புத்திரனைப்

பெற்றான். தன்னிலேயைப் புணர்ந்த சமாதி, நிருவிகற்ப னேயும் மோனனேயும்பெற்றான்.

இவ்வாறே மானதனுக்குப் பிரவிர்த்திவயிற்றிற் பிறந்த மூடமக்களும் நிவர்த்திபெற்ற மதியுடைமக்களும், காசிப முனிவருக்குத் திதி அதிதியென்னுந் தேவியர்வயிற்றிற்பிற ந்த அசுரரும் தேவரும் போலப் பெருகி இருதிறத்தராய்ப் பிரிந்து ஓங்கிவருங்காலேயில், பாட்டியான மாயாதேவி கண் களிகூரக்கண்டு மகிழ்ச்சிபொங்கத் தன்னேமறந்து பரவசப் பட்டாளாகி, இனிச் செயற்பாலது யாதெனச் சிந்திப்பா ளாயினள்.

உற்பத்திச்சருக்க முற்றிற்று.

---

## மோகனரசாட்சிச்சருக்கம்.

நமக்கு நாயகனுகவாய்த்த மகாபுருஷனே விஷயங்க ளிலே சற்றும்விருப்பில்லாதவன். நீங்காத இளமையைப் பொருந்தி யிருப்பவனுகியும் நம்மை ஒருபோதும் நோக்கு வதுமில்லே. எல்லாமறியு மறிவினேயுடையனுகியும் எமது கருத்தின்வழி நடப்பதுமில்லே. நமக்கோ சருவலோகங் களேயுங் கட்டி யாளத்தக்க புத்திராதியர்கள் கைவசத்திலிரு க்கின்றார்கள். இனி எமதுகணவனுல் சுகம்பெறக் கருதுவ தை ஒழித்துவிட்டு மூவகையுலகத்தையுங் காக்கின்ற முத ன்மையை எமது புத்திராதியர்க்காக்கி, அவரால் சுகம்பெறு வதே தக்கதன்றி வேறில்லே என்று இவ்வாறு சிந்தித்துத் துணிந்தாள். இங்ஙனந்துணிந்த மாயாதேவியினுடைய குறி ப்பையுணர்ந்தமைந்தன் தனக்கிருப்பிடமாக விசித்திராலங் காரமாயுள்ள எண்ணிறந்த நவத்துவார புரங்களேயெல்லாம் அமைத்துக்கொண்டு அவ்வப்புரங்கள்தோறும் தந்தையா கியபிரமத்தை அணுத்துணேயாக நிறுத்திச் சிறையிலிட்

டான். இவ்வாறு சிறையிலிடப்பட்ட தந்தை ஒருவனே யாயினும், உலகமெங்கும் வியாபித்துப் பிரகாசிக்கின்ற சூரியன் ஒன்றேயாகியும தொகைப்பட நிரைக்கப்பட்ட தெள்ணீர்க்குடங்கள்தோறும் தனித்தனியே நின்று பிரதிவிம்பித்தல்போல, அந்நவத்துவாரபுரஙகள் தோறும் விளங்குவானுயினன். மானதன் தனது தந்தையாகிய பெரியவரைச் சிறையிலிட்டதுகண்ட மோகாங்காரர், நன்றுநன்றென்று களிகூர்ந்தெழும்ப, ஏனையகாமனுதியரும், இனிவிடோம் விடோம் என்று பாசங்கொண்டு செவ்வே கட்டியிறுக்கி இடரற்றவராகிய அப்பெரியவருக்கு இடர்விளைத்தார்கள். மாயைப்பாட்டி நினைந்த வஞ்சனையையும், அகுறிப்புணர்ந்த மைந்தனுகிய மானதன் பெரியவரைப்பிணித்தமையையும், காமனுதியர் விடா தவரை மேன்மேலும் வருத்த ஒருபட்டமையையுங்கண்ட விவேகன் என்பவன், பதைபதைத்துப் பாவிகளையடுத்தவர்களும் பாவிகளாவரன்றே, ஆதலால் சும்மாவிருப்பது தக்கதன்று என்றெண்ணி எழுந்து, மானதனைவணங்கி, "ஐயனே, தருமமல்லாத காரியத்தைச் செய்வது உனக்குத்தருமமாகுமா? பாவிகளை அடுத்தவர்களும் பாவத்தை யடைவரென்றல் வேறு யான் சொல்லக்கிடப்ப தென்னை? நீ உன் தாயினுடைய வஞ்சனைக்குடன்பட்டவனுகி உன்தந்தையை அநீதியாகச் சிறையிலிட்டது மகா பாதகமாமன்றே. யாவர்க்குமொப்ப இன்பந் தருவதாகிய தருமத்தைச் செய்வதேதகுதி. அஃதன்றி அற்ப சுகத்தைக் கருதிச்செய்யப்படும் பாவம், சுகத்தைத் தருவதுபோற் றேன்றுகினும், பசிய மட்பாண்டத்திலே நிறைக்கப்பட்ட தண்ணீர்அதனேடுங் கணப்போதிலழிவதுபோலத் துன்பத்துக் கேதுவாகும். ஆதலினுலே உனது நல்ல தந்தையைத் தெய்வமாகப்பேணுது பின்னப்படுத்தித் துன்பத்துக் கேதுவாக்குதல், ஐயனே! உனக்கழகாகாது" என்று கூறினுன்.

அதுகேட்டமானதன், விவேகனைப்பார்த்து நகைத்து, நன்றுகூறினாய்! "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் வாக்கியத்திலே முதற்கண் எடுத்துச் சொல்லப்பட்டவள் அன்னையன்றோ. ஆதலால் அன்னையே தந்தையிலுஞ் சிறந்தவள். தந்தை தாயரைத் துறந்த சந்நியாசிகளும் தாயரைக் காணுங்கால் வணங்காது விடாரன்றோ. இத்தன்மைய அன்பேகாரணமாக யாமும் எமது அன்னையினது உள்ளக்குறிப்பை யுணர்ந்து தந்தையைச் சிறையிட்டேம், என்றான். அதுகேட்ட விவேகன் மீண்டுமெழுந்து, ஐயனே, "அன்னையும் பிதாவும்" என்னும் வாக்கியத்தைச் செவ்வேயுணர்ந்த இராமன், தன்னைக் காட்டுக்கேகும்படி ஆஞ்ஞாபித்த தந்தையினுடைய சொல்லைச் சிரமேற்கொண் டங்ஙனஞ் செய்தானன்றி அவனைப்போகவொட்டாது தடுத்தழுத தாயுரையைச் சிறிதேனுங் கேளாதொழிந்தது யாதுபற்றியோ? தாயினும் தந்தையே மிக்கானென்றன்றோ. இன்னும், பரசிராமன் தனது தந்தை தகுந்தகுமென்று மெச்சத் தாயைச் சின்னபின்னஞ்செய்ததும் தாயினும் தந்தையே விசிட்டனென்றெண்ணியன்றோ. ஆதலால் தாயை அவமதித்துத் தள்ளப்போகினும் தந்தையைத்தள்ளிவிடுதல் தக்கதன்று; விரைந்துசென்று உனது தந்தையைச் சிறைவிடுதலே தருமமென்று சொன்னான்.

இவ்வுரைகேட்ட அறிவிலியாகிய மானதன் தனது மைந்தனாகிய விவேகனைச் சினந்துநோக்கி, பிள்ளாய், தந்தையேயாயினும், அரிய மனைவியேயாயினும், மைந்தனேயாயினும் தமது குடிக்குக் கேடுநினைப்பவராயின் அவரோடுறவுகொள்ளுதலினும் பகையாதலே நன்று. உலகத்திலே பயிர்செய்மாந்தர் பயிரோங்கி நிறைந்த கழனியினுள்ளே அப்பயிர்களை யழிக்கப் புகுந்த மாட்டைப்பார்த்து அது முன்னர்த் தாமுழுது பயிர்விளைத்தற் குபயோகப்பட்ட மாடாயிற்றே என அதனையோட்டித் தொழுவத்திற் கட்டாது

விடார்களன்றே. சுற்றமென்னு மளவில் நீக்கத்தகாத தீயவரைத் தம்முள்ளே யடக்கிக்கொள்ளுதல் வேண்டும். அங்ஙன மடக்கப்படாரேல் அவரால் தீமையுண்டாவது சத்தியம். சோறுக்குதற் கின்றியமையாததாகிய தீயை வீட்டிலுள்ளே ஒரு கோணத்திலேவைத்துத் தடைசெய்யாது விடுவரேல் ஊரையெங்கு மழித்துவிடுமன்றே. இவற்றையெல்லாம் யாம்சிந்தித்து நோக்கியே எமது குலத்துதித்த புத்திராதியரை உய்யவொட்டாது கேடுசெய்யநினைத்த எமது தந்தையைச் சிறையிட்டோம் என்றான்.

அதுகேட்ட விவேகன் மீண்டும் எழுந்து கூப்பியகரத்தனாய்த் தனது தந்தையைநோக்கி, நிலத்தின்றன்மையால் நீரின்றன்மை மாறியதுபோல உனதுகுணமும் உனது தாயாகிய மாயையின் வஞ்சக்குணத்தைப் பெற்றது. அதற்கு நீ யாதுசெய்வாய். ஆயினும் நற்குணமேயுருவாய உனது தந்தையின் குணத்தைப் பற்றினாயில்லை. இராவணனானவன் உத்தமகுணத்தனான தந்தையினது குணத்தைப் பொருந்தாது துஷ்டையாகிய தாயினது குணத்தைக் கைக்கொண்டமையால் தனது நாடுநகரிழந்ததுமன்றி அற்ப நரராலும் வானரங்களாலும் சுற்றத்தோடும் வேரறுக்கப்பட்டழிந்த விஷயம் உலகறிந்ததொரு விஷயமே. ஆதலால் நீயு முனது தந்தையினது மேலான குணத்தைப் பின்பற்றாது உனது தாயினது துற்குணத்தைப் பூணுவையாயின் இம்மையிலே பழிக்காளாகி வாணாளையும் போக்கிக்கொள்வதன்றி மறுமையிலே நரகடைந்து வீணே நற்கதியையும் இழக்கப்போகின்றாய் என்று கூறினான்.

இதனைப் பக்கத்திலே யிருந்து கேட்டமோகன் ஞடுக்காகவெழுந்து விவேகனைப் பார்த்துக் கூவி, நில்லு! நில்லு! என் கேள்விக்குச் சற்றேவிடைசொல்லு என்றதட்டி, தம்பீ! இலங்கைவேந்தன் தாயினுடைய செய்கையைக் கைக்கொண்டதால் உயிர்மாண்டான் என்றாய். அஃது

ண்மையேயாகுக. தந்தைக்குமாறாகப் புத்திரர் எழும்புதல் தகாதகாரிய மென்று முன்னமோ கூறியிருக்கின்றாயன்றோ? இப்போது இங்கே உன்னுடன் வாதாடுபவர் உனதுதந்தை யன்றோ. இன்னும் நீ இங்கே பேசவந்ததும் உனது தாயி னது செய்கையன்றோ. ஆகவே நீ யிருவழியினும் குற்றப் பாடுடையனாகின்றாய். இதற்கு நீ சொல்லத்தக்க சமாதா னம் யாதேனுமுளதேற் கூறிவிட்டு அப்பாற் பேசக்கட வை யென்றான்.

இதுகேட்ட விவேகன் மோகனைப்பார்த்து, மோகா! நீ அறியாது வினாவினாய். பெற்ற தாய்தந்தைகள் தீயவழி யிற் செல்வரேல் அவரைவிட்டகல்வதே விவேகிகள் செய் கை. இராவணனது தாய்பெற்ற பிள்ளைகளில் இராவண னும் கும்பகன்னனும் தீயவழியிற்சென்று அவமேமாள, நல்வழியிற் சென்றவனாய இராவணன் தம்பி விபீஷணன் நன்மையை யடைந்து இன்று முயிர் பெற்றிருப்பதைக் கேட்டறிந்திலையா வென்றுமறுத்தான்.

இங்ஙனம் மறுத்தவுரையானது மானதனது செவியிற் படுதலும், நெஞ்சழன்று விவேகனைப்பார்த்து, விவேகா, நண்டு, சிப்பி, வேய், கதலி தங்கருவால் நாசமெய்துதல் போல் நீ எமது குலத்துக்கு நாசகாரணனாயினாய். என்னை வருந்திப் பெற்றதாயைக் கொலைசெய்து விடும்படி எனக் குப் புத்திகற்பிக்கின்றாய். இதனினும் அழகியதுயாது! இரணியாதிகளைக் கொல்லப் பிரகலாதனன் உற்பவித்தது போல, நீயு மெங்குலத்தைக் கொல்ல நிவிர்த்தி வயிற்றிற் பிறந்தாய் போலும். எமது தந்தையை யாம் விஞ்சவொ ட்டாது தடுத்துவைத்தா மன்றி அவரைக் கொன்றுவிட் டேமல்லேம். நீயோ எம்மையெல்லாம் அடியோடு நாச மாக்கக் கருத்துற்று நங்குலத்துக் கொருகோடரிக்காம்பாகி நிற்கின்றாய். உனது இயற்கையை இனி எம்மால்மாற்று

வது கூடாது. இனியுனது கருத்துப்போல எங்களுக் கெல்லாம் நீ பகைவனுகி எங்களை அழித்து முப்புவனங்க ளையும் கைப்பற்று முபாயங்களைத் தேடு, போபோ! தூரப் போவென்று அவ்விவேகனைப்போக்கிவிட்டுப் பக்கத்திலே நின்ற மோகனைக்கூவி, அவனைமார்போடணைத்து, அப்பா, யான் எனது தந்தையைச் சிறைசெய்தகாலத்தில் என் குறி ப்பறிந்து விரைந்தோடிவந்து முன்னின்று காமனுதிய ருடன் பாசங்களா லிறுகக்கட்டி அசையவொட்டாது தடுத்தவன் நீயேயன்றே. உன்னைப்போலுஞ் சற்புத்தி ரன் வேறுயாவன்! உன்னைப் பெறுதற்கு யான்செய்த புண் ணியமே புண்ணியம். என்னையோ மூப்புவந்தடுத்தது. முதிர்ந்த ஆலமரத்துச்கு அதன்வீழ்போல இவ்விருத்தப் பருவத்தில் என்னை இரட்சிப்பதற்கு நீயு முனது அரியதம் பியரும் முற்பட்டுவிட்டீர்கள். இனி எனக்கு யாதுங் கு றைவருவதில்லை. ஆதலால் எனது இராச்சியபாரத்தை நீயே தாங்குவாயாக என்றுகூறி அவனுக்கு மகுடாபிஷே கம்பண்ணி, எனது தந்தையை வெளிப்பட வொட்டாது சிறைப்படுத்தி என்னுடன் நீடூழிகால மரசியற்றுவாயாக வென்று வாழ்த்தினன். கொம்பற்றிருந்த கொடிய வொரு புலிக்குக் கொம்பொன்று வாய்த்தாற்போல மோகனுக்கு இராச்சியாதிகாரம் கைக்குவரவே, மோகன் முன்னையிலும் பன்மடங்கதிகமான வீரசூரத்துவமும் புஜபல பராக்கிரமு மடைந்து, தந்தை குறிப்பின்வழி, நிவிர்த்தியையும் அவள் பெற்ற விவேகனுதி புத்திரரையும் தனது இராச்சிய எல் லைக்குள் நிற்கவுமிடங்கொடாது ஓட்டிவிட்டான். அப்பால் முப்புவனங்களிலும் தனதுகோலே செலுத்தி இணையில் லாத அரசுபுரிவானுயினன்.

மோகனரசாட்சிச்சருக்க முற்றிற்று.

---

# அவித்தியாபுரச்சருக்கம்.

மோகனாதியரால் ஓட்டிவிடப்பட்ட விவேகனும் அவன் குழாத்தினரும் மிக்க தளர் வுடையவராய்ப் புறம்போந்து புண்ணியத்தலங்கள் எங் கெங்குளவோ ஆங்காங்கும் தனித்தனிசென்று ஒதுங்கிக்காலக்கழிவு செய்வாராயினர். இதனைக்கண்ட தேவர்களும், தமக்குத் துணையாக நின்ற தவத்திகளும் புண்ணியவான்களும் துன்புறுதலைக்கண்டு சகியாதவர்களாய்த் தாமும் தத்தம்பதிகளை விட்டு நீங்கி அகல்வதே கருமமென்றெண்ணி வேற்றிடங்களைத் தேடி ஓடினார்கள். அப்பால், மோகராசன் தனக்குப் பகைஞராயுள்ளார் யாருமில்லாமையாலும் தன்னிடத்தேயுள்ள துணைப் படைவலியினாலும் அளவில்லாத செல்வத்தாலும் மிக்க செருக்குடையனாகித் தனதுமனைவியாகிய துன்மதியை உபபலமாகக்கொண்டு; கல்லாமை, கொலை, களவு, துராசை, இன்சொற் சொல்லாமை, நடுநிலையின்மை, கோபம் முதலிய தீக்குணங்களேயன்றி நன்மைசிறிதேனு மில்லாத தீயவர்களுடைய இருதயமாகிய அவித்தியாபுரம் என்னும் ஒரு நகரத்தை அமைத்தான். அந்நகருக்கு இனமென்னும் அகழியும், விருப்பம் என்னும் மதிலும், யான் எனதென்னும் மதிலுண்மேடையும், தீயவொழுக்கம் என்னும் காட்டரணும், பஞ்சேந்திரியக் காவலும், விஷயங்கள் வெளிப்படாவண்ணம் விரைந்து அகப்படுத்தும் சூத்திரப்பொறிகளும், உலகெல்லாவற்றையு மொருநொடியில் வலம்வரத் தக்கபலகோடி சேனைவீரரும், அவாவென்னும் மலைத்துருக்கமும் உறுப்புகளாயின வென்றால் அதன் பலத்தைச் சொல்லப்புகுதல் எளிதன்றென்க. பின்னரும், இரண்டு காலைநிறுத்தி, மேலே யிரண்டுகையைப் பூட்டி, முதுகெலும்பாலிணைத்து, முகட்டின்மேலே பழுக்கழிகளை யிட்டு

நரம்புகளால் வரிந்து மயிர்த்தோலால் வேய்ந்து புலாற் சுவரொடுத்து, போக்குவரவுக்கு இருவாசலும், ஏழுசாளரங்களும், சாக்கிரமுதலிய நான்கு தளஅடுக்கும், அவற்றின் மெலே சிகரமும், கூந்தலாகிய நீண்டகொடியும் அமையுமாறு, நான்முகத்தச்சனால் ஒரு சித்திரமாடமு மியற்றுவித்தான். இத்தன்மையாக வியற்றப்பட்ட மாளிகையை உடனே யழிக்கினுமழிப்பன். சிறுகணப்போது நிலைக்கவிடுத்தழிக்கினுமழிப்பன். ஒருகணப்போதிலே ஆயிரம், பதினாயிரம் இலக்ஷம், பத்திலக்ஷம், கோடி, கோடாகோடியென அனந்த மாளிகைகளை யியற்றுவிப்பன். இவ்வாறே புது மாளிகைகளை யியற்றுவிப்பதும் அழிப்பதுமே போதுபோக்காகக் கொண்ட மோகன், தனது தேவியாகிய துன்மதிசமேதனாய் நெஞ்சென்னும் சித்திராதனத் திருந்து அரசியற்றுவானாயினான்.

இனி அவ்விராஜனுடைய குணாதிசயங்களைச் சிறிது கூறுவாம்.

அவனுடைய சிந்தை, இந்திரனுடைய வச்சிரவாளுக்குந்தகராத பெருவலிக்கல்லை யொத்தது. பன்னிரண்டாதித்தருமொருங்கேகூடிப் பிரகாசிக்கினும் தொலையாதவல்லிருளெல்லாந் திரண்டொருவடிவெடுத்தா லொத்தவடிவமே அவன் வடிவம். மரப்பாவை வாய்திறந்து நல்லுரை கூறப்போகினும் இவன் தனது நாவினையசைத்து ஒரு நன்மொழி கூறான். வசையுரைக்கவோ மயிர்க்கால்தோறும் ஒரொரு வாயுளான்போலப்பேசுவான். தன்கோணல் பார்ப்பதற்குத் திரிதராட்டிரனை யன்றி மற்றெவ்வான். பிறர்கோணல் காண்பதற்கோ ஆயிரங்கண்ணனுடைய இந்திரனையாவான். இவன்செவி, ஆயிரங்கோடி வம்புகள்கூடி நுழையினும் இடம்பெறத்தக்க பெருப்புற்றினை யொத்தது. அங்ஙனமின்றி. ஒருசிறியதருமநூலை எடுத்து நுழைக்கப்புகினோ சற்றேனும் துளையில்லாததொருவச்சிரத் தட்டை

யொத்ததாம். தன்னுடைய நிலையற்றவாழ்வை நீடூழி நிலைக் கத்தக்கதென நினைக்கும் நினைவினையுடையவன். இரப்ப வர்க்கொன்று கொடுப்பதில் இரண்டுகையு மிழந்தவனை யொத்தவன். தானொன்று பெறுவதிலோகார்த்தவீரியார் ச்சுனனும் வெட்கத்தக்க பல கைகளை யுடையவனைப் போ ன்றவன். நல்வழியில்நடப்பதில் காலற்றமுடவனைப்போன் றவன். தீயவழியிற் செல்வதிலோ பச்சைக்குதிரைபூட்டிச் செல்லும் சூரியனிலும் மிக்கவன். இவனுக்கு மஞ்சன நீர் பாவகன்மமாகிய வெந்நீர்; வஸ்திரம் வழுவிய வொழுக்கம். ஆபரணம் துர்க்குணம்; புஷ்பம் பிடிவாதம்; சந்தனம் அப காரம்; போசனம் புன்மை; தாகநீர் வஞ்சகம்; ஊஞ்சல் பிறப்பு. இவனுடைய தேராகிய எதிர்மொழி, விதியை மே ற்கொள்ளாதேனும் முயற்சியென்னுங் கோல்கொண்டு து ன்மதியென்னும் பாகன் நடத்த எமலோகம்வரைக்கும் வா வியெழுந்து உலகமுழுதையும் காற்றடிபோல ஒருநொடி யிற் சுற்றிவரும் இயல்புடையது. அப்பால் இவனுடைய யானையாகிய மருளோவென்னில், வாய்மையாகிய மரத்தை வேரோடே சாய்த்து, நற்குணமாகிய மலையைத்தகர்த்து, அறமாகிய வாழையைத் துவைத்து, அன்பென்னும் ஓடை யிலே புகுந்து கலக்கி, மேலாகிய வாழ்க்கையை அடிக்கு மியல்புடையது. இவனுடைய துரகமாகியகவலை எதிர்ப் பட்டவொன்றை வென்றல்லது பின்னிடேன் என்னுந்தரு க்குடையதாய் வாயுகதிமுதலிய எக்கதியும் நாண, சத்தகிரி யேயாயினும், சத்தசமுத்திரமே யாயினும், சத்தபுவனமே யாயினும், அங்கெல்லாம் ஒருகணத்தில் சுற்றிவரவல்லது. இனி, பதாதியாகிய விபரீதநெறியின் பெருமையைக் கூறப் புகினோ, முற்றத்துறந்த துறவிகளையும் எதிர்த்து அவர்க ளைத் தனதடிப் படுத்த வல்லதென்றால் மற்றென்னோ பே சக் கிடப்பதென்க. இத்தகைய ரதகஜதுரக பதாதிகளோ டும் மோகவேந்தன் மதிகேடெனுங் குடை நிழலிலிருந்து

நீக்கோலென்னுங் கொடுங்கோலோச்சி அட்டதிசையும், சத்த சமுத்திரமும், அண்டபகிரண்டமும் எங்கு மொன்றாய் மயங்க ஆணை செலுத்தி வருநாளில், ஆங்காரன், காமன், கோபன், லோபன், செருக்கன், மானன், அதன்மன், கலியன், டம்பன், அசத்தியன் முதலிய யாவரும் அம்மோக வேந்தனது ஆஞ்ஞைப்படி கொலுமண்டபம் வந்து கை கூப்பி நின்றார்கள். அவர்களை மோகவேந்தன் ஆசீர்வதித்து ஆசனத்தமர்த்தி, தம்பிகாள்! எனவிளித்து, இப்பூலோக முதலிய பதினான்கு லோகங்களையும் எம்மைக் கட்டியாளுமாறு எமது தந்தையார் எமக்குக்கொடுத்து மகுடாபிஷேகம் பண்ணத் துணிந்த போது யாம் உடன் பட்டது "தம்பியுள்ளான்சண்டைக்கஞ்சான்" என்றாற்போல் உங்கள் உபபலத்தை மனத்திடை நிறுவிக்கொண்டே யன்றி மற்றன்று. நீங்கள் யாவரும் எம்மோடு அபேதமா யிருக்குங் காறும் எமக்குயாதுங் குறைநேரிடப் போவதில்லை யென்பது சத்தியம். யாம் பகைவர்களை யெல்லாம் இது காறும் இயன்றவரையிலும் வேரறுத்ததும் உங்கள் வலியைக் கொண்டேயாம். ஆதலால் உங்களையெல்லாம் துணையாகக் கொண்ட எமக்கு இனிப்பகையாக எழுந்து எம்மை மேற்கொள்ளவரும் வலியுடையார் இல்லை யென்றே கூறலாம். ஆயினும், சிறியதொருபகை உளதென்பதிலும் ஐயமில்லை. எள்ளளவு பகை யிருப்பினும், அதனை வேரறக் களைந்துவிடுவதே விவேகம். பொல்லாத நச்சுமரத்தை முளைப் பருவத்திற் கிள்ளி யொழிப்பது எளிது. அதுவளர்ந்து பெரிதாகுங்காற் கோடரியையுந் தகர்க்கத்தக்க வலிபெற்றோங்கிவிடுமென்பது அநுபவம். சிறியபாம்பினது நஞ்சினால் பெரிய யானைகளும் உயிர்விடுகின்றன வன்றோ. திக்கு யானைகள் தமது கொம்புகளை மார்பிற்போக்கித் தூக்கவும் அசைவுறாது நின்று அக்கொம்புகளை யொடித்துத் தன்மார்புக்காபரணமாக்கிய இராவணனையும் அவன் கிளையையும் வேரொடுகளை

ந்தவர்கள் அற்பராரும் வானரருமன்றே. ஆதலால் அற்பராகிய விவேகனுதிபகைவரை அத்தன்மையரென் றெண்ணிச் சோம்பியிராது அவர்களைத் தொலைத்தற்கேற்ற உபாயங்களைத் தேடுதல் நம்மெல்லோருக்கும் ஒத்தகடனாதலால் முன்னரோ உங்களுக்கு எச்சரிக்கத் துணிந்தேம் என்ருன்.

இதுகேட்ட காமன் எழுந்து நின்று கரங்களைக்கூப்பி வணங்கி, ஐயனே, நீ யாதுகட்டளையிடுகினும் அதைத்தடையின்றிச் சிரசினுமேலேற்றுச் செய்வதற்கே யாமெல்லோரும் இங்கேதிரண்டு நிற்கின்ருேம். உனது சேனைகளாகிய எங்களிலொருவனுக்குப் பிரமவிஷ்ணுக்கள் தாமும் ஈடாகமாட்டாரோ. இவ்வுலகங்கள் எல்லாம் ஒன்று கூடிவருகினும் எம்மிலொருவனே நின்று ஐயத்தம்பம் நாட்டற்குப் போதுவனென்ருல் வேறு யோசிக்கவேண்டுவ தென்னே! ஆயினும் உன்னுடைய ஆஞ்ஞையின்றி நாமாக ஒன்று செய்தல் தகுதியன்று. அநுமதி தருவையேல் விவேகனுதியரை ஒருகணப் போதில் வென்று வருவோம். விடை தருக என்று மோகராஜனுடைய பாதங்களில் வீழ்ந்தான். இங்ஙனம் வீழ்ந்த காமனைமோகன் ஆசிர்வதித்து எழுந்திருக்கச் செய்து அவனுடைய வீரதீரவசனங்களுக்காகவும் பக்திக்காகவும் அவனைமெச்சி, நன்று! சற்றேபொறு; பதருது இங்ஙனமிரு என்று அவனை ஒருபக்கத்தி லிருக்குமாறு செய்துவிட்டு, முதற்கண், அகங்காரனை அழைத்து, அவனுக்கு ஆடையாபரணங்களும் வாகனுதிகளும் வேண்டிய திரவியக்குவைகளும் கொடுத்து, இவற்றைப் பெற்றுக் கொண்டு அவுடதேயஞ் சென்று, அங்கே, கொடையளவிலும், ஆண்மையளவிலும், சிநேகத்தளவிலும், இணையில்லாத குணத்தளவிலும், படையளவிலும் நடையளவிலும், நாகரித்தளவிலும், குலத்தளவிலும், இன்னும் பிறவியல்பளவிலும், உன்னிலும் மேலானவன் இல்லையென்னும்படியாக ஓங்கி

வாழ்ந்து அவ்விடத்திலே பகைவரைவேரறுத்துச் சிற்றரசு புரியக்கடவை யென்று கட்டளையிட்டான். அப்பால், காமனை அழைத்து, அவனுக்கு மச்சக்கொடியும், நிலாக்குடையும், கடற்பேரிகையும், குயிலொலிக்காளமும், தென்றற்றேரும், பேரிருள்யானையும், கிளிவாகனமும், பெண்சேனையும், பூங்கணையும், கருப்புவில்லும், ஏனையபிறவும் வரிசையாகக்கொடுத்து, இவற்றைப் பெற்றுக்கொண்டு உனதுதேவியுடன் காஞ்சிக்குச்சென்று, நிருபகன் உலகத்திலே தலையெடுக்காவண்ணம் அங்கிருந்து அரசியற்றக்கடவை என்று ஆஞ்ஞாபித்தான். அப்பால், கோபனை அழைத்து ஆசிகூறி அவனுக்கு, நெறுநெறெனக் கடிக்கும் பல்லுப்பறையும், தீயபார்வையாகிய அம்பும், நெறிக்கின்ற புருவமாகிய வில்லும், நெடுமூச்சாகிய தேரும், குறுவியர்வையாகிய அங்கியும், தீயசொல்லாகிய வாட்படையும், உரப்புகின்ற ஒலியாகிய வெற்றிச்சங்கமும் இன்னபிறவும் பரிசாகக்கொடுத்து, உனதுதேவி முதலாயினரோடும் யவனதேசஞ் சென்று அத்தேசத்தை உறைவிடமாகக் கொண்டு, மூவுலகங்களிலும் உனது அதிகாரத்தைச் செலுத்தி வாழக்கடவை என்று விடைகொடுத்து அவனைப்போக்கிவிட்டான்.

அதன்பின்னர், லோபனை அழைத்துப் பிரியவசனம் பகர்ந்து அவனுக்கு வரிசையாக, கையிற் பொருளிருந்தும் எனசெய்வேன் ஒன்றுமில்லையே என்னும் இரப்பொலியாகிய பறையும், தாங்குகின்ற சுமையாகிய கிரீடமும், கடல்தாண்டிப் பொருள் தேடுதற் கேதுவான மரக்கலமாகிய தேரும், பிச்சையாகிய உடைவாளும், இருகால்களாகிய குதிரையும், இன்னனபிறவும் கொடுத்து உனது தேவியாகிய ஆசையோடும் கேரளதேசஞ் சென்று அத்தேசத்தைப் பதியாகக்கொண்டு எவ்விடத்திலும் விராகனும் விரத்தியும் ஒதுங்கவொட்டாது தடுத்து வாழக்கடவையென்று வாழ்த்தி விடைகொடுத்தான்.

பின்னர் டம்பனைக்கூவிப் புகழ்மொழி கூறி, அவனுக்கு, வீறாகியயானையும், சிங்காரமாகிய தேரும், பொய்யாகியவில்லும், வஞ்சமொழியாகிய பாணமும், கபடவொழுக்கமாகிய குதிரையும் வேறுபலபொருளும் வரிசையாக வழங்கி, நீயும் உனது வஞ்சனையாகிய பத்தினியும் உனது புத்திரனாகிய அசத்தியனும் காசிநகரஞ் சென்று அங்கிருந்து பகைவரை மேலிடவொட்டாது அடக்கி வாழ்கவென்று விடைகொடுத் தனுப்பினான்.

அப்பால் மதனை அழைத்து, அவனுக்கு, களிப்பாகிய குதிரையும், மதியாதவெடித்த சொல்லாகிய பறையும், தன்னைமேலாக மதித்தொழுகு மொழுக்கமாகியகுதிரையும் பிறவும் வரிசையாகக்கொடுத்து, நீயும்மறதியாகிய உன்தேவியும் கோதாவிரிக்கரையை யடைந்து அங்கிருந்தபடியே உலகெலாங் கோலோச்சி அடக்கனவோ ரோடுமடக்கி வாழக்கடவை யென்று வாழ்த்தி அநுமதிகொடுத் தனுப்பினான்.

அவன் நீங்குதலும், அனத்தனை அழைத்து, அவனுக்கு, கேடுவருவது சுதரிசனமாயினும் மேலோருடன் எதிர்த்தலாகிய யானையும், என்னபடுகினும் குரங்குப்பிடி போலப்பிடித்தலாகிய கொடியும், தொடர்ந்ததொருகாரியத்தை இடையிலே உயிர்நசியவருகினும் தொடர்தலாகிய குதிரையும் பிறவும்கொடுத்து, உனது தேவியாகிய கெடுதியுடன் கன்னடதேயஞ்சென்று அங்கிருந்து உலகெங்கு முனதடிக்கீழாக்கி, அற்புதயன் பிராணாயாமன் முதலிய பகைவரை ஜெயித்து விளங்கக் கடவையென்று மங்களாசரணை செய்து விடையீய்ந்தான்.

அப்பால், மச்சரனை அழைத்து, அவனுக்கு, பிறருடைய நலங்களை யெடுத்திகழ்தலாகிய பறையும், பிறர்வாழ்ப் பொறாமை யெய்துதலாகிய அம்பும், சபையிலே பிரவேசிக்கின் அங்குத் தரிக்காமையாகிய குதிரையும், ஒரோ

ருகவலையை மனத்திடைவைத்துத் திரிதலாகிய முக்காடும் பிறவும் வரிசையாகக்கொடுத்து, நீயும்உனது பத்தினியாகிய அசூயையும் மராடதேயஞ் சென்று, அங்கிருந்து கொண்டு உலகெங்கும் உனது பலத்தை வியாபிக்கச்செய்து, சந்தோஷனையும் மகிழ்ச்சியையும் தலையெடுக்கவொட்டாது அடக்கிவாழக்கடவையென்று ஆசிகூறி இருவரையும் அனுப்பினான்.

அதன்பின்னர், வயிரனை அழைத்து, முகந்திருப்புதலாகிய குதிரையும், முறுகிமனங்கறுத்தலாகிய குடையும், நன்று! நன்று! ஆகட்டுமென்றச்சுறுத்தலாகிய பறையும், பிரதிக்கினையாகிய கொடியும், அடிக்கடி தலைதுளக்குதலாகிய சாமரமும் பிறவும்வரிசையாகவழங்கி, நீயுமுனது அமரியாதையாகிய மனைவியும் அக்கிரமன் என்னும் புத்திரனுமாகக் கிராதநாட்டுக்குப்போய் அங்கிருந்து உலகிலே சமதிருட்டி நியாயன், அவிரோதன் என்போருடைய வலியைஅழித்துப் புகழ்பெற்று வாழ்கவென்று விடையளித்தான்.

அப்பால் மானனை அழைத்து அவனுக்கு, நல்லோரையேனும் வணங்காத உறுதியாகிய மகுடமும், அவரைக்காணின் எழுந்திடாமையாகிய பீடமும், தன்னை எவர்தொழுகினும் அவரைத் தான்தொழுவ தின்மையாகிய கங்கணமும், துணிவாகிய கூர்வேலும்,இளகாமையாகிய யானையும், இறுமாப்பாகிய தேரும், இன்னோரன்ன பிறவும் வரிசையாக வழங்கி, நீயும், உனது பாரியாகிய வெகுமதியும் சோமநாதபுரஞ்சென்று அங்கிருந்தபடியே தாந்தியையும் தமனையும் மேலிடவொட்டாது அடக்கிச்சிரஞ்சீவியரா யிருக்கக்கடவீர் என வாழ்த்திவிடை கொடுத்தான்.

பின்னர், சங்கற்பனைக்கூவி அருகில் நிறுத்தி, அவனுக்கு, அற்பரைக்காணினும் அவர்க்குத் தாழ்தலாகிய மகுடமும், புறத்தேயுள்ளவர் தூற்றுகினும் அதனைச் சகித்துந்

தேட்டலாகிய பொன்னுபரணமும், பகைவரிடத்தும் தனது குறைகூறப் புகுதலாகிய பேரிகையும், குறிக்குஞ் செய்கைகளை முடிக்குமியல்பின்மையாகிய குதிரையும், பிறவும் வரிசையாகக்கொடுத்து, நீ உனது தேவியாகிய கற்பனையோடு கூர்ச்சரதேயஞ் சென்று, அங்கிருந்துதானே பகைவராகிய நிருவிகற்பனையும் நிலைமையையும் தலையெடுக்கவொட்டாது அடக்கி ஆஞ்ஞாசக்கரஞ் செலுத்தக் கடவையென்று விடை கொடுத்தான்.

அதன் பின்னர், விகற்பனை அழைத்து, அவனுக்கு வரிசையாக மண்டலம், யானை, குதிரை, சிவிகை, மகரகுண்டல முதலிய ஆபரணங்கள், பொற்கிரீடம், பெண்கள் சேனை என்னு மிவற்றின்மேலேயே கண்ணுங் கருத்துமாக விருத்தலாகிய மனோராச்சியத்தைக் கொடுத்து, நீயுமுனது தேவியாகிய யோசனையும் பாலனாகிய வெகுமுகனும் உனது தந்தையிடஞ்சென்று அங்கிருந்து பகையறுத்து வாழ்க என்று விடைகொடுத்தான்.

அதன் பின்னர், சந்தேகனை அழைத்து, நிலையின்மையாகிய தேரும், நீங்காமயக்கமாகிய யானையும், உணர்வில்லாமையாகிய வாட்படையும், தாயை யொத்தவர்களிடத்தும் போர்புரிகின்ற வரமும் ஏனையபிறவும் வரிசையாகக் கொடுத்து, "நீ யுனது மனைவி அசித்தி, மைந்தன் கலக்கன் என்பவரோடு கொங்கண நாட்டுக்குச் சென்று அங்கிருந்து விசித்தி, நிச்சயன், ஐயுறன் என்பவரைத் தலை யெடுக்கவொட்டா தடக்கிவாழக்கடவை" யென்று அவனுக்கு விடைகொடுத்தான்.

அப்பால் தாமதனை வரவழைத்து, அவனுக்கு, நியதியின்றி எந்நேரத்தினும்எவ்விடத்தினும் நித்திரைசெய்வதாகிய கருமமும், குறட்டையாகியவாத்தியமும், கனவாகிய கூத்தியரும், உடல் புரட்டுதலாகிய தேரும், பெருமூச்சாகிய குதி

ளையும், உடம்பிலேல்குத்துகினும் உணரா தின்புறுதலாகிய யானையும், வரிசையாகக் கொடுத்து, உனது தேவியாகிய சோம்பியையும் கன்னியாகிய நித்திரையையுமுடன் அழைத்துக்கொண்டு பாண்டிநாட்டுக்குச் சென்று, அங்கிருந்து சத்துவனையும் அவன்தேவி புனிதையையும் மேம்படவொட்டாது அடக்கி வாழக்கடவையென்று விடை கொடுத்தான்.

அதன்பின்னர், இராசதனை வரவழைத்து, அவனுக்குக் கொண்டதொரு நெருங்கிய சிநேகத்தையும் ஆராய்வின்றி மறப்பதாகிய கொடியும், மனத்திலே யாரையும் மதியாதிருப்பதாகிய வாட்படையும், எடுத்தகருமத்தை விடாது முடிக்கும் ஊக்கமாகிய தேரும், இனியவசனங் காதினுற் கேட்கப்படுகினும் அலட்சியஞ் செய்வதாகிய யானையும், பிறவும் சிறப்பாகக்கொடுத்து, உனது தேவியாகிய முயற்சியோடும் புத்திரனுகிய உத்தியோகனோடும் கன்னடதேசஞ்சென்று அங்கிருந்து சத்துவன் விராகன் விரத்தி முதலாயினரை அடக்கி வாழக்கடவையென்று கட்டளையிட்டான். (உத்தியோகன்-காரியன்.)

இதற்கிடையில் முன்னே அனுமதி கொடுத்தனுப்பிவிட்ட தாமசனுடையஇளையபுத்திரியாகிய அசிரத்தையையும் இராசதனுடைய புத்திரியாகிய முயற்சியையும் மீளவரவழைத்து அவர்களுக்கேற்ற வரிசைகள் கொடுத்து, நீங்கள் இருவீரும் சத்துவனுடைய புத்திரியாகிய சிரத்தையுடைய கருவத்தையடக்கி எந்நாட்டிலும் வியபிசாரத்தையே பெருக்கவழி தேடுவீர்களாகவென்று புகழ்ந்து தைரியவசனம் பகர்ந்து விடைகொடுத்தான். முயற்சி எனினும் சிரத்தை எனினும் ஒக்கும்.

அப்பால், அதன்மனையழைத்து, அவனுக்கு, புலன்களை நியதியின்றிச் செலுத்துதலாகிய தேரும், முறைகேடாகிய மதயானையும், நல்வழியிற் செல்லாமையாகிய குதிரையும்,

நாவிலேவரத்தக்க எவ்வகைக்கொடிய சொல்லையும் சொல்லுதலாகிய பறையும் வரிசையாகக் கொடுத்து உனது தேவியாகிய அதோகதியையும் மைந்தனாகிய துக்கனையும் சேர்த்துக்கொண்டு கடற்கரையூர்களுக்குச் சென்று அங்கிருந்து தருமனையும் சுகனையும் தலையெடுக்க வொட்டாதடக்கி வாழ்கவென்று கட்டளையிட்டான்.

அப்பால் அநாசாரனை அழைத்து அவனுக்கு அநேகமுகமன்கூறி, நீ உனது தேவியாகிய அகீர்த்தியால் உபேட்சையைவென்று, உனது மகனாகிய விடயசங்கனால், அகமுகனையடக்கி, உனதுமகளாகியமிச்சாதிட்டியால் ஆஸ்திகனை ஒடுக்கி, உனது வலியால் சுசீலனைமடக்கி ஏழுலகும் அஞ்சுமாறு கோலோச்சி என்பக்கத்திலேயே எந்நாளுமிருந்து வாழக்கடவையென்று விடைகொடுத்தான்.

அப்பால், கலியனையழைத்து, நீ கள்விற்போர்மனையிலும், சூதாடுவோரிடத்தும், விலைமாதரிருக்கும் சேரியிலும் வாசஞ்செய்யக் கடவையென்று வாழ்த்தியதுமன்றி, நீ ஆசாரனை விஞ்சவிடாது காப்பாயாக, உன்மனைவியாகிய கபடி மைத்திரியைத் தலையெடுக்காமல் காப்பாளாக, மனநிலையை உன்மகன் சஞ்சலன்கொல்வானாக என்றும் கூறித் தன்பக்கத்திலிருந்து காலக்கழிவு செய்யுமாறு பணித்தான்.

இவ்வாறே, மோகராஜன் மற்றவர்களுக்கும் தகுதிக்கேற்பவரிசைகள் கொடுத்து அவரவர்க்கும் தனித்தனியே வாசஸ்தானமும், பகைக்குறிப்பும், கருமங்களும் காட்டி விடையீந்தான். விடையீந்தமாத்திரத்தில் யாவரும் அவன் சொல்லைச் சிரமேற்சூடி அவன்பாதங்களை வணங்கி அவ்விடம்விட்டுத் தத்தமக்குரிய ஸ்தானங்களுக்குச் செல்வாராயினர்.

அப்பால் மோகவேந்தன் தனது தேவியாகிய துன்மதியினுடைய அந்தப்புரத்துக்குச் சென்று அவளை இனிய வச

ணங்களாற் றன்வயப்படுத்தி, அவளைப்பார்த்து, என் அன்பிற்சிறந்த அன்னமே, உன்னையன்றி எனக்குயிர்த்துணையாகவுள்ளவர் பிறரில்லை. நானிங்குக்கூறப்போகும் வார்த்தைக் குடன்படுவையேல், நமதுகுலம் ஆலவிருக்ஷம்போல் ஓங்கிப்பரந்து விளங்குமாதலால், நீயதற்கு உடன்படுதல் கடன். கற்பிற்சிறந்த பெண்மணிகள் தமது நாயகரது கேள்விக்கிசைதல் இயல்பேயன்றோ. ஆதலால் உனது கருத்துயாது என்றுகேட்க, அவள், என்பிராணநாயகரே, நீர்கட்டளையிடுவதற்கு யான் மறுக்கவும் வல்லேனோ? மறுப்பேனாயின் யான் உமக்குப் பத்தினியாவ தெங்ஙனம்! சிந்திக்காது உமதுகருத்து யாதெனவருளுக என்றாள். அதுகேட்டமோகன், அன்னமே, பாஷண்டவிஞ்சை யென்னுமொரு கன்னிபால் என் ஆசை செல்கின்றது. அவளையான் வதுவைசெய்ய நீ ஒருப்படுதல் வேண்டும். அதுவே உன்னிடம் யான் கேட்பது என்ன, அவளும் நன்றுஎன்று சம்மதித்தாள். அவ்வாறே அப்பாஷண்டவிஞ்சை யென்பாளிடம் அசிரத்தையைத் தூதுபோக்கி அவள் கருத்தை யுணர்ந்து அவளையும் வதுவை செய்து அவள் வயிற்றில் அஞ்ஞான் என்னுமொரு புத்திரனைப் பெற்றான். அப்புத்திரன் முப்புரதகனத்துக் கெழுந்த தீயைப்போலவும், மருந்துக்கடங்காதோங்குகின்ற பிணியைப்போலவும், உயர்ந்தவர்க்கிடர் புரிகின்ற தீயவர்களுடைய பழியைப்போலவும், நாடோறுமோங்கி வளர்வானாயினான். இங்ஙனமே தனது மரபுங்கிளைகளும் ஓங்க உலகெங்கும் பிறருடைய பெருக்கங் குன்றுவித்து வருகின்ற மோகவேந்தன் இவ்வைபவங்களாலே தன்னை மறந்து தனிக்கோலோச்சி வருவானாயினான்.

அவித்தியாபுரச்சருக்க முற்றிற்று.

Valluvarkal

## விவேகன்வனம்புகுசருக்கம்.

இப்படியிருக்கையில், காமன்முதலிய சேனுவீரரும் அவருடைய படைகளும் பூமியின் கண்ணேயுள்ள புண்ணியத் தலங்க ளெங்கும்போய்,ஆங்காங்கும் க்ஷேமத்தோடு வாசஞ் செய்திருந்த விவேகனுதியரை எதிர்த்துச் சாடி அவர்களிருந்தவிடங்களில் அவர்கள்பேருங் கேட்கப்படாவண்ணம் ஒட்டிவிட்டார்கள். அவர்கள் ஓடவே, நல்லதாகிய தருமம் நடுங்கியது; பெரிதாகிய தவம் ஒடுங்கியது; ஞான நெறி மயங்கியது; ஒழுக்கங்குன்றியது, எண்வகைப்பட்ட யோகமும் பொன்றியது; பரிசுத்தமாகிய வேதமும் எண்ணில்லாத புராணங்களும் தலைகுனிந்தன. சமன், தமன், உபசாந்தி, தாந்தி, சிரத்தை, மைத்திரி, உபேட்சை, முதிதை என்னு மிவர்களெல்லாம் நிலைகுலைய, மங்கையர்கள் கற்பிழந்து குடிச்சிறப்புப் பொன்றப்பெற்றனர். சத்தியம் அடியோடு குடிபோனது; பொறுமையென்பது முற்றுமற்றெழிந்தது; உயர்குலமென்பது தன்குலமுறையினின் றிழுக்கியது; அறிஞர்கள் மனவுறுதியழிந்தது; வேள்விகள் எல்லாம் கலக்கமெய்தின. துறவிகளுடைய மனம் பம்பரம்போற் சுழன்றது; தேவருலகமும் குலைகுலைந்தது. இவ்வாறே உலகமெல்லாம் அழலிலிட்டதளிர்போலச் சத்துருக்களது கொடுமையால் துன்பம் மீதூரக்கண்ட விவேகன் சகிக்கவாற்றுதவனுய், துரியோதனுதியரால் துன்புறுத்தப்பட்ட பாண்டவர் அத்துன்புக்காற்ருது வனம்போயுழன்றது போல்ஒருதனிவனத்துக்குச்சென்று அங்கேதங்கியிருந்தான். அப்போது, அவனுடைய மந்திரிகளாகிய இயமன், நியமன், ஆதனன், பிராணுயாமன், பிரத்தியாகாரன், தாரணன், தியானன், சமாதி என்னும் எண்மரும், நிரூபகன், பொறையன், சந்தோஷன், சத்தியன், தருமன்,

அடக்கன், நிச்சயன், சாந்தி, தாந்தி, சமன், தமன், மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை முதலிய ஆண் பெண் என்னு மிருபாலாரும் அவ்வனத்துக்குப் பதைபதைத்து ஓடிவந்து, அவன் பாதங்களில்வீழ்ந்து ஐயனே! ஐயனே! நாம்பட்டபாடு சொல்லப்படுமோ! நினைக்கப்படுமோ! அம்மம்ம! புலிக்காட்டிலகப்பட்டு உயிர்பிழைத்து வந்தோம்! புலிவாய்க்குத் தப்பினேம். ஐயனே! பாவிகளாகிய சத்துருக்கள் எங்களைக் கொல்லாதுகொன்று தேகத்திற்பாதியை உண்டுவிட்டனர். உன்னருளால் உயிர்பிழைத்தோம்; எமக்கு உன் தஞ்சமன்றிப் பிறிதில்லை; எங்கள் மனம் நடுநடுங்குகின்றது, எங்கள் தேகம் ஒடுங்குகின்றது, எம்மைக்காத்தருள் என்று அரற்றினர். அதுகண்ட விவேகன், அஞ்சாதீர் அஞ்சாதீர் என்று தைரியவசனம்பகர்ந்து அவர்களைப் பக்கத்திலே யுட்காருமாறு பணித்துத் தேற்றினன். அப்போது அவர்கள், விவேகனைப்பார்த்து, ஐயனே, நீ எமக்கரசனாகவிருந்தும் எம்மைக்காவாது இவ்வனத்துக்கு வந்து தனியிருத்தல் தகுமா? இருளைக்கண்டு பரிதி ஒளிப்பதுமுண்டா? பெரியசமுத்திரத்திடையிலேயுள்ள முத்துப்பவளமுதலியவற்றை ஒருபடகு சென்று எடுத்துவருவதில்லையா? ஒருசிறிய தீப்பொறி உலகங்களையெல்லாம் அழிக்கவல்லதாக வில்லையா? சத்துருக்கள் சேனைபெரிதாயினென்? வல்லவனாகிய உன்னைத் தலையாகக்கொண்டு நாமெல்லோருஞ் செல்லுவோமாயின் மோகனுடைய சேனையை ஒருநொடியிலே பொடிபட ஊதாதுவிடுவோமா? கொள்கொம்பின்றிப் பைங்கொடிபடர்ந்து நிலைபெறுமா? வீரர் எத்துணைச்சிறந்தவராயினும் அரசனில்லாப்படை வெல்லுமா? பழிபாவங்களையே வளர்ப்பது தொழிலாகக்கொண்ட மோகனையும் அவன்தேவி துன்மதியையும் உயிர்வாங்காது விடுவோமாயின், குயில்கூவாமைகண்ட காக்கை, நமக்கும் குயிலுக்கும் பேதமென்னவென்று கருவந்தலைக்கேறி நிமிர்

வதுபோல நிமிர இடமாமன்றே. உனது தந்தையாகிய மானதன், தன்புத்திரர்யாவரும் சமமெனமதிக்காது, மோகனையரசாளவைத்து, உன்னையும் உனதுதாயையும் குற்றமின்றித் தள்ளிவிட்டது தகுதியாமோ? இவற்றையெல்லாம் எண்ணாது நீவாளாவிருப்பது உனக்கழகன்று என்று கூறினார்கள்.

அதுகேட்ட விவேகன், பாம்பு தன்னைப்பாலூட்டிவளர்த்தவர்க்கு விஷத்தையே கொடுப்பதுபோலத் தீயவனாகிய,மானதனுக்கு, உன்தந்தையை நீ சிறையிலிட்டது பெரும்பாவமென நான் தருமநெறியை எடுத்துக் கூறப்போக, அவன் எனக்கு முங்களுக்கும் இத்தீமைகளைச் செய்தான். தருமநெறியை எடுத்துக்கூறியதொரு குற்றமேயன்றி வேறுநான் யாதுகுற்றம் அவற்குச் செய்தேன்! அதற்காக இத்துணைத் தீமையெல்லாஞ் செய்தும் இன்னும் திருப்தியடையாதவனாய் மேலும் விரோதஞ்செய்ய வகை தேடுகின்றான். எத்துணைத் தீமைதான் செய்யினும், மானதன் எனது தந்தையாதலின், அதற்கு மாறாக நான் செய்யத்துணிவது தருமமன்று. தருமநெறியைக்கடந்து ஒழுகுகின்ற அரசருடைய வாக்கைஎவர் ஒப்புகின்றனரோ அவரோ செல்வம் பெற்றவராவர். அவன் வாக்கைச்சரியன்று என்று மறுப்பவர்யாரோ அவர் தப்பாது உடனே கேட்டையடைவர். பித்தர்க்குத் தங்குணம் நூலினும் சிறந்ததன்றே. ஊனைப்புசிப்பதாகிய புலிக்குத் தருமநெறியைக் கூறிக்கொலைசெய்தல் பாவமென்றால் அதனைஅது அங்கீகாரஞ் செய்யுமா? ஆதலால் என்னைக்கொன்றாலும் தீயிட்டுக் கொளுத்தினாலும் நான், பூர்வத்திலே தேவர்கள் திருப்பாற்கடலில் மந்தர கிரியையிட்டுக் கலக்கிக் கடைந்தபோது அப்பாற்கடல் எவ்வாறு பொறுமையோடிருந்ததோ அவ்வாறு பொறுமை செய்வேனேயன்றித் தந்தைக்குத் தீங்குசெய்யத்துணிவதில்லை என்றான். இவற்றையெல்லாம் கேட்டிருந்த இய

மன்முதலிய எண்மருள் ஒருவனாகிய நியமன் என்னும் அமைச்சன் எழுந்து விவேகனைக் கைகூப்பித் தொழுது அவன் முகத்தைநோக்கி, எமது வேந்தனே, அடியேன் கூறும் மூடவாக்கியங்களை இகழாது கேட்டருளுமாறு பிரார்த்திக்கிறேன். குரு, அரசன், அன்னை, பிதா, தமையன் என்னும் பஞ்சகுரவரும் தாம் குரவராயினரோ என்னும் பெருமிதம்பற்றி, இதுதக்கது இதுதக்கதன்று என்னும் உணர்வின்றி, பொறுத்தற்கரிய பிழைகள் செய்வராயின், அவரைத் தண்டித்தல் கடனெனத் தருமநெறி கண்ட மனு வசனித்தனரன்றோ. தருமநெறிக்கு மாறாகத் தீமைசெய்கின்ற தானவரைவானவர்கோன் போரிலே யொறுத்து வருதல் பண்டைநாளில்மாத்திரமன்று இந்நாளிலும் உண்டன்றோ. அதுதானு! பொறுமையெல்லாந் திரண்டொருவடிவெடுத்தா லொப்பவிளங்கிய தருமர் தமக்குத் தீமைசெய்த கிளையையெல்லாம் அடியோடு போர்செய்து களைந்தகதை பெரும்பாரத மானதன்றோ. அங்ஙனமாகவும், உன்னுடைய பாட்டனைச் சிறையிலிட்டு, உனக்கு முன் தாய்க்கும் துன்பஞ்செய்து, அவ்வளவிலு மமையாது, உலகத்திலேயுள்ள சகலவுயிருக்கு மிடர்செய்து வருகின்ற துஷ்டராகிய மோகனாதியரைப் போரிலடக்காமல், அவர்உனக்குத் தமராயுள்ளாரென்னும் பரிவினால் அவரிடத்துக் கருணைவைப்பையாயின், அவரால் மேன்மேலுந் துன்புறுத்தப்பட்டொழிவதன்றி, அவர்உன்மீது அன்புசெய்வர் என்பதைக் கனவிலு நினையாதிருப்பாயாக. கொடிதாகிய நோயைக் கொடிதாகிய மருந்தினால் அறுத்தாலன்றி அதுகுணமாவதில்லை யென்பது உறுதி. காமனாதிபடைவீரராகிய மாடுலாராமல் அறமென்னும் வேலியிட்டு, தீயவனாகிய மோகன் என்னுங்களையை வேரோடுதுவைத்து, ஐயனே! நின்னுடைய கருணையாகிய வெள்ளநீரைப்பாய்ச்சி, உணர்வாகிய பசியபயிரை மேலோங்குமாறு காத்தாலன்றி, ஆராத

வின்பமாகிய பயனை அநுபவித்தல் யார்க்கும் அரிதரிது. ஆதலால், உனது மாதாவின் குறையைத்தீர்த்து, உனதுபரிசனங்களாகிய எங்கள் குறையையுமாற்றி, உனதுபாட்டனுகிய பெரியவரைச் சிறையினின்று நீக்கி, அவித்தியாபுரத்தையும், அங்கிருந்து அரசுசெய்பவனுகிய மோகனையும் அழித்து ஏனையகுற்றங்களையும் நிவிர்த்திசெய்து மூவுலகத்துக்கும் நீயே ஆதாரமாகும்வகை யருள்வாயாக என்று வேண்டினுன்.

இங்ஙனம் இரந்துவேண்டிய அமைச்சனுடையநியாயங்கள் எல்லாம் விவேகனுடைய மனத்தை உருக்க, விவேகன் தளர்ந்துபோகும் தருமநெறிகளை மீட்டுநிலை நிறுத்துதல் ஆவசியகந்தானென்றும், மோகன்செய்கின்ற கொடுமைகள் நாகவிஷம்போல அதிகரித்தலால் இனிவாளாவிருத்தல் தகாதென்றும், மோகன்முதலியோரைத் தமரென்று மதிக்காது பகைவராக மதித்து அவரை அடக்குதல் கடன்தானென்றும் துணிந்தான். துணிந்தவழியே ஆண்மைமாதும் அவன்முகத்தில் நடம்புரிந்தாள். அதனைக்கண்ட விவேகனுடைய பரிவாரங்கள் எல்லாரும் ஆனந்தித்தார்கள். விவேகனுடைய மனைவியாகிய சுமதியும் மோகனுடைய கொடியசெய்கைகளைச் சகித்தலாற்ருதாளாய் நாயகன் மனத்தோடொத்துத் துணிந்தாள். அப்பால் விவேகனும் சுமதியும் ஒருவரை ஒருவர்தழுவி அன்புகூர்ந்து இருவரும் யோசனைபுரிந்து இனிச்செயற்பாலதைச் செய்வோமெனத் துணிந்தார்கள்.

விவேகன் வனம்புகுசருக்கமுற்றிற்று.

# விவேகன்மந்திரச்சருக்கம்.

அவ்வாறே விவேகன் தன்னைவிட்டு நீங்காது சூழ்ந்திருப்பவர்களாகிய நிரூபகன், பொறையன், விராகன், சத்தியன், தருமன், சமன், தமன், சமாதானன், சுசீலன், நியாயன், சுகன், இயமன் நியமன்முதலிய எண்மர், என்னும் இவரையெல்லாம்நோக்கி இங்கு வாருங்கள் என்ன அவர்களும் எழுந்து கைகூப்பிக்கொண்டு அவன் பக்கஞ்சேர, அவர்களோடு தானும் எழுந்து ஒருதனியிடஞ்சென்று அங்கவர்களை இருக்கச்செய்து தானுமிருந்து, அவர்களுடைய முகத்தைத் தண்ணியகண்களோடும், மலர்ந்தமுகத்தோடும் பார்த்து, என்னுயிர்க்கு உயிராகியும், நட்பராகியும், பகைவரைவெல்லற்கேற்ற படைவீரராகியும், வாழ்வாகியும், உறவினராகியும், பரிவாரங்களாகியு மிருக்கின்றவர்கள் நீங்களே. நீங்களேயன்றி எனக்கு உறுதியாயுள்ளவர்கள் வேறுயாருமில்லை. ஆதலால் நான்சொல்வதைச் சற்றேகவனித்துக் கேளுங்கள்: நானோ தருமநெறிகூறப்போய்த் தந்தையால் வருத்தமுற்றுத் தளர்ந்த பிரகலாதனையொத்தேன். இன்னும் மோகனால் வருத்தப்படுகின்றமையை நோக்கினால், தமையன் போவென்றுதள்ளப் புறஞ்சென்ற விபீஷணனையு மொத்தேன். ஆயினும், அவர்களைப்போல நானுமுய்தற்குத் தருமநெறியுண்டு. என்னைப்பெற்றெடுத்த தாயினும் இனியவராகிய மூதாதையோ தீயவராகிய மோகனுதியரால் பிணிக்கப்பட்டவராய்ச் செயலற்றடங்கினராதலின், என் துயரைப்போக்கும் வல்லமையுள்ள பிறர் ஒருவர் வேறிலர். தீயதொழிலால் வாழ்கின்ற வாழ்விலும், வறுமையே மேலானதென்று நன்குணர்ந்த பெரியோர் துணிவர். புல்லரோ, இழிதொழிலால் வாழ்வதே மேலென்று நீதிதப்பித் துணிவர். இவ்விரண்டும் நம்மிடத்

தும் நம்குலத்தவர்களிடத்தும் கண்டு கொண்டோம். இனி வேறு திருஷ்டாந்தம் வேண்டா. ஆதியிலே மோகன் எங்களைத்தள்ளி எங்களுக்கரசு கொடாமல் மறுத்தவக்காலத்திற்றானே அவனோடு போர்தொடுத்து அவனை அடக்காமல், இப்போது அவன் அதிகரித்துவிட்டபின்பு அவனைவெல்லமுயலுதல், நாகத்தால் தீண்டப்பட்ட அக்கணத்திலே விஷத்தைத்தடுக்க முயலாமல் விஷம் தலைக்கேறிய பின்னர்த் தடுக்கப்புகுந்து மந்திரிப்பதை நிகர்க்குமன்றோ. ஆங்காரனுடைய வீரமும் வெற்றியுமோ அண்டர் அண்டத்தையும் அளந்துநிற்கின்றன. புஷ்பபாணியாகிய காமனுடைய விஜயமோ எந்தப்புவனத்தையும் விழுங்கி ஏப்பமிட்டு நிற்கின்றது. தீயவனாகிய கோபனுடைய பலமோ திரிலோகங்களிலுள்ளார் யாவரும் அவன் சேனையாயினாரென்றால் நடுங்கத்தக்கதே. லோபன் ஏவலைக்கேளாதாரில்லையென்றால் அவன்பலமும் பெரிதே. அப்பால் அவன்மகன் டம்பனுக்கோ உடம்பெடுத்தோர் எல்லாரும் ஆளானார்கள். மதனோ உலகமெங்கும் மூடிக்கொண்டான். மச்சரனோ தன்வலியை உலகெங்குஞ் செலுத்தி மேலுமிடமெங்குளதெனத்தேடுகின்றவனாயினான். கலியனோஉலகத்தைக்கையிலடக்கினான். மானனுக்குத் தலைவணங்காதார் உலகிலுமில்லை வானிலுமில்லை. அதன்மனை எதிர்க்கவல்லவர் எவ்வுலகத்திலுமில்லை. அசத்தியனுக்கு இடங்கொடாதவர் நாவசைத்தல் இயலாது.

இத்தகையரா யிணை யற்ற அப்படைத் தலைவர்களுள் ஒருவனுக்கே இவ்வுலகம் போதாது. அவர்களுக்கு மேல் மோகன் என்னும் கொடியசூரனுமிருக்கின்றானன்றோ.

ஆகையால், இத்துணைச் சூரத்துவம் பொருந்திய பகைவருடைய வலிமையை நாம் அடக்குவதும், நன்னெறிக்கொடியை நிறுத்துவதும், மூதாதையைச் சிறைநீக்குவதும்

எவ்வாறு என்று விவேகன் தனது அமைச்சர் முதலாயி னோருடைய உள்ளக்கருத்தையும் ஆண்மையையும் அறியு மபறு விஞவினன்.

அதுகேட்ட நிரூபகன் துணுக்கெனவெழுந்து விவேக னுடைய பாதாம்புயங்களை வணங்கி, சகலகாரியங்களையும் தெளிந்து முன்னமோ அறியத்தக்க நீ இங்ஙனம் சூழ்ச்சி செய்யத தலைப்பட்டது பெருஞ்சித்திரமாயிருக்கின்றது. நான் சூழ்ச்சி சொல்லப் புகுவது, ஆயிரங் கிரணங்களையும் விரித் துப் பிரகாசிக்கின்ற சூரியன் முன்னே ஒருதீபத்தை ஏற்றி வைத்தலும், ஊழை அறிந்து அதின்படி விதிப்பவனுகியபிர மதேவனிடஞ் சென்று இன்னவனுக்கும் இன்னவளுக்கும் விவாகமெனச்சொல்லுதலும்போலுமாயினும், என்புன்மொ ழிகளைச்சிறிது கிருபைகூர்ந்து கேட்டருள்வாயாக, பல்லா யிரமெலி திரண்டு வருமேனும் அவை ஒரு விஷநாகத்தின் மூச்சுக்கு ஈடாகா. மலைபோலவிறகுகள் குவிக்கப்படுகி னும் அவை ஒருதீப்பொறியாற் சாம்பராகும். உலகத்தி லே அறிவுடைய பெரியோர் தாம் வறியராயினும் பொருளு டையவரொன்றே மதிக்கப்படுவர். செல்வமும் சீருமுடை யவர் அறிவிலாதவராயின் அவையுடையவரல்லரொன்றே மதிக்கப்படுவர். ஒலித்து அலையெறிகின்ற சமுத்திரத்தை யும் வானளாவி யோங்கிநின்ற விந்தமலையையும் அடக்கின வர்சிறியஉருவத்தினையுடையஅகஸ்தியரன்றே.வேந்தனே! உனக்குத் துணைவராகிய நம்போலியர்பலமும் வேண்டு மோ. எத்தனைபேர் வந்தாலும் உன்முன்னே நிற்குமா ற்றல் உடையவராவரோ! ஆதியிலே திரிபுரதகனஞ் சிவ பெருமான் செய்தது சிறுநகையாலன்றே. மோகனுடைய யடக்குதல் ஆவசியகந்தானென்று உன் திருவுளத்தில் எண்ணுவையாயின், மோகனுடைய மாயவினைகளும், வீர மும், செருக்கும், சேனையும், செல்வமுமாகிய வெல்லாம் ஏயென்று சொல்லுமுன்னே நாசமாய்விடுமென்றே என்று

சொல்லி மீண்டுந்தொழுது கொண்டு ஆசனத்தில் உட்காந்தான். அச்சமயத்தில் பொறையன் என்னும் அமைச்சன் எழுந்து விவேகனுடைய பாதப்போதைவணங்கி, வேந்தனே நான் சொல்லுகின்றதைச் சிறிது கருணைவைத்துக் கேட்பாயாக. மிக்கபல முடையவரும், பகைவரைக்காலமும் இடமும் பார்த்து வெல்லத்தக்க உபாயங்களை யாராய்ந்து, அதற்குவேண்டும் படைகளோடு சென்றே போர்புரிந்து வெல்லுவார்கள். ஆதலால் போர்புரிதற்கு ஏற்றகாலம் வருமட்டும் பொறுமையோடு வேண்டியசாதனங்களைத் தேடிக்கொண்டு அடக்கமாயிருத்தல்வேண்டும். கடையுகம்வருமுன்னே சமுத்திரமானது தன் எல்லையைத் தாண்டி யெழும்பாதன்றே. இப்போது நாம் செய்யத்தக்கது யாதோவெனில், நமது பகைவர்கள் செல்லாத நல்ல ஸ்தலங்களெவையென ஒற்றராலுணர்ந்து, அந்த நற்றலங்களுக்குக் கற்றுவல்ல சிலரைக்காமியர்களைப்போல் வேஷதாரிகளாக்கிப் போகுமாறு செய்து, அவ்விடங்களுக்கு நமது படையைச் சிறிதுசிறிதாக நாளடைவில் அனுப்பி, அவ்வவ்விடங்களிலும் அப்படையைப் பெருக்கி, ஆங்காங்கு மிருந்தபடியே பகைவருடையதிறத்தை யுணர்ந்துகொண்டு அதன்பின்னர்ப்படையெழுச்சி செய்து போர்புரிவதே தகுமென்கவென்றான். அதுகேட்ட விவேகன் ஆகுகவென்று அவனை உட்காருமாறு கையமைத்து விட்டுச் சந்தோஷமுகத்தோடு அடக்கனைப்பார்த்தான். பார்த்தலும், அடக்கன் எழுந்து வணக்கம்புரிந்து, வேந்தே ! பொறையன் இதுகாறும் சொன்னவைகள் உண்மையே. ஆயினும், ஏககாலத்திலே பதினாறுயிரங் கோபஸ்திரீகளிடத்து இன்பமு நுகர்ந்து கொண்டு தமது காரியத்தளவிலும் கருத்து மறவாதிருந்த கிருஷ்ணனைப்போலப் பலதொழிலைச் செய்து கொண்டு உட்கருத்தைக் குறித்தவொருகருமத்திற் செலுத்தவல்லவர் வேறுயாவருளர்?

முன்னாளிலே, தவஞ் செய்கின்றவர்களும் நியவர்களி ருக்கின்ற, நாட்டிலே புகுந்திருக்க வருங்காலத்தில் மாறு வேடதாரிகளாகியே புகுந்து தங்கருமம் முடிப்பர். வழி முறையாக மதுரக்கனிதருவதாகிய ஒருமரத்தின் கன்றை உவர் நிலத்திற் பெயர்த்துநாட்டினால் பின்னர்நாளில் அத ன்குணமும்பெயரும் வேறுவது இயற்கையன்றோ. கருங்கு யிற்குஞ்சானது பறக்கும்பருவம் வருங்காறும் காக்கைக்கூ ட்டினிடையிருக்கும்போது தனது குரலொலியை மறைத் திருப்பதுபோலப் பின்னாளிலே தமதுகருமத்தை இனிது முடிக்கவேண்டுபவர் உபாயங்களைத் தேடுவது குற்றமாகா தென்று சொன்னான்.

அப்பாற் சந்தோஷன் எழுந்து விவேகனைவணங்கி, ஐய னே, நான்சொல்வதைச் சிறிதுகேள்; பகைவருடனே உற வாயிருப்பவருடைய உள்ளமோ கொடியவுள்ளம். வே ஷமோ மிகவினியது. அங்ஙனஞ்செய்யாத விவேகிகளு மோ மிகச்சிலர். கஜரததுரகபதாதிகளுடனே நவரத்தின கிரீடந்தாங்கி, அளவிறந்த மடமாதருடன் சுகித்து, உலகத் தையு மினிதுகாத்துவந்த சனகன் அவ்வாழ்க்கையிலொரு சிறிதுமகருத்தை நிறுத்தாது பரவஸ்துவையே தியானிப்ப வனா யிருந்தமையை இவ்வுலகத்தில் எடுத்துக்கூறாதவர்யா வர்! தன்னால் ஒருகாலத்தும் அறியப்படாதவர்களே யாயி னும் அவர்கள் சொல்லுகின்ற ஏவல்களை யெல்லாம் விருப் போடுசெய்துவந்தவனும், பலியிடுபவனுடன்கூடி அவனேவ ற்படி காளிமுன் அஞ்சாது சென்றவனும், சிவிகைசுமந்து திரிந்தவனுமாகிய பரதனுடைய உள்ளம் அவற்றின்கட்சிறி தும் தோய்வின்றி யிருந்ததை யார்தாம் அறியார்! ஊழைக் கூத்திக்குப்பிரீதியாகிய பொருள்களையெல்லாம் தேடியீந்த வரும் அவளுடையபணிகளைச் சிரத்தையோடு செய்தவ ரும், அவள் பருகிமிஞ்சியநீரைப் பருகினவருமாகிய சிவ னை அசுத்தன் என்றுசொல்பவர் யாவர்? வேடத்தளவிலே

ஒருவராயும், உட்கருத்தளவிலே பிறருமாயிருக்கின்ற விவேகிகள் அநேகருளர். புளியங்காயுடன் அதன் ஓடு முற்றுங்காறும் ஐக்கமாயிருந்து பின்னர் முற்றியகாலத்துப்பிரிந்து வேறாய்த்தனித்து ஒன்றியுமொன்று திருப்பதுபோல விவேகிகள் ஒழுகுவர். விவேகிகள் மடமாதருடன் கூடி இன்பநுகருகினும் தங்கருத்தை யதிலழுந்தவிடார். நீர்க்குடந்தாங்கிச் செல்லுகின்ற தாதி, வீதியிலே நடனமாடிச் செல்பவளேயாயினும் அவள்கருத்தெலாம் குடத்தின்மீதிருபபது இயற்கையன்றே. பெரியோர் அநேகமடமாதருடன் கூடிவிளையாடினுமென்னை! தாழ்ந்தோர் தவவேடந்தரித்தென்னை! குற்றமில்லாத தூயமனமுடையவர்களுக்கும், அகத்திலே சிறிதும்நன்மையில்லாத இழிந்தவர்களுக்கும் இழிவும் சிறப்புமில்லையன்றே. ஆதலால் மனத்திலே சிறிதும் வஞ்சமில்லாத நம்மனோர் மாறுவேஷதாரிகளாய்ப் பகைவருடைய நாட்டிலேசென்று மறைவாகவிருந்து காலம்வரும்போது நங்கருமத்தை முடிப்பது குற்றமாகாது தகுதியாகவேமுடியும். ஆகவே ஒற்றர்களை நியோகித்து உலகெங்கும்போக்கி எவ்விடங்களிற் பகைவருடைய வலிமை செல்லாதெனத் தேர்ந்து, அவ்விடங்களில் நமது மித்திரர்களைப் போக்கிப் பகைவரை வெல்வதே தகுதியென்று சொன்னான். இங்ஙனம் சந்தோஷன்கூறி அஞ்சலியஸ்தனாய்த் தனதாசனத்தில் உட்கார,விவேகன், வினயசமன் தமன்முதலியோரை நோக்க, அவர்களும் இவ்வகைச்சூழ்ச்சிகளையே சொல்லுவாராயினர். அவைகளையெல்லாங் காதுகுளிரக்கேட்ட விவேகன் மனம்பூரித்து, இனிச்சிறிதுங் காலந்தாழ்க்காது முயற்சிசெய்வதே கருமமென்று துணிந்து ஒற்றரை இக்கணத்திற்றானே அனுப்புகின்றேன் என்று ஏற்றவாறு செய்வானாயினான்.

விவேகன்மந்திரச்சருக்க முற்றிற்று.

# விவேகன்ஒற்றுக்கேள்விச்சருக்கம்.

அவ்வாறே விவேகவேந்தன் தருமன், விசாரன், சத்தியன், அமிர்தசீலன் என்னுநால்வரையும் நோக்கி, இங்குவம்மின் என்ன, அவர்களும்வந்து வணங்கிநின்று எம்மை அழைத்த காரணம்யாதெனத் திருவுளம்பற்றி யருளுகவென்று வேண்ட, விவேகன், அவர்களைப்பார்த்து, நீங்கள் நால்வரும் உலகெங்கும்போய்ப் போர்செய்யுங் காலம்வருமளவையும், நாம்மறைந்திருத்தற்கு ஏற்றபுகலிடம் பார்த்து வந்து எமக்குச் சொல்லக்கடவீர். தருமா! நீ அடர்ந்தவிண்ணுலகத்துக்குப் போகக்கடவை. விசார! நீ பூலோகத்திற்சென்று பார்க்கக்கடவை. சத்தியா! நீ தென்புலஞ்சென்று பார்க்கக்கடவை. அமிர்தசீலா! நீ பாதலத்துக்குப்போகக்கடவை என்று நால்வருக்கும் ஆஞ்ஞாபிக்க, அவர்களும் விடைபெற்று விரைந்து வேடமாறிச்சென்றனர். அங்ஙனஞ்சென்ற நால்வரும் தாந்தாம் போகவேண்டின விடங்களுக்குச்சென்று ஆங்காங்குமுள்ள காரியங்களை யெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெரிந்துகொண்டு மீண்டார்கள்.

மீண்டவர்களுள்ளே, விண்ணுலகஞ் சென்று பார்த்தவனாகிய தருமன் விவேகனிடஞ் சார்ந்து அவன்பாதங்களை வணங்கி; ஐயனே, வைகுந்தமுதலிய வானிடங்களிலே நமது பகைவர்கள் செய்கின்ற தீமை என்னால் எடுத்துச் சொல்லப்படுந் தரத்ததன்று. சொல்லுகின் நாவானதுவெந்துபோம். நினைக்கின் மனமானது சுறுக்கொள்ளும். அங்ஙனமாயின் அவர்கள் செய்கையைச் செவியினாற் கேட்கப்புகினும் தீக்கோலை எடுத்துச் சொருகிக்கொள்வது போலாமன்றோ. வைகுந்தத்திலே நம்பகைவருடைய கொடிய செய்கையை யுட்கொண்டு சகிக்கவாற்றாத விஷ்ணு, கண்

சிவந்து அங்கங்கறுத்து வாய்துவர்த்து இடைச்சேரிசெ
ன்று, நெய் வெண்ணெய் தயிர் பால் எல்லாமுண்டும் ஆற
ப்பெறாது, ஈற்றிலே பாற்கடலிற்சென்று பள்ளிகொள்வா
னாயினானென்றால் மற்றினிப் பேசக்கிடப்பதென்னை!
இனிச்சிவனோ அப்பகைவருடைய கொடுமையால். திரு
மேனியி லொருபாதி தீபோலச்சிவந்து, ஒருபாதிகருகி,
அவ்வளவிலு நில்லாது நெற்றியிலும் தழல்பொங்க, அத
ற்கு மருந்தாகச்சந்திரனைச்சூடினார்; அதனோடுகங்கையை
த்தரித்தார்; அந்தோ! அவ்வளவிலாயினும் அமையப்பெற்
றாரில்லை. அப்பால் பிரமன் தன்னைப்பற்றியதீயால் முன்
னே ஒருசிரம் போகப்பெற்றும், அத்தீதன்னுள்ளே யிரு
ந்து மேலும் வினைவிளைத்தலால் எக்காலத்தும் குளிர்ந்த
பரிசத்தையுடையதாகிய தாமரைப்பூவின்கண்ணே வாசஞ்
செய்வானாகியும், அம்மனஸ்தாபம் நீங்கப்பெற்றானில்லை.
இவைதாமா! வேந்தனே இன்னுங்கேட்பாயாக: நம்பகை
வர்கள், விநாயகமூர்த்தியைப் பாதைவழிதோறும் குடியா
க்குவித்து, நாணமின்றி மருங்கிலே ஒருபெண்ணை அணை
த்துக்கொள்ளச் செய்ததும் போதாது நிருவாணியாகுமா
றுஞ் செய்துவிட்டமோசம் மகாமோசமாயிற்று. அப்பால்
சுப்பிரமணியக்கடவுள் மோகனுடைய தீச்சரங்களால் மெ
ய்கருகிச் சூடாற் நிழலின்றித் துள்ளித்துடித்து ஓடாத
தினைப்புனங்களெங்குமோடிக் குறப்பெண்கள் வாசஞ்செ
ய்கின்றமலையில் ஒருமலைப்பக்கமாகவும் வேங்கைமரமாக
வும் மாறிமறைந்து நின்றகதை பெரியதொரு புராணமா
யிற்றன்றோ. இந்திரன் தனதுடம்பெங்கும் துளைக்கப்பட்
டூலுஞ்கிச் சோர்ந்து மந்தாரநிழல் தேடியுட்கார்ந்தும் தன
துஉடலைப்பற்றிய சோகந்தீரப் பெற்றானில்லை. மீளாதசிவ
பக்தராகிய மார்க்கண்டர்மீதும் கூசாது பாசம்வீசி அவ
ரைத் துன்புறுத்திய காலனைத் காளாலுதைத்துத் தரையி
லே வீழ்த்துமாறு சிவனைத்தூண்டிய கொடியன் நம்பகை

வனுகிய கோபனன்றே. திரிமூர்த்திகளையும் இங்ஙனம் ஆட்டுகின்ற கொடிய பகைவரால் ஏனையர் படும்பாடுகளை எவ்வாறு சொல்வேன்! தேவர்கள் யாவரும் மண்ணிலே மிதிக்கின் மிகச்சுடுமென்னு மச்சத்தால் மிதியாமல் அந்தரத்தில் நிற்பதும், கண்ணுறக்கமின்றி இன்னும் யாதுவருமோவென்று கண்ணிமையாதிருப்பதும், விண்ணுலகத்தைவிட் டிறங்கினுல் வெப்பேறுமேயென்று திகைப்பதும் இப்பகைவருடைய தீமையால் நொந்து வருவதறியாது துடித்தன்றே என்று தான் கண்டவையாவும் ஆதியோடந்தமா யுரைத்தான். இங்ஙனந் தருமன் சொல்லி வணங்கிக்கொண்டு பக்கஞ்சார, சுசீலன் எழுந்து விவேகனை வணங்கி, இறைவனே, யான் பாதலத்தைத் துருவிச்சென்று கண்டதைச் சொல்வேன் கேட்டருள்! மோகனுடைய ஆஞ்ஞா சக்கரத்தில் நின்று ஆடுகின்ற கோபன் காமன்முதலியவர்கள் பாதலத்திலே செய்கின்ற கொடுமையால் நாகராசன் கண்சிவந்து நெடுமூச்செறிந்து மிக்கபயம்பிடித்து இனி உய்யவழியில்லையென்று பூமியின் கீழாகச்சென்று பூமி அவன் சிரசின்மீதுறுத்தப் பதுங்குவானுயினுன்.

கொடியவிஷத்தினும் தீயவர்களுடைய செய்கை மிகக்கொடிது எனஅறிஞர் சொல்வது பொய்யாகுமா? பொய்யாகாது. அதுபற்றியன்றே, சிவனும் விஷ்ணுவும் இத்தீயவர்களினும் சர்ப்பங்கள் மிகநல்லவை யென்றெண்ணி முறையே அவற்றை ஆபரணமாகவும் சயனமாகவும் கொள்ளத்துணிந்தனர். கெட்ட பாதகர்களாகிய மோகனுதியர் கிளர்ந்து பூமி கிடுகிடென்று நடுங்கத் துட்டபாவச் செய்கைகளைச் செய்த கொடுமைக்காற்று நாகலோகத்தராகிய ஆதிசேடன் முதலியவர்கள் பட்டபாட்டை அவர்கள்தாமே சொன்னபோது என் இதயம் பதறியதை என் சொல்வேன்! அருள்தரித்த துரியோதனுதியர்க்கு அன்பு

ளா தந்தையாகிய திருதராட்டிரக் குரூடனெனத்தக்க கொடியமானதனுக்குப் பிரவிருத்தி வயிற்றிலுதித்த திடராகிய மோகனுடையருக்கு நாய ஒளித்து வாழ்தற்கேற்ற ஒரு தேசம் எங்கேயுளது! நங்குலப்பகைவனாகிய கருடனுக்கும் அவன் கண்ணுக்கெதிர்ப்படாதிருக்கின் தப்பலாம்; இவர்களுக்குக் காட்டுப்புவது அரிது அரிது எனபார்கள். அறியாமையென்னும் மிளையகற்றவல்ல சூரியன்போலும் நிருபகளிருக்கவும், காமனுடைய வல்லமை எவ்வுலகிலும் மிகுந்திருக்கக் காலவசேஷமோ என்பார்கள். கோபனுடைய தீமையைப் பொறையன் அடக்காதிருப்பதென்ன ஆச்சரியமென்பார்கள். அகந்தை நாயகனாகிய அகங்காரனைச் சாந்தி கணவனாகிய சமன் வெல்லழிக்கத் தாமதித்திருப்பதென்னை நூதனமென்பார்கள். மச்சரன் உலகத்தைப் பூடுருவிச்சென்று வருத்துகின்ற செய்தியைச் சந்தோஷனுக்கு எடுத்துச் சொல்வார் யாருமில்லையா வென்பார்கள். சுடும் புலைத்தொழிலைச் செய்கின்ற இடம்பனுடைய அக்கிரமங்களை ஐயமல்லானும் மெய்யனும் விசாரிக்கின்றாரில்லையே என்பார்கள். பௌட்டிகனாகிய வயிரன் நாசமாம்படி அவிரோதன் முயலாதிருப்பதென்னை விபரீதமென்பார்கள். ஆளுடையையாகிய விவேகவேந்தனை மோகன் தனதாணைக்குட்பட்ட தாமதன் மகளாகிய நித்திரையைவிடுத்து மயக்கிவிட்டானே! அன்றி அவ்வேந்தனுடைய பத்தினியாகிய சுமதியை வேறுபிரித்து விட்டானே! சூரியன்போல் அவனிருந்தும், பனிபோலும் இப்பகைவர்கள் செய்கையைச் சிந்தியாதிருப்பதன் காரணமென்னையோ அறியோமெனபார்கள். இன்னும் இவ்வாறு நாகலோகத்தார் சொன்னவைகள் ஒருகோடிகோடியுள. அவர்கள் சொன்னவெண்ணம் யான்சொல்லும் வண்ணமன்று என்று சொல்லி முடித்தான். அங்ஙனம் சொன்ன அமிர்தசீலனைச்சுமதி சமேதனாகிய விவேகன் குறுமுறுவலோடு உட்கா

றெனச் சமிக்கைசெய்ய அவனும் உட்கார்ந்தான். அவன் உட்காரவே, யமலோகஞ் சென்றுவந்த சத்தியன் அஞ்சலி யஸ்தனாய் விவேகன்முன்னெழுந்து, ஐயனே, நான்யமலோ கஞ்சென்று கண்டவிந்தைகளைக் கேட்டருள்: காலனும் அவனுடைய கோடி கோடி தூதர்களும் ஞாலமெங்குும் நஞ்செனப்படர்ந்து சாலக்கொடியராகி, விழிகளிலேதீப் பொறி சிந்தச்சினந்து, நீலமேகங்கள்போல் உருக்கொண்டு, கரியநெஞ்சராகிச் சுவர்க்கலோகத்தை யடைந்து அச்சுவர் க்கவாயிலின் பொற்கதவைப் பூட்டிட்டு, இடையிடையே வந்து சேருகின்ற புண்ணியர் சிலருக்கு மாத்திரம் திறந்து, இடங்கொடுத்துவிட்டு, ஏனையர் யாவரையும், சிலரை இள மையிலும், சிலரை ஓடியாடும் பருவத்திலும், சிலரைப்பா டசாலைசென்று கற்கும் பருவத்திலும், சிலரையவ்வனத்தி லும், சிலரை அரிவையரை மணந்தின்பந் துய்க்கும்பருவத் திலும், ஏனையபருவத்திலும், அப்பால் எப்பருவத்திலும் எச்சமயத்திலும், நேற்றிருந்தான் இன்றைக்கிலன், என் னேபாவம் என்றுஉலகம் அதிசயிக்கும்படியாகப் பெண் ணென்றும் ஆணென்றும், பேதமின்றி உயிரைவாங்கிப் பிறிதோருடலிற் புகுத்திக் கொடியநரகிலே வீழ்த்தி, அவ ருள்ளே கொடியபாபிகளைக் கூறுகூறாக வாள்கொண்டு அடிமுதன்முடியீறாக அரிந்தும், அழல்முகத்திலிட்டு வாட் டியும், கடியபாம்பு அட்டை செந்தேள் முதலியன நிறை ந்த குழியிலே தள்ளியும், அக்கினிமயமாகக் காய்ந்து சிவ ந்த இருப்புத்தூணோடு சேர்த்துக்கட்டியும், இவ்வாறு எண் ணில்லாது பேதப்பட்ட நரகவேதனைகளைச்செய்து வருத் துகின்ற தன்மையை எவ்வாறு சொல்வேன்! அங்ஙன ம் வருத்தப்படுகின்ற சீவர்கள் தொகையைக் கணக்கிட வும்போமா! கடற்கரை மணல்தானும் அத்துணையாகாதே யென்று சொன்னான்.

ஐயனே, இன்னுமவர்கள் சொல்வதைச் சிறிதுகேட்டருள். பெண்டுபிள்ளை சுற்றம் பின்னுக்குதவி யெனநினைந்து தருமத்தைச் சிறிதும் நாடாது அவர்பொருட்டுக்கடன்பட்டு எம்பொருளையெல்லாம் இறுத்தோமே யென்பார் சிலர். பெண்டுபிள்ளை சுற்றத்தவர்களே! உண்டீர், உடுத்தீர், உற்றவேளைக்கொருவரும் வந்தண்டீர், அந்தோ உம்மைநம்பி அடைந்தகதி இதுவோ என்பார் சிலர். மாறுபாடாய்க் கொடுஞ்சொருவாகப் பாவி மறங்கூறி வேறுலோகமில்லையென்பதை வினவிக்கெட்டோ மென்பார்சிலர். நீறு கோபி திருநாமம் நெற்றியிலிடாத சமணருடைய நூல்வழிப்புகுந்து திகைத்தோமே என்பார்சிலர். உடம்புகளெல்லாம் ஒருகணத்திற்பிறந்து ஒருகணத்தில் இறக்குமியல்பினவாகவும், அவைகளுக்குப் பாவமும் நரகமுமுண்டோ வென்று புத்தன்சொன்னதை நம்பிக் கெட்டோமேயென்பார்சிலர். பரிசுத்தனாகிய விவேகனையும் வர்ளா உலைத்த மாபாதகரிடம் எமக்குண்டாகிய கன்மக்கொடும் பாவம் சென்று பொருந்துக வென்பார்பலர். பொருளைத்தேடிச் சிறுதொழிற் செலவிட்டதும்மன்றி, உணர்ச்சியற்றுப் பிதருக்குப் பாடுபட்டுறைத்ததெல்லாம் இங்கேவந்து நமக்குப் பலித்ததென்பார்சிலர். இப்படி எம்மைக்கட்டுக் கேக்துவர்க்கியபாவி இன்னுமொரு முறை எம்மைப் பிறக்கவிடின் நாமங்கே செல்லுவோமாவென்பார் சிலர். என்றும் இறவோம்என்றிருந்தோம்; இறந்துபடுவதீதறிந்தால் அன்றுபடைத்தபொருளை அன்றே மறையவர்க்கு அளிவோமே என்பார்சிலர். இப்போது எம்மை அங்கேபோய் வருமாறு செலுத்துகின், புதைத்த திரவியத்தை எல்லாம்மனம்பொருந்தி அறம் புரிந்து இங்கு ஓடிவருவோம் என்பார்சிலர். பிறந்தவுடனே துறந்து, சுத்தப்பிரமத்தை யுணர்ந்து பிறப்பைமறந்து, இந்நரகத்திலே பொருந்தாதிருக்கும் பாக்கியமும் நமக்குக் கிடைக்குமோ என்பார் சிலர். இவ்வாறு

நரகத்திலேயழுந்தி இடருழப்பதறியாமல் சிறந்தவிவேக பெருமானுடைய செயலை நிராகரித்தோமே என்பார்சிலர். இவ்வாற கொடியநரகத்திலே கிடந்து வருந்துவோர்கள் எடுத்துக் கூறுகின்ற வாய்மொழிகளையும், படுந்துன்பங்களையும் யார்தாம் எடுத்துக்கூறவல்லவர் என்று தான்கேட்டவைகளையெல்லாம் இயன்றவளவிற் சொன்னான். இங்ஙனஞ் சத்தியன் சொல்லித் தனது ஆசனத்தில் உட்கார, விசாரன் எழுந்து விவேகனைநோக்கி, ஐயனே, நான்கண்டறிந்தவைகளையுஞ்சொல்வேன் கேட்டருள்வாயாக. சௌபரி ஓடைக்குள்ளேபுகுந்து மறைந்திருந்தும், அங்கும் காமசரம்பாய் அவனை இழுத்துக் கரைக்குக் கொணர்ந்து அவனுடைய தாயின் செய்கையைக் கைக்கொள்ளு மாறுசெய்ததை என்னென்று சொல்வேன்! ஓடமேறி கட்டாற்றிலே செல்லும்போது ஒருபெரியவரை மச்சகந்திமீது மோகங்கொள்ளுவித்து அவளுடன் சிறிதும் குற்சிதமின்றிச் சேருமாறுசெய்த காமன் திறத்தை எவ்வாறுரைப்பேன்! வேதங்களைச் செவ்வேயுணர்ந்து அவைகளை வகுத்தவராகிய வியாசரை விதவாகமனத்துக்கு உடன்படச்செய்த புஷ்பபாணியினது கொடுமையைக்கண்டு கூசாதவர்யாவர்! அக்காமனுதியர் செய்கின்ற தீமையைச் சகிக்கமுடியாமலன்றே பெரியோர்கள், உறவும், தம்மனையும், தம்மூரும், தம்வளநாடும், உறுசெல்வமும், பிறவும்தவிர்ந்து, துறவினையடைந்து, ஊர்தோறுஞ்சென்று பிச்சையேற்றுத் திரிவாராயினர். நம்மவர்களுள்ளே சிலர் காமனுதியருடைய கொடுஞ்செயலாகிய அக்கினியிலும் பஞ்சாக்கினியே குளிர்ந்ததென்று அவற்றின் மத்தியினின்று தவஞ்செய்யப் புறப்பட்டவரும், சிலர் கண்ணைமூடிக்கொண்டு பிரபஞ்சப் பிரஞ்ஞையற்று யோகஞ்செய்பவரும், சிலர் நீருக்குள்ளே சென்று ஒளித்தவரு மாயினாரன்றே.

தீமையைச் [illegible] தொழிலாக வுடையவர்களுடைய தீயகுணந் தம்மையும் பற்றிக்கொள்ளுமென்னும் அச்சத்தால் சிலமுனிவர்கள் காட்டுக் காடினார்கள். வேறு சிலமுனிவர்கள் மலைச்சாரலுக்கோடினார்கள். ஏனையசிலர் மலைச்சாரலையடைந்து அம்மலையின்கணுள்ள குகைகளிலே ஓடினார்கள். எஞ்சினோர்கள் ஓடாததிசையில்லை. வேதியருடைய கருமமெல்லாம் மாறின. அவராற்செயற்பாலனவாகிய கருமங்களை மற்றைச்சாதியார் புரிவாராயினார். உயர்ந்தோரெல்லாம் தாழ்ந்தோரிடஞ்சென்று ஊதியம்பெற விரும்பி வணக்கஞ் செய்வார்கள். மேலோர் சோதிடங்கேட்பக் கீழோர் அதனையுரைப்பர். ஆலயங்களும் அகரங்களும்பொன்றின. அரிபக்தி சிவபக்திகள் அழிந்தன. மடாலயங்கள் நந்தவனங்கள் எல்லாம் பாழாயின. சற்காபங்கள் தாழ்ந்தன. சீலநல்லொழுக்கங்கள் குன்றின. செய்யத்தகாக் கருமங்கள் ஓங்கின. மயக்கத்தைச் செய்கின்ற மாதருடைய முயக்கமே பெரிதாயிற்று. காரணமின்றிக் கடும்போர்களுண்டாவனவாயின. வீடுகடோறும் மேன்மையென்பதற்றுக் கிழ்மையே செறிந்தது. வைதிகநெறிகள் மறைந்தன; அதற்குமாறான நெறிகள் தழைத்தன. அப்படியே தாரணிவழக்கமெல்லாம் தலைதடுமாறிப் போவனவாயின. நல்வழியிலே செல்லுகின்ற சிலரும் தீயவழியிலே செல்வார் போன்றே திரிகின்றனர். இங்ஙனந்திரியாவிடின் தீயவழியிற் செல்கின்றவரால் தீமைவிளையுமென்றஞ்சியே அங்ஙனந் திரிகின்றனர். அவனை அவனெனவறிதற்கு என்னாலுமாகாது போயிற்றன்றோ. ஆயினும் இம்மோகநதியரால் நெருங்குதற்கு எட்டாத தெய்வத்தலங்களும் பரிசுத்ததீர்த்தங்களும் புண்ணிய பர்வதங்களும், திவ்யவனங்களும் சிலவுண்டு என்றுசொன்னான். சொற்றலும், விவகவேந்தன், முகமலர்ந்து, விசாரா, நீயன்றோ சாமர்த்தியன் எனவளித்து ஆசிகூறி, நீஇப்போது அத்தீயவர்களுக்கெட்டாத

சிலபுண்ணியத்தலங்கள், நதிகள் மலைகள், வனங்களும் சிலவுண்டென்றுசொன்ன அவற்றை எனக்கு விரித்துக் கூறுவாயாக என்றுசொன்னான். சொல்ல, அவனும், சொல்வானாயினான்:

ஐயனே, யான்கண்டுவந்த ஸ்தலங்களிவை:—சிதம்பரம், திருவேட்களம், திருநெல்வாயில், திருக்கழிப்பாலை, திருநல்லூர்ப் பெருமணம், திருமயேந்திரப்பள்ளி, திருமுல்லைவாயில், திருக்கலிக்காமூர், திருச்சாய்க்காடு, பல்லவனீச்சரம், திருவெண்காடு, திருக்காட்டுப்பள்ளி, திருக்குருகாவூர், சீர்காழி, திருக்கோலக்கா, புள்ளிருக்கும்வேளூர், திருக்கண்ணார்கோயில், திருக்கடைமுடி, திருநின்றியூர், திருப்புன்கூர், திருநீடூர், அன்னியூர், வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, திருமணஞ்சேரி, திருக்குறுக்கை, கருப்பறியலூர். குரக்குக்கா, வாளொளிபுற்றூர், மண்ணிப்படிக்கரை, ஓமாம்புலியூர், கானாட்டுமுள்ளூர், திருநாரையூர், கடம்பூர், பந்தணைநல்லூர், கஞ்சனூர், திருக்கோடிகா, திருமங்கலக்குடி, திருப்பனந்தாள், திருவாப்பாடி, திருச்சேய்ஞலூர், திருந்துதேவன்குடி, திருவியலூர், கொட்டையூர், திருவின்னம்பர், திருப்புறம்பயம், திருவிசயமங்கை, திருவைகாவூர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, திருநெய்த்தானம், பெரும்புலியூர், திருமழபாடி, திருப்பழூவூர், திருக்கானூர், அன்பிலாலந்துறை, திருமாந்துறை, திருப்பாற்றுறை, திருவானைக்கா, திருப்பைஞ்ஞீலி, திருப்பாச்சிலாச்சிராமம், ஈங்கோய்மலை, இவை காவேரிக்கு வடகரையிலுள்ளவைகள். வாட்போக்கி, கடம்பந்துறை, திருப்பராய்த்துறை, கற்குடி, மூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, எறும்பியூர், நெடுங்களம், மேலைக்காட்டுப்பள்ளி, ஆலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், சோற்றுத்துறை, திருவேதிகுடி, தென்குடித்திட்டை, திருப்புள்ளமங்கை, சக்கரப்பள்

ளி, திருக்கருகாவூர், திருப்பாலைத்துறை, திருநல்லூர், திருவாவூர், பசுபதீச்சரம, திருச்சத்திமுற்றம், திருப்பட்டீச்சரம், திருப்பழையாறை, வடதளி, திருவலஞ்சுழி, குடமூக்கு, திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம், திருக்குடந்தைக் காரோணம், திருநாகேச்சுரம், திருவிடைமருதூர், தென்குரங்காடுதுறை, திருநீலக்குடி, வைகன்மாடக்கோயில், திருநல்லம், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருத்துருத்தி, திருவழுந்தூர், திருமயிலாடுதுறை, திருவிளநகர், திருப்பறியலூர், திருச்செம்பொன்பள்ளி, திருநனிபள்ளி, திருவலம்புரம், தலைச்சங்காடு, திருவாக்கூர்த்தான் தோன்றிமாடம், திருக்கடவூர், திருக்கடவூர் மயானம், திருவேட்டக்குடி, திருத்தெளிச்சேரி, தருமபுரம், திருநள்ளாறு, கோட்டாறு, திருவம்பர்ப் பெருந்திருக்கோயில், திருவம்பர்மாகாளம், மீயச்சூரிளங்கோயில், திலதைப்பதி, திருப்பாம்புரம், சிறுகுடி, திருவீழிமிழலை, வன்னியூர், கருவிலி, பேணுபெருந்துறை, நறையூர்ச்சித்தீச்சரம், அரிசிற்கரைப்புத்தூர், சிவபுரம், கலயநல்லூர், கருக்குடி, திருவாஞ்சியம், திருநன்னிலத்துப் பெருங்கோயில், திருக்கொண்டீச்சரம், திருப்பனையூர், திருவிற்குடி, திருப்புகலூர், திருப்புகலூர் வர்த்தமானீச்சரம், இராமனதீச்சரம், திருப்பயற்றூர், திருச்செங்காட்டங்குடி, திருமருகல், திருச்சாத்தமங்கை, நாகைக்காரோணம், சிக்கல், கீழ்வேளூர், தேவூர், பள்ளியின்முக்கூடல், திருவாரூர், திருவாரூரரநெறி, திருவாரூர்ப்பரவையுண்மண்டளி, திருவிளமர்கரவீரம், பெருவேளூர், தலையாலங்காடு, குடவாயில், திருச்சேறை, நாலூர்மயானம், கடுவாய்க்கரைப்புத்தூர், இரும்பூளை, அரதைப்பெரும்பாழி, அவளிவணல்லூர், பரிதிநியமம், வெண்ணியூர், பூவனூர், பாதாளீச்சரம், திருக்களர், சிற்றேமம், திருவுசாத்தானம், இடும்பாவனம், கடிக்குளம், தண்டலை நீணெறி, கோட்டூர், வெண்டுறை, கொள்ளம்பூதூர், பேரெயில், கொள்ளிக்காடு, தெங்கூர், நெல்லிக்கா

காட்டியத்தான்குடி, காருயல், கன்றாப்பூர், வலிவலம், கைச்சினம், கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு, அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர். இவை காவேரிக்குத் தென்கரையி லுள்ளன. திருக்கோணமலை, திருக்கேதீச்சரம். இவை ஈழநாட்டி லுள்ளன. திருவாலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்று, திருவேடகம், கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், இராமேச்சுரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி. இவை பாண்டிநாட்டி லுள்ளன. திருவஞ்சைக்களம். இது மலைநாட்டி லுள்ளது. அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருநணா, கொடிமாடச்செங்குன்றூர், வெஞ்சமாக்கூடல், திருப்பாண்டிக்கொடுமுடி, கருவூரானிலை. இவை கொங்குநாட்டி லுள்ளன. திருநெல்வாயிலாத்துறை, திருப்பெண்ணாகடம், கூடலையாற்றூர், திருவெருக்கத்தம்புலியூர், திருத்தினைநகர், திருச்சோபுரம், திருவதிகை, திருநாவலூர், திருமுதுகுன்றம், திருநெல்வெண்ணெய், திருக்கோவலூர், அறையணிநல்லூர், இடையாறு, திருவெண்ணெய்நல்லூர், துறையூர், வடுகூர், திருமாணிகுழி, திருப்பாதிரிப்புலியூர், முண்டீச்சரம், புறவார்பனங்காட்டூர், ஆமாத்தூர், திருவண்ணாமலை. இவை நடுநாட்டி லுள்ளன. திருக்கச்சியேகம்பம், திருக்கச்சிமேற்றளி, திருவோணகாந்தன்றளி, கச்சியநேகதங்காவதம், கச்சிநெறிக்காரைக்காடு, குரங்கணின்முட்டம், திருமாகறல், திருவோத்தூர், பனங்காட்டூர், வல்லம், திருமாற்பேறு, திருவூறல், இலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்கள்ளில், திருக்காளத்தி, திருவொற்றியூர், வலிதாயம். திருமுல்லைவாயில், திருவேற்காடு, திருமயிலாப்பூர், திருவான்மியூர், திருக்கச்சூராலக்கோயில், திருவிடைச்சுரம், திருக்கழுக்குன்றம், அச்சிறுபாக்கம், திருவக்கரை அரசிலி, இரு

ம்பைமாகாளம். இவை தொண்டைநாட்டி லுள்ளன. திருப்பருப்பதம், இந்திரநீலபருப்பதம், அனேக தங்காவ தம், திருக்கேதாரம், கொடித்தான்மலை. இவை வடநாட்டி லுள்ளவைகள். திருக்கோகர்ணம். இது துளுவநாட்டிலு ள்ளது. எனஇவை இருநூற்றெழுபத்துநான்கும் சிவஸ் தலங்களாம்.

இனி, வைஷ்ணவஸ்தலங்களாகிய திருவரங்கம், திரு ப்புல்லாணி, முதலிய நூற்றுப்பத்துத் திருப்பதிகளும் உண் டு. இத்தகைய புண்ணியஸ்தலங்கள் எண்ணில ஆயினும் இவையெல்லாம் கார்காலத்து நக்ஷத்திரகணங்கள்போல மோகனுடைய வஞ்சவினையான் மறைந்து விளங்குவன வாயினவென்று ஆதியோடந்தமாக யாவுஞ் சொல்லிமுடி த்தான்.

அது கேட்டவிவேகன், நன்றெனத்தலைதுளக்கி விசா ரணைக்கூவி, கடல்புடைசூழ்ந்த இவ்வுலகத்திலே மோகனு டையர் எவ்வெவ்விடங்களைக் கைக்கொண்டு நிற்கின்றார்க ளென்றும் அவ்வவ்விடங்களிலே தலைமைபெற்றிருப்பவர் கள் யாவரென்றும் விரித்துக்கூறுவாயாகவென்ன, அவ னும்பக்கத்தில்நின்று வணங்கி, ஐயனே! நமயோகியர் அணு குதற்கியலாத அவித்தியாபுரத்திலே நவத்துவாரயகாயனை யிலே துன்மதியும் பாஷண்டவித்தையுமாகிய பத்தினிக ள்சமேதனாய், பக்கத்திலே லோகாயதன், சாருவாகன், அனுசா ரன் காபாலி, என்னுமிவர்கள் தற்சூழமோகன் வீற்றிரு ந்து எவ்வுலகினும் தன்கொடுங்கோலைச்செலுத்தி ஆங்கா ரன்முதலாயினோரை ஆங்காங்கும் அதிகாரிகளாயமைத்து அவ்வவர்கருத்துக்கேற்ப வூர்புரக்குமாறு ஆஞ்ஞைபுரிந் தான். அவ்வாறேகாமன் காஞ்சிநகரைத் தனதுறைபதி யாகக்கொண்டு எவ்வுலகினும் தனது மீனக்கொடியேயசை யுமாறு சிற்றரசுபுரிகின்றான். ஆங்காரன் கவுடதேயத்தி

லும், அவன்மகன்லோபன் கேரளத்திலும், அவன் குமாரனாகிய டம்பன் காசிநகரத்திலும், மதன்என்பவன் கோதாவிரிதீரத்திலும், அதனமன்என்பவன் நெய்தனிலத் தூர்கள்தோறும், காபன்யவனதேயத்திலும், மச்சரன் மராடத்திலும் சந்தேகன்கொங்கணதேசத்திலும்,சங்கற்பன் குச்சரதேயத்திலுமாக இவ்வாறே யாவரையும் தனித்த னிஒவ்வோரிடத்திருத்தி அவ்வவர்கள் மனைவி மக்களுடன் இன்ன இன்ன பணிபுரிவாராகுகவென்று மோகவேந்தன் புரிந்த ஆஞ்ஞை இன்னும் குறையின்றி நடைபெறுகின்றது என்றுகூறினன்.

விவேகன் ஒற்றுக்கேள்விச்சருக்கு முற்றிற்று

---

## விவேகன்சேனைகரந்துறைசருக்கம்.

விசாரன் கூறிமுடித்தலும் விவேகன் இனிநமது கருமத்திற்றலையிடுவதே தக்கதென்றெண்ணி, சபையைப் பார்த்து, அன்பினரோ, இப்போது நீங்கள் சொல்லியகுழ்ச் சிப்படி யமது சேனைகளைப் பற்பல விடங்களுக்கும்போ க்கிஆங்காங்கு தம்மை வெளிப்படுத்தாது கரந்துறையுமாறு அமைக்கப் போகின்றனை. ஆதலால் யாவரும்சிறிதுபோ துஅமைதிப்பாயுங்களென்றான். அவ்வுரைப்படி யாவரும் அமைதிபுரிய, நிருபகனும் அவன் சேனாபரிவாரங்களும் காஞ்சிக்கும், அவன்மைந்தன் நிச்சயனுமஅவன்படைவீரரு ம் கோகருணதலத்துக்கும், அநிர்தசீலனும் அவன் குழா மும் காசிநகரத்துக்கும், விராகனும் அவன் துணைவரும் அந ந்தசயனத்துக்கும், அடக்கனும்அவன் சேனாவீரரும் பத்திர கிரிக்கும், சத்தியனும் அவன்அணிகளும் பகீரதிக்கரைக்கு ம், பொறையனும் துணைவரும் சிந்துநதிக்கரைக்கும், அவி

ரோதனும் படைவீரரும் காளத்திகிரி சேடகிரிமுதலிய மலைப்புறங்களுக்கும், தமனும் துணைவரும் நாதமுதலாயுள்ள எத்தலங்களுக்கும், நிருவிகற்பனும் அவன்படைஞரும் நாசிகைக்கும், சந்தோஷனும் அவன்தானையும் கோதாவிரிநதிப்புறத்துக்கும், புனிதைநாயகனுகிய சத்துவன் படைவீரர் சிற்சிலராகத் தென்னாட்டிலே யுள்ளகாவிரி, வைகைமுதலியநதி தீரங்களுக்கும், தருமன் சேனைகள் கூறுகூறுகப்பிரிந்து, சேது, வேதாரணியம், நாகைமுதலிய சமுத்திர தீரங்களுக்கும், சமன்தானைகள் சிற்சிலராகக் கங்காசங்கமமுதலியநதி சங்கமங்களுக்கும், ஏனையரும் இவ்வாறே ஏனையவிடங்களுக்கும் சென்று கரந்துறைகவென்று விவேகன் ஆஞ்ஞாபித்தான். பின்னரும் நிருபகனைநோக்கி, உனதுபடைவீரர் சிற்சிலராகத் தூதுவராக நமது படைஞர் நிற்கின்றவிடங்கள்தோறு மோரொருவர் சென்று ஆங்குவசிக்கும்படி ஏவுதியென்ன, அவனும் அவ்வாறு போக்கினுன். அப்பால் தன் பக்கத்தினின்ற மற்றவீரர்களைநோக்கி, நீங்கள்யாவரும் எம்மிடத் திருங்களென்றுன்.

இங்ஙனம் யாவருக்கும கட்டளையிட்டபின்னர், படைவீரர்கள் விவேகனைவணங்கி உனது ஏவலைத் தலைமேற்கொண்டு நம்பகைவருடைய வலியை ஒருவாறடக்கி வருவோமென விடைபெற்றுத் தத்தம்பதிகளுக்குப்போயினுர். போய்த்தத்தம் பகைவருடைய செயலுக்கேற்ற வேடந்தாங்கி அவ்வப்பதிகளிலுறைந்து, தமதுகுணமும் தொழிலும்வெளிப்படாவண்ணம், எவ்வகைத் தீயவொழுக்கமுடையவர்களுடனும் கூடி அவரோடுறவாடுவர்; ஆடுமவரோடும் விளையாடுவர்; மடந்தையர் அநேகருடனே கூடுமவரோடு உறவுகூடுவர்; திருவிழாவென்றும் கோயிலென்றும குளமென்றும் ஓடுகின்றவர்களோடும் அயலோடுவர்; நகைப்பவருடனேகூடி நகையாடுவர், பாடுமவரோடு யாழினெடுமேழி

சைபாடுவர். இவ்வாறே பாண்டவர் அஞ்ஞாதவாசஞ் செய்
யப்புகுந்து அவரவரோடும் கூடிக்குலவியதுபோல விவே
கன்சேனைகளும் ஆரியப்பாவை யாட்டினாலும் காரியத்து
மேற்கண் என்றாற்போல் எத்திறத்தினருடனும் கூடி ஒழு
குவா ராயினர்.

இங்ஙனம் நீறுபூத்த செந்தழல்போலவும், மாசுகொ
ண்ட மாணிக்கம்போலவும் உண்மைவெளிப்படா தொழுகி
வருநாளில், காஞ்சிபுகுந்து காமம்பயிற்றும் குரவர்போல
வேடம்பூண்டு அநேகருடன் சிநேகஞ்சாதித்து வந்தவிருபக
ன்படைஞர், பருவமும்பக்குவமும் நோக்கி, காமப்பயனைப்
போதிக்க வந்தகுரவர் போலாகி, அந்நாட்டினரைத் தனியிட
த்துக்குக் கொண்டேகி, நண்பர்காள், எனவுளித்து, நாம்
சொல்வதைச் சற்றே சிரத்தைவைத்துக் கேண்மின, இப்பூ
மியில் ஆடவர்க்கண் மேலிக்கண்ணாய்ந்தி, ஓர்இமைப்போதிலே
மடிந்து வருந்துதற் கிலக்காகிய இம்மானிடப்பிறப்பிலே
பெண்களுடன்கூடிச் சுகிக்கும்இன்பமானது பாம்பின்வாய்
ப்பட்டதேரை ஒன்று வாய்திறந்தாற்றும் போது ஒருதுளி
தேன் அதன்வாயில்வீழ அதனை அதுநுகர்ந்துஇன்புறுவதனை
ஒத்திருத்தலால்அதனைச்சிற்றின்பமெனலாயிற்று. இனிஇத
னினும், சிறந்த இன்பம் யாதெனின் அதுசுவர்க்க இன்பம்.
அச்சுவர்க்கம் புகுந்தால், நரைதிரைமூப்பகன்று எந்நாளும்
எவ்வனமுடையராகி, பஞ்சதருவின்நிழலிலே, மந்தமாருத
ம்வீச, கந்தருவர் கின்னரர் இசைபாட இந்திரபீடத்தமர்
ந்து தேவகன்னிகையருடைய செல்விகழ்த்திதனை எந்நாளு
மூண்டு துன்பமென்பதறியாது வாழ்தல்கூடும்.

ஆதலால், தனது மனைவியரல்லாத பிறமனைவியருடன்
அனுபவிக்கும் சிற்றின்பத்தைத் தவிர்த்து, தூயவெள்ளி
விரதாதிகளைப் புரிதலால் சுவர்க்கம்பெறலாகுமென்று கூறி
னார்கள். அதுகேட்ட அந்நாட்டினர்கள் மெய்யுணர்வுற்று

கன்றுசொற்றீர் எனஅவர்களை வாழ்த்தி, அன்று முதலா கச் சுத்தநதிபடிந்து விரதாதிசீலங்கள் பூண்டு சுகன்மிக ளாய் ஒழுகத்தலைபட்டார். அதுகண்டு சிலர் பாவனைசெ ய்வாருமாயினர். சிந்து நதிதீரத்துக்குச்சென்ற பொறை யனது துணைவர் அதற்கப்பாலுள்ள யவனதேசத்துச்சன ங்களோடு நண்பு கலந்து அவர் உவப்பஒழுகிவருநாளில், அவரிற்சிலரைத் தனியிடத்துக்குக் கொண்டேகி, பரிபா கமும், காலமும்இடமுந்தேர்ந்து, நண்பர்காளென்னவிளித் து, கோபனுடைய போதனைக்குட்பட்டு நீவிர்ஒழுகுவது தகுதியன்று; வலியவர்மே லெழும்புகின்ற கோபமா னது அவரிடத்துச் செல்லப்பெறாது, கோபஞ்செய்தவ ரிடத்தேதிரும்பி அவர்க்கே கேடுசெய்வதாகும்; மெலிய வர்மேல் எழுங்கோபமானது இகத்தில்வெம்பழியும் மேல் நரகமும் விளைப்பதாகும்; கோபமானது நொய்யவர்கள் பார்த்து அகங்களித்தற்கும் நகைத்தற்கும் ஏதுவாய்க்கேட் டினையே தருவதாகும்; இனிய நட்பையும் ஒரு நொடியி லேவேரறுக்கும்; கொடியபுலியானது பசுவினத்தைப்போ லப் பல்காமைக்குக்காரணம் அதன் சினமன்றோ. ஒரு வர்குற்றஞ்செய்த விடத்துத் தங்குற்றத்திற்காக அடியைத் தாங்கும்பொருட்டுக் கையேற்பாரேனும் தங்கருமம் பழு துபடாவண்ணங் கோலையுயரவோங்கி மெல்லெனப்பூப் போல் அடித்தாலும் குணமுடையவர்களுக்கு எக்காலும் அவர் செல்வம்குறையமாட்டா. ஆதலால் இஃதுயாங் கூறுவது உம்மிடத்துவைத்த நேயத்தாலென்பதை உண ரக்கடவீர்களென்று இன்னனபோதித்தார்.

இதனைக்கேட்டமாத்திரத்தில், நீர்சொன்னது ஒக்கு மொக்கும்;எமைக்கெடுத்தது யண்டு எழுந்தகோபமே;இன் றுமுதலாக அக்கோபனுறவை விட்டொழித்தோம்என்று கூறிநல்லவராயினர். அதுகண்டவேறுபலரும்அங்ஙனம்பா வனைசெய்தடங்குவாராயினர். அப்பால், கேரளதேசந்தோ

றுஞ்சென்று அங்குள்ளார் சிலர்க்குப்பிரிய நண்பராயொழு கிவந்த விராகன்படைவீரர், காலமுமிடமும்வாய்ப்ப, அத் தோழரோடு ஒரு சோலையினிடமாகச்சார்ந்து, அவர்களை நோக்கி, அன்பர்காள், எனவிளித்து, நீரிங்குச்செய்கின்ற பொருள்வியாபாரம் ஒன்றுபத்தாகப்பலிக்கினும் அதனாற் பயன்யாது? நல்லதருமங்களை ஆராய்ந்து செய்வீரேல் ஒரு பொருள் அனந்தகோடியாய்ப் பலிக்குமே; அதுவன்றோ வாணிகம். வாணாள்ஒருகணப்பொழுதும் நிலையிலதென்பத றிந்தும் மலைவனங்கள்தோறும் வீணாக உலைந்தலைந்துமிகு தனம் ஆர்ச்சிப்பதேவிரதமாகக்கொண்டீர். நீருஞ்செவ்வே யுண்ணாது பிறர்க்குங்கொடாது திரவியத்தைச்சேமித்து வைக்கின்றீர்; நீருடுக்கின்றவஸ்திரமோ ஒரு முழத்துண்டா யிற்று. உண்பதுவோ காய்கனிதானியாதி அற்பவஸ்துக்க ளாயின. அவ்வளவிலே உலகவாழ்விற்கும் நஷ்டம்பிறப்பி க்கின்றீர். சுவர்க்கலோகவாழ்வையுஞ் சிதைத்துவிடுகின்றீர். இஃது உமக்கழகியதன்று. ஈட்டியநுந்திரவியத்தைப் பொ ன்காத்தபூதம்போலிருந்து காக்கமூட்டியசிந்தனையை விட் டொழிவீராக. தவந் தானந் தருமத்தை முடிவுறுமற்கா ட்டிஅமுதுண்டு உடுத்துக்கலிதீரக்கடவீர்; நும்பொருட்டுப் பண்டுபூட்டிய சுவர்க்கத்துக்கதவைத்திறந்து அதனுட்பு குந்து வாழுமாறு வழிதேடக் கடவீர் என்று இன்னோரன் னபிறவுங் கூறினர். அதுகேட்ட அக்கேரளர் இனிது இனிது இதுபோல்யாமென்றுங் கேட்டதில்லை; ஆம்,எம்மு ன்னோர்கள் தேடியபொருளும் அவர்போனபோக்குமெங் கே! எனத்தேறியுள்ளணர்வுதோன்ற, நகைத்து, இனியாம் தானதருமமேசெய்வோமென்று துணிந்து அங்ஙனஞ்செய் யத்தலைப்பட்டார். அதுகண்டு பின்னுஞ் சிற்சில ரவ்வாறு செய்வதாயினர்.

அப்பால், கங்காசங்கமஞ்சார்ந்த சமன்படைவீரர்கவுட தேயத்தையடுத்து, அவர்கொள்கையைக்கைக்கொண்டவர்

போல்நடித்து, அதனல் அவர் சிலரோடு பெருநட்புற்று, ஈற்றிலே, சமயம்பார்த்து, அவர்களுக்குப்புத்தி புகட்ட வெண்ணி, அன்பர்காள், எனவிளித்து, அகங்காரமானது அறத்தை வேரறுக்குமியல்பினது; கற்றகல்வி யுணர்வை அவமாக்குமியல்பினது; உள்ளம் புகைந்தெழுப்புங்கனலை மிகப்புழுங்குவிக்கும்; பிறர்பார்த்திகழச்செய்யும்; சிறிது தவஞ்செய்யுமிடத்து அதனைமுடிவுபோகாதகற்றும்; சுவர்க்க இன்பத்தைத்தடுக்கும்; சுகத்துக்கினம்விளைக்கும்; ஈற்றிலேநரகத்துக்கும் வழிகாட்டும். ஆதலால் நம்மவராகிய நமக்கு இஃது அழகன்று. தக்கன்யாகம்புரிந்தநாளில் அகங்கரித்து முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானை இகழ்ந்தமையால் அவன்தலைபோனதுமன்றி, அவனைஅடுத்தவர்க்கும் மூக்குப்போனதும், மேனிகுழம்பிப்போனதும், விழிபோனதும், பற்போனதும், அதலக்கதிகிடைத்ததும் புதுமையாகக் கேட்கப்படத்தக்க விஷயங்களல்லவே. ஆதலின்,அக்குணத்தை அகற்றிவிடுவதே தூயமாதவமாம்;அதுவேபெருந்தனமாம்; அதுவேவண்மையாம்; அதுவேதிண்மையாம்; அதுவேஅறிவாம்; அதுவேவாழ்வாம்; அதுவேஅழகாம்; அதுவேசுவர்க்கமாம்; அதுவேமற்றெல்லாச் செல்வமுமாம் என்று இவ்வாறுபோதித்தனர். அதுகேட்டமாத்திரத்து அக்கௌடரும், சீ! என்செய்துவிட்டேம்! என்று நல்லுணர்வுபெற்றுப் பெருஞ்சாதுக்களாயினர். அதுகண்டு வேறுசிலரும் அவ்வாறுயினர்.

அதன்மேல், காசிநகரையடைந்த அமிர்தசீலனுடையபடைவீரர், அந்நகரவாசிகளைப்போலச் சிறிதுகாலம் இடம்பாசாரம்பூண்டு, அவர்சிலரோடுறவுகொண்டு, ஈற்றிலேகாலமும் இடமும்நோக்கி, அவரை, அன்பர்காள், எனவிளித்து, பொருள்கவர்தலும் பிறவும்நோக்கிச்செய்யப்படுகின்ற இவ்விடம்பாசாரம் மேலுலகுஞ்சென்றிடுமோவென்று பஞ்சபூதங்கள் உள்ளிருந்துநகையாடும். யம

தூதர் இவ்விடம்பருடைய ஆவியைக்கவர்ந்துபோய் நரகத்திலிட்டுவருத்துதற்கு எங் கைகள் விளைகின்றனவே; இப்போதுஎம்மிறைவன் ஆஞ்ஞாபிப்பானேல் ஒருநொடியிலேஅத்தீயரைக் கொணர்ந்துவிடுவேமேஎன்று சிந்திப்பர். அகத்தேபதுங்கியிருப்பதாகிய கபடத்தைஅடுத்தவருக்கு அக்கபடமுடையாரது முகமேகாட்டிவிடும்; அதுகாட்டாதாயின், அவர்மொழியாவது காட்டிவிடும்; பிறர்நகைத்தற்கேதுவாகும்; சுகங்காட்டுவதுபோன்று முதற்றோன்றிப் பின்னர்த்துக்கமிகக்காட்டும்; அதுமட்டோ! அளவின்றிநெடுந்துயருங்காட்டுமென்றே. கரதலாமலகம்போல அக்கருத்திய லும் புறத்திய லும்ஒன்றாகக் காட்டியொழுகுபவருக்கு, விரதம், மாதவம்பிறவும்வேண்டுமோ! அவர்போகாதமோக்ஷமுமொன்றுண்டோ! ஆதலால் இடம்பாசாரத்தை விடுத்துய்மின்என்று அவர்க்குரைத்தார். அதுகேட்டவளவில், உண்மை உண்மை என்று கொண்டாடி அன்றுமுதலாக அவர் தூயராயினர். வேறு சிலருமதுகண்டு அவ்வாறாயினர்.

அதுநிற்க; கோதாவிரிதீரத்துள்ள பத்திரகிரிப்பக்கஞ்சார்ந்த அடக்கன்சேனுவீரர் அங்குள்ளாரைப்போலமதவேடம்பூண்டு அவரோடுறவாடி, ஈற்றிலேபக்குவமுணர்ந்து, அவர்சிலரைநோக்கி, அடக்கமில்லாது மதகுணம்பூணுமிடத்து, கற்றகல்வி, குலமேன்மை, கருணை, பெரும்புகழ், செல்வம், கைம்மாறுநோக்காது செய்யுமுதவி, ஈகை, நல்லொழுக்கம், அரியதவம், நியமம், உறவின்கேண்மை, திண்மை, வாய்மை, அழகுஎன்றற்றொடக் கத்தனவெல்லாம்பெற்றிடினும், அவற்றையெல்லாம் அப்பெருமித்குணம் நாசஞ்செய்துவிடும்; அடக்கமானது தன்னைப்பொருந்தினவர் இழிகுலத்தவரேயாயினும் அவரைஉயர்குலத்துள் ஏற்றிவிடும்; தீயதாகியபழியைஅகற்றும்; புகழைப்பெருக்கும்; பண்போடுநண்பைவளர்க்கும்; ஈற்றிலேசுவர்க்கஇன்

பத்தையுந்தரும். ஆதலால் பெருமிதகுணம்தகாதென்று கூறினர். அதுகேட்டபலர் மருந்துண்டு பித்தமயக்கந்தீர்ந்தார்போல் அடக்கமுடையராயினர்.

இப்படியே, தமன், சந்தோஷன், நிருவிகற்பன், அவிரோதன், நிச்சயன், சத்துவன், சத்தியன், முதலாயினேருடைய படைவீரர்தத்தமக்குரிய விடங்களிலேசென்று, முறையேதத்தமக்குரிய பகைவராகியமானன், மச்சரன், சங்கற்பன், வயிரன், சந்தேகன், இராசதன், அசத்தியன்முதலாயினருடைய மயக்கில் மூழ்கியிருந்தபலரைத் தமது பக்ஷந்திருத்துவாராயினர். இங்ஙனம்விவேகன் சேனைவீரர்செய்த சிறுமுயற்சியால், உலகிலே ஆங்காங்கும், பொறை, தவம், நல்லருள், ஆசாரம், நேயம், விரதம் அன்பு, தானம், தருமம், வாய்மை, முதலிய சீலம்யாவும் இருட்டறையிலேற்றியதீபங்கள்போல விளங்கத்தலைப்பட்டன: இவைமாத்திரமா! வருணாச்சிரமதருமங்களும் மங்கையர்கற்பும் தலையெடுத்தன.

இச்சமயத்திலே, விவேகவேந்தன், தனது சேனைவீரருடைய செய்தியைஅறிதற்குப் பேரார்வமுடையனாய், நியாயனைக்கூவி, நீ நமது சேனைவீரர்சென்றிருக்கு மிடங்கள்தோறுஞ்சென்று, அவரதுசெய்தியைப்புகுந்துநோக்கி மீண்டுகடிதுவரக்கடவாயென்ன, அவனும், விவேகன்பாதங்களைவணங்கிக்கொண்டு, பிரஸ்தானமாகி, வாயுகதி, மனோகதிமுதலியகதிகள், இவன்கதிக்கு நாம் என்னைஎன்றுதலைகுனியுமாறு ஒருகணத்திலே உலகனைத்தையும்நாடி, ஆங்காங்குமுள்ளவரது செய்திகளையுணர்ந்துமீண்டனன். மீண்டஅளவில், கைகூப்பிவிவேகனைவணங்கி, ஐயனே. யோகினிகளுடைய அருட்டுணைகொண்டு சென்றவராகிய நமதுபடைவீரர் அடியேன் கண்ணுக்கே புலப்படுவதரிதாயின், பிறருடையகண்ணுக்கு அவர்புலப்படுதலெங்ஙனம்!

அங்ஙனம் அவர்மறைந்தொழுகிச் செய்கின்றமுயற்சியால் காமமானது சிலவிடங்களிலே நல்வழியிற் செல்கின்றது. (அது பரலோகஇச்சைஎன்க) கோபமானது குற்றங்காணு மிடத்துமாத்திரம் சிறிதுதோன்றி அழிந்துவிடுகின்றதன் றிஎப்பொழுதும் மனத்திலேகுடிகொண்டிருக்கின்றதன்று. உலகத்தைச்சுற்றியறியாத ஒருமடந்தை அதனைச்சுற்றிச் சோர்ந்தடங்கியதுபோல, லோபமும்மறமும் சோர்வடைந் தடங்கின. மனமுஞ்சிற்சிலவிடத்துமாய்ந்தது. சுவ்ஃலித் தெரியும் அக்கினியிடை நீர்ஓங்கினுலொப்ப, அகங்காரன்வ லியும்அடங்குவதாயிற்று. மச்சரன்வலிமையும்ஜாதிப்பிரஷ் டமுற்றுக் கீழ்மரபிற்சென்ருர்தருக்குப்போல மாய்வதா யிற்று. திடத்தவுணர்வினுலே சிற்சிலரது டம்பம் ஈடுபட் டது. சிற்சிலவூரிலே தருமமானது அதன்மம்காணநடம்பு ரிகின்றது. கையினுலே தற்றப்பட்ட ஜலம்போலஅநேக ரது ஐயுறுத்தெளிந்தது. அனத்தமும்துக்கமும் அநேகர்ம னத்தைவிட்டகன்றன. இவ்வண்ணம்ஆங்காங்கும் தீயகு ணங்களும் தீயகருமங்களும்தலைகுனிய,நற்குணங்களும்நற்க ருமங்களும் தலையெடுக்கின்றன. இவ்வயெல்லாம் இடிபோ லஞ்சத்தக்கவஞ்சகராகிய மோகனுதியர் இனிச்சின்னுளின் மடிகுவரென்பதற்குக்குறிகளாம். எம்மிறைவனே, உனது முயற்சிகள் சித்திபெறுதுதாழுவதுமுண்டா! உலகத்திலே தரும்மேவெல்லும் பாவந்தோற்குமென்பது இன்னுஞ்சின் ஞளிற்காண்பாய் என்றுயாவும் கண்டவாறுகூறினுன். அது கேட்டவிவேகன் ஆனந்தவசத்தனுய் அங்கியாயனைமார் புறத்தழுவி, ஐய, இன்னும் ஒருமுறை உலகத்தைச் சுற்றி அங்குநிகழ்வதைக் கண்டுவந்து கூறெனஏவினுன்.

விவேகன் சேனைகரந்துறை சருக்க முற்றிற்று.

# சத்துவச்சிரத்தை தூதுச்சருக்கம்.

அப்பால் விவேகனதுமந்திரிகள்யாவரும் விவேகன் சமுகஞ்சென்று கைகூப்பிவணங்கி, எங்களிறைவனே, எனவிளித்து, நமது பகைவனைவெல்வதற்கு இன்னுமொரு சூட்சியுண்டு அதனைக் கேட்டருளுமாறு பிரார்த்திக்கின்றோமென்றார்கள். அதுகேட்டவிவேகன் முகமலர்ந்து அவரைநோக்கி, அஃதுயாதென்று சொல்லுமினென்ன, அவர்கள் விவேகன்முகத்தைநோக்கி, கொடியவனாகிய மோகன் துன்மதியை மணந்தபின்னர்ப் பாஷண்டை விஞ்சையென்னுமொரு கன்னிகையையும் துன்மதித்தேவி சம்மதங்கொண்டுமணந்து, அவள்வயிற்றில் அஞ்ஞன்என்னுமொருபுத்திரனைப்பெற்று இறுமாந்திருக்கின்ற செய்தி உன்திருவுளமறிந்ததன்றே; அவ்வஞ்ஞகுமாரனே சிங்கக்குருளைபோல் ஓங்கிப்பலக்கின்றான். அதனால்மோகனுக்குண்டாகிய செருக்குமேன்மேலும்வீறுகின்றது. அப்பகையையெல்லாம் நின்னாற்றல்வெல்லுமேயாயினும், தசரதன் அசுரரால் இந்திராதி தேவர்க்குண்டாகிய இடரையும் அவ்வசுரரதுதந்திரங்களையும்தான்செறுத்தானேனும்,தான் ஒருபுத்திரனைப்பெற்று அப்புத்திரனால் அசுரகிளையை வேரறுக்க உன்னி அவ்வாறு இராமனென்றொரு புத்திரனைப் பெற்றதுபோல, உனதுதேவியாகிய சுமதியினது அநுமதி கொண்டு உபநிடதை என்னும் கன்னிகையை வதுவை செய்து அவள்வயிற்றில் ஒருபுத்திரனைப்பெற்று அப்புத்திரனால் அஞ்ஞகுமாரனைவெல்லுதற்கு உன்திருவுளம்பொருந்தவேண்டும். இதுவேநமது விண்ணப்பமென்றார்கள். அவ்வுரைசெவியிற்பட்ட மாத்திரத்தில் விவேகன்அகமகிழ்ந்து நீர்சென்னது செவ்விதுஎனமுடிதுளக்கி, யானும் இவ்வகைசிந்தைசெய்தேன், அதற்கேற்பநீருஞ்சொன்னீர்.

இவ்விடத்திற்றானே சிறிதுபோதிருங்கள் சுமதிமனக்கருத்தை உணர்ந்துவருகின்றேனென்று கூறிச்சுமதியிடஞ் சென்றான். நாயகன்வரவைக்கண்ட சுமதிதேவி பரிதியைக்கண்டதாமரைபோல முகமலர்ந்து எதிர்சென்றுதழுவ, விவேகனும்சுமதியை ஆலிங்கனஞ்செய்து மெல்லணையையணுகி அதன்மேல்வீற்றிருந்து அவள்முகத்தைநோக்கி, என்னுயிர்க்குயிரும், வாழ்வும், நல்லுறவும், கண்மணியும், மற்றையபிறவும் ஆகியஎன்பிரியாய், நீயல்லதுஎனக்கு ஊற்றவர்யாவர்! ஆயினும் இங்குநான்சுட்டிவந்த கருமத்தைச் சொல்லுதற்கு என்னெஞ்சங் கூசியஞ்சுகின்றது என்றான்: என்றலும்சுமதிதேவியெழுந்து நாயகனைத்தொழுது என்பிராணநாயகரோ, நீர்திருவாய் மலர்ந்தருளுவதையான் மறுத்திடப்புகுந்தால் நும்மிடத்து யான்கொண்ட அன்புயாதாகுமென்றாள். அது கேட்டவிவேகன் அவளைநோக்கி, அருந்ததியனையாய், கண்ணினுமினியராகிக்கரவில்லாத உள்ளத்தோடும் வேண்டியதொருபொருளைக் கொடுப்பவரிடத்தும் ஒருவர் சென்றிரக்கும்போது ஈவரோவீயாரோவென்னுமச்சத்தோடுமே இரப்பர். அஃதுலகவியற்கை. ஆதலால் என்மன மஞ்சுகின்றதென்றான். அதுகேட்ட சுமதிதேவி, குடிப்பெண்கள் தமது நாயகர் யாது சொல்லுகினும் அச்சொற்படிபணிபுரிந்து, தெய்வந்தொழாது கணவனையே தெய்வமெனத்தொழுது அவருண்டபின்தாமுண்ணலும், அவர்தூங்கிய பின்தாம்தூங்கலும், அவரெழுமுன் தாமெழுதலும் இவைமுதலியனகடனாகக்கொள்வர். ஆதலால் நீரருளுகின்றவழியில் யானொழுகுவதுக்கடனாகும். ஆகவேநீர்மயங்குவது தகுதியன்றெனக்கூறினாள். அது கேட்டவிவேகன், என்கண்ணே, எமதுபகைவரதுவலிக்கஞ்சிநாம் ஒதுங்கித்திரிவதுனக்குத்தெரியுமன்றோ. இனி அப்பகையைவெல்லுதற்கேற்ற உபாயங்களைத்தேடுவதும் நமது கடனாயிற்றன்றோ. உபநிடதையைமணம்புரிந்து அவ

ள்வயிற்றில் ஒருபுத்திரனைப்பெற்று அப்புத்திரனால், மோகனது இரண்டாம் மனைவி வயிற்றி லுதித்துவளர்பவனாகிய அஞ்ஞானைவெல்லல் ஆவசியகமாகின்றது. ஆதலால் உபநிடதையை மணம்புரிதற்கு என்மனம்நாடுகின்றது. உனது கருத்துயாது என்ன, அதுகேட்டசுமதி, நன்னோக்கத் தோடுசெய்யப்புகும் ஒரு கருமத்திற்கு என்கருத்தும் வேண்டுமா? அன்பரோ, நன்றுவினவினீர்! அடியாள்மனமும் உமது மனமும் வேறென நினைந்திரா! நீர் நினைந்தது நற்கருமமே. அதற்கு என் மனமும் ஒருப்படுகின்றது என்றாள். என்றலும் விவேகன் சுமதியைத்தழுவி, வெற்றிமாலை சூடினேன் இனிப் பகைவருக் கஞ்சேன் என்று ஆனந்த பரவசனாகினான். அப்பால் அந்தப் புரத்தை விட்டு நீங்கி அத்தாணி மண்டபத்தை அடைந்து, அங்கே தன் வரவை எதிர் நோக்கி யிருந்த மந்திரிகளிடம் நிகழ்ந்ததைக்கூறி, உபநிடதையிடம் தூதுவிடக் கருதி அத் தொழிலில் வல்லவராவார் யாவரென ஆராய்ந்து, ஈற்றிலே, சத்துவச்சிரத்தையே அத்தொழிற்கு வல்லாளெனத்துணிந்து, அவளை அழைத்து, நங்காய், நளன்பொருட்டுத்தமயந்தியிடம் தூதுசென்ற அன்னம்போல, நீயும் என்பொருட்டு உபநிடதையிடம் தூதுசென்று நம்பகைவர்உணராவண்ணம், அவளுடையமனத்தைத்திருப்பி மணத்துக்கியைவித்து மீள்வாயாகஎன்றான். அதுகேட்ட சத்துவச்சிரத்தை தனது செங்கரங்களைக்கூப்பி விவேகனை வணங்கி, ஐயனே, உமது ஏவலைச்சிரமேற்கொண்டேன் யான் தூதுசெல்லும்நெறியிலே, உலகத்திலேஎவ்விடத்தும் பரந்துலவுகின்றபகைவர் என்னைக்கண்ணுற்றுப்புலிபோலப் பாய்ந்து பற்றுவராயின், அவர்கையினின்றும் மீள்வதெவ்வாறோ அறியேன் என்றாள். அதுகேட்ட விவேகன், நங்காய், யோகினிகளது கிருபையிருக்குங்காறும் நீ அஞ்சவரத்தக்கதுயாது! யோகினிகளிடஞ்சென்று அவர்களு

டைய திருவருளைப்பெற்றுக்கொண்டு அப்பால்வாணிபுத்திரியாகிய உபநிடதையிடஞ்சென்று கருமம்முற்றிவருகவென்றான். அதுகேட்டுச்சிரத்தை விவேகன்பாதங்களைவணங்கி, அவன்சமுகம்நீங்கி, சிவபக்தி அரிபக்திஎன்னும் யோகினிகளிடஞ்சென்று வணங்கினாள். அவளைக்கண்டயோகினிகள், அவளுக்குமங்களங்கூறி அவளைநோக்கி, சத்துவன்பெற்றநங்காய், நீ இங்குவந்ததுயாதுகருதிஎன்ன, எனதன்னையரே! பாவிகளாகிய மோகனாதியரால் உலகமும்நாங்களும்படுகின்றதுன்பம் இத்துணையதென்றுசொல்லும் தரத்ததன்று. நீங்களேஅறிவீர்கள். அப்பகையை மேற்கொள்ளும்பொருட்டே விவேகராஜன் உபநிடதையிடம் என்னைத் தூதுபோகுமாறுவிடுத்தான். போம்வழியிலேபகைவராலே துன்பம் நேரிடாவண்ணம் உங்கள் திருவருளுக்கு இங்குவந்தேன் என்றாள்.

அதுகேட்ட யோகினிகள் மனமுருகி அவளை நோக்கி, நங்காய், அஞ்சேல், உபநிடதையை உனது அரசன் மணம்புரிதற்கும், மோகனாதியரை வெல்லுதற்கும் நாங்கள் துணைச்செய்வேம். உனக்கும் இடையூறுவராது காப்பேம். எமது அருட்காவல்பூண்டு பிரமலோகஞ் சென்று மீள்வாயாக என்ன, சிரத்தைமாதும் அவர்கள் பாதங்களை வணங்கி அவர்களது அருளாகிய வோடத்தின் மீதேறிக் காமனாதியரது பகைக்கடலிலே செல்வாளாயினள்.

சத்துவச்சிரத்தை தூதுச்சருக்க முற்றிற்று.

## மோகனெற்றுக் கேள்விச் சருக்கம்.

இங்கே அவித்தியா புரத்திலே சஞ்சலன், கபடி, கலியன், குதர்க்கன், சாருவாகன், அகீர்த்தி, கபாலி, சபதன்

முதலிய பலர்தற்சூழத் துன்மதிதேவி சமேதனுக மோக ராஜன் தனது ஆஞ்ஞாசக்கரம் நாற்றிசையிலும் செல்ல இறுமாந்து இரவுபகலின்ப நுகர்ந்து வருநாளில், ஒருநாள், தனது மைத்துனனுகிய கலியனை அழைத்து, காளாய், நம து பகைவர்கள் நமக்கஞ்சி நாற்றிசையிலுமோடி மறைந்த பின்னர், நெடுங்காலமாக அவர்கள் செய்தியும் அவர்கள் கதியும் இன்னவாருயின வென்பதை நம்படைவீரரில் ஒரு வராயினும் வந்து சொன்னுரில்லை. இக்கணத்திற்ருனே ஒற்ற ரைப்போக்கி அவர் செய்தியை உணர்தி என்ருன். அது கேட்ட கலியன், ஐயனே, நீ கட்டளையிடா முன்னமே ஒற் றரை நாற்றிசைக் கண்ணும்போக்கி விட்டேன். வெதுப்பு வித்த சிறுவித்துக்கள் முளைகொள்ளுவதுண்டா! அத்தன் மையராகிய நம்பகைவரது வலிமையும் எம்மனேடரித்துப் பலிக்குமா! எங்கணும் பரந்த காமன் முதலாயினுர் வீரப ராக்கிரமங்கள் எளியனவாமோ! என்று கூறினன். கூறி இதழ்மடிக்காமுன், அவன்விடுத்த ஒற்றரும் மீண்டுவந்தனர். வந்துமார்பு நிலத்திற்படியச் சாஷ்டாங்கமாக வணங்கி, எங் கள்இறைவனே! நமது படைத்தலைவர்களாகிய காமனுதி யர் உலகமெங்கும் தமது படைத்திறலைச் செலுத்திப் பகை வரது உருவும் புலப்படாவகை அவரை ஒடுக்கிவருவாராயி னும், மேகமின்றி மழைவீழ்வதுபோல இவ்வுலகில் இது காறும் இல்லாதனவாகிய சில அதிசயங்களுளவாகக் கண் டோம். காஞ்சியைக் காமனும் இரதியும் தமது இராசமா புரமாகக்கொண்டு அங்கிருந்தபடியே பூவுலகமெங்குங்கோ ல்செலுத்துவா ராயினும், மந்திரிவீட்டிலே மௌட்டிகம் நுழைந்ததுபோல, அவ்வூரிலேதானே மாதர்ஆசையைத் து றந்து அவர்தரு மின்பத்தைக் சிற்றின்பமென இகழ்ந்து, பேரின்பம் இன்னதெனநாடி, உதயமத்தியாஸ்த மயனகால ங்களிலே சந்தியாவந்தனம் ஓமம்முதலாய சற்கருமங்களை நடத்துவாரும் பற்பலராயினுர். அப்பால் யவனதேயம்கோ

பனது அரசிருக்கைத் தானமாகவும், அங்குஞ் சிலர்கோப மென்பதை மறந்து பொறையுடையராக விளங்கக்கண்டோம். லோபனது பதியிலே கருணையாலுண்டாகிய ஈகையும் தலையெடுத்திருக்கக் கண்டோம். மச்சரனுடைய நாட்டிலே பிறர்வாழ்வுகண் டநேகர்இன்புறவுங்கண்டோம். மானனது பெரும்பதியிலே அநேகர்முடிதாழ்குவதும் கண்டோம். சந்தேகன் அரசியற்றுகின்ற கொங்கணதேயத்திலே சிலர்கிச்சயன் சிஷ்ரானதும் கண்டோம். இவ்வாறே எவ்வெத்தலத்தும் ஓவ்வோர் புதுமைகண்டோம். என்னைமாயமோ புாமதியோம் என்றுகூறி, ஐயனே, இவையாம் கண்கூடாகக்கண்டவை. இனிக்கேட்டனவற்றையும் சொல்வோம் கேட்டருள், விவெகராஜன் தனது பரிவாரத்தவரை நம்மவர்போலவேற்றுருக்கொண்டு நம்மவர்களது பதிதோறுஞ்சென்று நம்மவர்வலியைக் கெடுக்குமாறு விடுத்திருப்பதுமன்றி, பிரமனுக்கு வாணிவயிற்றிலுதித்த உபநிடதையைத் தனக்கு மணம்பொருத்தி வருமாறு சத்துவன் மகளாகிய சிரத்தையைத் தூதுபோக்கியு மிருக்கின்று னென்றுகூறித் தமது வரலாற்றை முடித்தனர்.

இவற்றைக்கேட்ட மோகன், நச்சரவ மெனச் சீறி, உள்ளே பயமொருவாறுவாட்ட, அதனை மூடாந்தகாரத்துளிருத்தி, பித்தங்கொண்டான் போலநகைத்து, பக்கத்திருந்த கலியன்முதலான அமைச்சரைநோக்கி, இவ்வொற்றர் கூறினவற்றைக் கேட்டீர்களா! நன்றுகூறினர்! ஈடழிந்து நாடிழந்து காடுபுகுந்த விவேகனுதியர் மீள்வராம்! மீண்டுவேடமாறிநாடுசென்று அவரவர்க்கும் அறம்உரைப்பராம்! அவர்கள் செயலைநம்மவர் அறிவதரிதாம்! பிரமனது புத்திரியாகிய உபநிடதைமீது விவேகன் காதல்கொண்டனனும்! அவனுக்கு மணம்பொருத்தும் பொருட்டுச் சிரத்தை தூது போயினளாம்! அச்சுருதிமாதை * மணம்புணரும் யோக

* சுருதிமாது=உபநிடதை.

மும் அவனுக்குக் கிட்டுமோம்! ஆகா! நமது தூதர் நன்றுவந்து சொற்றனர்! மாதுசிரோன்மணியாகிய பாஷண்டவிஞ்சையை யாம்மணம்புரிந்து அவள்வயிற்றிலே பெற்ற அஞ்ஞகுமாரனைப்போல ஒரு குமாரனைப்பெற விவேகன் கொண்ட கருத்து நன்று! நன்று! அவன் விவேகம், புலியினது திறத்தைப்பூனைபொருந்த முயற்சிப்பது போன்றிருக்கின்றது. சிங்கேற்றினது வாய்ப்பட்டயானையை மீட்டற்பொருட்டுக்குறுமுயல்கள் திரண்ட செய்தியைப்போல, நமது தந்தையாலும் எம்மாலும் சிறைப்படுத்தப்பட்ட பிரமத்தை விவேகனுதியர் இரக்ஷிக்க முயல்வது தகும் தகும்! எமது தந்தை பிரமமாகிய எமது பாட்டனைச் சிறைசெய்ய, அப்பாட்டன் சிறிதும் பிறழாதவண்ணம் நாம் பாசவிலங்கிட்ட அந்நாளில் விவேகனுதியர்க்கு இல்லாதவலிமை இந்நாளில் வந்ததுபோலும்! என்று பலவாறு பரிகசித்து அத்தூதரை நோக்கி, நீவிர் இங்கே சொன்னவெல்லாம்யாதுமாராயாத அறிவிலா ரிடத்துக் கேட்டனவா, அன்றிக் கனவிலே நீர் கண்டனவா என்று வினவி அவரை இகழ்ந்தான். அதுகேட்ட ஒற்றர், மோகனைவணங்கி, ஐயனே, கண்டனவற்றையும் கேட்டன வற்றையும் சொன்னோம். இன்னும் விவேகனுதியர்க்கு யோகினிகளதருள் பெரிது முண்டென்றும், அவ்வருட்டுணை கொண்டே இத்துணை யெல்லாம் செய்யத் தலைப்பட்டன ரென்றும் அநேகர் கூறுகின்றனர் என்று சொன்னர்.

அதுகேட்ட விவேகன் புன்னகைசெய்து அவரை நோக்கி, பெண்கள்சொல்லைத்தலைமேற்கொண்டு திரிகின்ற விவேகனுதியர் ஆண்மை இறுவதன்றிச் செல்வதெங்ஙனமோ! போமின் என்முன்.

மோகனெற்றுக்கேள்விச் சருக்கம் முற்றிற்று.

# பத்தாவது இடம்பனுக்கு ஓலை விடு சருக்கம்.

அப்பால் மோகன் தன் அருகிருந்தகலியனை நோக்கி நீ நம் பகைவர்கள் இருக்குமிடங் கடோறுஞ்சென்று அவரை அடக்கி நம்படைத்துணைவருக்கு ஊக்கமூட்டி மீண்டு காசி நகரை அடைவாயாக; நாமும் இருதினத்தில் அந்நகருக்கு வரக்கருத்துற்றோம் என்று கூறி அவனுக்கு விடைகொடுத்து, மற்றொரு பக்கத்தில் நின்ற சாருவாகனை நோக்கி விஷமுந்தியுங் கலந்தாற்போல நீயுங்கலியனோடு சென்று, நற்றலங்கடோறும் மறைந்து வாசஞ்செய்பவர்களாகிய நம்பகைவரைப் பிடித்துக்கொண்டு வரக்கடவாய் என்று, கூறி அவனையும்போக்கினான். அதன்பின்னர், புத்தனையும் சமணனையும், காபாலியையும் அழைத்து, நீவிர்கற்றவித்தையை எல்லாம் ஆங்காங்குஞ்சென்று புகட்டி, வைதிக வித்தையை வேரோடுகளைந்துவிட்டுச் சத்துவ சிரத்தையைப் பிடித்திழுத்துக்கொண்டு வரக்கடவீர்என்றுகூறிஅவரையும் போக்கினான். அவர்கள்யாவரும் அங்குநின்றும் போயின பின்னர் அரசன் ஒரு தூதனை அழைத்து இன்னமாசம் இன்னநாள், இன்னநேரம் காசியை அடைவோம் என ஓர் ஓலைஎழுதுவித்து அதனைஅவன்கையிற் கொடுத்து, இதனைக்கொண்டு சென்று இடம்பனிடங் கொடுப்பாயாக வென்று ஏவினான். இது சமயத்தில் அங்கேகாசியில்; இடம்பன் ஒருபன்னசாலை அமைத்து அதிலே பரிசாரகர்பற்பலர் ஏவல்செய்து நிற்பத் தான் பதியாகவீற்றிருந்து செய்கின்ற பொய்மார்க்கங்களை எவ்வாறு கூறுவோம்! இராக்காலங்களிலே விதவையரை வரவழைத்து அவரோடு கலந்து இன்பந்துய்த்து லீலாவிநோதனாய் நிற்பன். பகலெல்லாம் அச்சிந்தையை மனத்திலே ஒரு புறத்தடைத்துக்கொண்டு

கண்டோர்யாவரும் தன்னைமகாத்துமா வென்று போற்று மாறு ஓமமும், செபமும்செய்வான்போல் நடித்து அக்கினி முகத்திருந்து வாய்மினுமினுத்து நெய்சொரிந்து, தருப் பை மாந்தழை, நெற்பொரி, அட்சதை சமிதைமுதலிய உப கரணங்களையிட்டு அக்கினியைவளர்த்துப் பவித்திரவிரலை மூக்கிலுங்காதிலுமாக முறைமாறிப்பொருத்துவன். அவ்வ க்கினி கோத்திர சாலையைக்கண்டு வருபவரை வாரும்! வாரும்! என்று அழைத்து அவர்க்கு வெண்ணீறுவழங்கு வன். நம்பெயர் சர்வஞ்ஞதீக்ஷிதர் என்றுகூறுவன். இது கண்டபலர் மெய்யென நம்பி அவனுக்குச் சீஷராயினர். அவரும் இடம்பனைப்போலவே இரவெலாம் வேசியர்மடி யிற்றுயின்று விடிந்த பின்னர்ச்சிதேந்திரிய னொன்றும், வே தவேதியனொன்றும், யோகியனொன்றும், தபோதனனொன்றும் தத்தமக்கிஷ்டமாகிய ஒவ்வொரு பெயர்புனைந்து அஃதற்கிசை யவஞ்சித்தொழுகுவர். இளவிதைவையருக்கு ஞானோபதே சஞ்செய்வார்போல அவளாவரவழைத்துப்பகலெல்லாம் அவ ர்க்குக்குருவாகி, மாலைப்போதகன்ற பின்னர் மாலைசூட்டிய நாயகர்போலாகுவர்.

இங்ஙனம் பலரைத்தனக்குச் சீஷராகக்கொண்டு உல கெங்கும் டாம்பிகத்தைப்பரப்பி, டாம்பிககுருவாய்க் காசி யிலே விளங்குகின்ற இடம்பன் முன்னே, முன்மோக வேந் தனது சமுகம்விட்டுப் புறம்போந்த தூதன் சென்றுவணங்கி ஓலையைக்கொடுத்தான். இடம்பன் அவ்வோலையை வாங்கி த்தன்சிரசிலே சூட்டிப்பக்கத்திருந்த சீடனிடங்கொடுத்து ப்படிக்குமாறு ஏவ, அவனும் அப்பத்திரத்தைப் பிரித்து, முழுதுமூன்றுலகும் புகழ்இராசமாமோகன் எழுதி டம்பனு க்கு அனுப்பியபத்திரம்—இரண்டுபொழுதில் யாமும் அக் காசிநகரத்தில் வந்து சேருவோம்; செயற்பாலன வாகிய கருமங்களைப் பழுதின்றி நடாத்துக என வாசித்தான்.

அவ்வாசகங்களைக்கேட்ட இடம்பன் ஆனந்தசாகரத் தழுந்தினவனாய்த் தனது தனதிகாரியைக் கூவி இத்தூதர்க்கு ஏற்றவாறு வரிசைவழங்கி அனுப்புகஎன்று ஆஞ்ஞாபித்துவிட்டு அப்பால் தனது புத்திரனாகிய அசத்தியனைக்கூவி, அவனுக்கு மோகவேந்தன் காசிக்குவருகின்ற செய்தியைக்கூறி, நமதரசன் வாசஞ்செய்யத்தகுவதாக ஒருமாளிகை அமைத்துக், கரும்பு வாழை கமுகுமுதலிய மங்கலவிருக்ஷம் நாட்டி, தோரணங்கள்மாட்டி, வாயிலிலே பந்தரிட்டு மேற்றுகில் விதானித்து, புஷ்பத்தொங்கல்பூட்டி, பூரணகலசமிட்டு அலங்கரிக்குமாறும், வீதிகள்தோறும் மதயானைகளைப் பந்திபந்தியாக நிறுத்தி வீடுகள்தோறும் மங்கலகும்பம் முதலியன இடுமாறும் ஆஞ்ஞாபிப்பாயென்றான். இங்கே இவ்வாறுநடக்க, அங்கே கவுடதேயத்தி லிருந்தபடி மோகவேந்தனது வருகையை உணர்ந்த அகங்காரன் அங்குநின்றும் நீங்கிக் காசியை யடைந்தான்.

இடம்பனுக்கு ஓலைவிடு சருக்கம் முற்றிற்று.

## இடம்பாங்காரச் சருக்கம்.

மானமானது எழுந்து மேற்சொலித்து வருவதுபோலவும், ஊனாலெடுக்காத நவீனதேக மெடுத்துள்ளான் போலவும் நடித்து, மனிதரெவரையும் வாய்மொழியால் மயக்கித் தான்கற்றதே வித்தை மற்றவர் வித்தையெல்லாம் வீண்என்றுநாட்டி இடம்பன் ஊர்வலம் வருவானாயினான். வரும்போது கங்கைக்கரையிலே யிருந்து நாலுவருணத்தினருமாகப் பலர் தருப்பணம், சந்திவந்தனம், ஓமம், ஜெபம்முதலியனவற்றைச் சிரத்தையோடு செய்திருப்பக்கண்டு தனது பத்தினியை நோக்கி, வருணமோ நான்கு. ஆச்சிரம

மும் நான்கு. அவ்வவ்வருணத்திற்கும் அவ்வவ் வாச்சிரம த்திற்கு முடன்பட்டார்போல் ஒழுகுகின்ற இவர், தாந்தாம் செய்யவேண்டுவன இவை, இவற்றின் இயல்பு இவைஎன் பதுணராது தாங்கொண்டதே மெய்க்கொள்கையென்னுங் கருத்தினராய் மகாசீலர்போல ஒழுகுவதை உற்றுநோக்கு மிடத்து, இக்கள்வரை உணர்வில்லாத இரண்டுகால் மிரு கங்கள் என்றேகூறல்வேண்டும். இனி, இங்கே வேதாத்திய யனம் பண்ணுகின்ற இவர்கள், வாயில் வந்தவாறு கத்துவ தன்றி, சுரம், பதம், கிரமம், சடை, அவரோகம், ஆரோகம், பொருள், தேசம், காலம், நற்பருவம், மாத்திரை, மங்க ளாசாரம் என்னும் வேதவோத் திலக்கணங்களை ஒரு சிறிது முணரார்கள். அப்பால், இவன் அவதானி, இவன் கிரம தாடி, இவன்சடாவல்லவன், இவன் உபாத்தியாயன், இவ ன்வேதபட்டன், இவன் அத்தியாபகன் என்று நவநவ மாகப் பெயர்பலபுனைந்து தானுதிகள்பெற்றும் திவசம்புசி த்தும் உலகைவஞ்சிக்கின்ற திருடர்கள் இவர்கள். இன் னும் என் நங்காய்! உலோகாயதம், பவுத்தம், சமணம், நை யாயிகம், காபிலம் முதலிய சமயங்களினது கொள்கை களை யெடுத்துக்கூறும் நூல்களின் புத்தகம் இருந்தவூரி லும் கால்வைத்தறியாத இவ்வேஷதாரிகளை உன்கண்ணாற் பார்ப்பாயாக.

தருக்கசாத்திரத்தி லிவர்மிகப்பெரியர்; சாங்கிய சாத் திரத்தி லிவர்மிகநிபுணர்; வேதாந்தசாத்திரத்தி லிவர்மிக வல்லுநர்; மீமாம்சையி லிவரதிசதுரர்; யோகத்திலிவர் வெ குதுரந்தரர்; வியாகரணத்தி லிவர் பரமசிரோஷ்டர் என இவர்கள் தாம் தாம் கட்டிக்கொண்ட பட்டங்களோ பெ ரும்பட்டங்கள். சுவடியும், கயிறும், கம்பையும், நீண்டவெ ண்சோமனும், உத்தரிகமுந் துலங்குமாறு அதிசம்பிரம மாக வீற்றிருந்து, பரமவஸ்துவை உணர்த்துபவர்போல் நடி

த்து, பொற்பவித்திரத்தைஅணிவிரலிலேயிட்டு, அடிக்கடி அவ்விரலை நீட்டி அதனாற்சுட்டி, காதிலேதுலங்கும் மகரகுண்டலங்களை அசைத்து, இக்குருக்கள்வர்கள் செய்கின்ற கூத்தெல்லாம் பொன்கவரும் பொருட்டன்றி வேறுமுண்டோ? இக்கள்வர்கள் சூதை உலகத்தி லெந்தக்கள்வர்கள் கற்றார்கள்!

ஆதிநாளிலே வைஷ்ணவவேதத்தை ஆயிரந் தமிழ் நூல்களாக இயற்றி அதை ஓதியும் நாவழுந்தப்பெருதவரா கிய பொய்கைஆழ்வார், பூதத்தாழ்வார் என்பவர்களடைந்த பேற்றினைச்சிறிதுமுணரார்; இஃது இன்னார்சொன்னதுஇது பிரபந்தம் இது திருவாய்மொழி என்று காதினாற் கேட்டமறியார், வினவியுமறியார். இது பாஞ்சராத்திரம், இது வைகாசனம் என்றுபகுத்துமுணரார். இஃதவர்களியல்பாகவும், பாட்டாசாரியர், அழகிய நம்பி, உபயவேதாந்தாசாரியர், இராமானுசாசாரியர் என இணையற்றநாமங்களைத் தரித்துக் கொண்டு உடம்பெங்கு மிடையிடையே எண்ணிலக்கின்றி வெண்மண்ணிட்டு அதன்நடுவே தக்கதிருச்சூரணந்தரித்து, நீர்க்காவி யேற்றியவஸ்திரம் அணிந்து, துளசிமணி, தாமரைமணி மாலைகள்புனைந்து, மூப்பு இளமை சாதிவேற்றுமை நோக்காது எல்லாயும் அடியேன் தாசனென் றிறைஞ்சிப் பிறர்பொருள் கவர்ந்துகொண்டு முத்திராதானஞ்செய்து மாசில்லாதவர்போல் இங்கேஇருக்கின்ற இவர்களுக்கு இணையாகத் தக்கவர்யாவர்!

இனி, என்மனோரதி! வருக அப்பாற்செல்வாம். இங்கேபார்த்தனையா! இரவெல்லாம் காமக்கணிகையரது மயக்கத்திலே அழுந்தி, பகலெல்லாம் வெண்ணீறும் உருத்திராக்ஷமும் அணிந்து குருக்களாகிப் பூனையுந் தோற்கத்தக்க குழைவும் பாவனையும் உடையராய்ச் சிவார்ச்சனை பண்ணுகின்றவர்கள்போல உருப்பரப்பி மணிதொட்டாட்டிச்

சனங்களை வஞ்சிக்கின்ற இவர்கள் வேஷமோ மிகக்கொடிது! கொடிது!!

நாயன்மார்களது தேவாரத் தெள்ளமுதத்தை உள்ளவாறு உண்ணாமலும், திருமூலர் செய்தருளிய திருமந்திரத்தை உணராமலும், அருளைக்கொடுத்து அறநெறியைக்காட்டுவார் போலநடித்துப் பொருள்பறிப்பதே தலைநோக்காகக் கொண்டு இங்கே கூடியிருக்கின்ற இக்கள்வர்கள் செய்கின்ற கூத்தெல்லாம் சாண்கும்பி தூர்க்கும்பொருட்டன்றே!

குடத்தினுள்ளே மலமானது நிறைந்திருக்க அதன் புறத்தே மாத்திரம் நன்னீரினாலே கழுவுதல்போல, தருமத்தையும் அன்பையும் துடைத்தமையினாலே தம்உள்ளத்திலே அருதமலம் இருக்கவும் தண்ணீரினாலே புறந்துடைத்து அங்கம்முழுதும் வெண்ணீற்றைப் பூசினிக்காயென அணிந்து, பறந்துபறந்து பற்பலர்கைப்பொருளைக் கொள்ளை கொள்ளும் பொருட்டே இவர்கள் சைவப்பழங்களாயினர்.

இங்கே சிலர் துறவிகளென வேஷம்பூண்டிருப்பதைப் பார்த்தனையா! மயிர்களைத் திரட்டிக் கொன்றைக்காய்கள் போல் ஒட்டிநீட்டித் தலைக்குச் சுமையெனும்படியாக நிரப்பிக்கட்டிப் பெரியசடாதாரியென்ப் பெயர்பூண்டு ஒழுகும் இத்துறவிகளுடையமனக்காதலைஅளக்கப்புகுந்தால் அஃது அவர்சடைக்கொழுந்தினும் நெடிதாகக்காணலாம். நகரங்களிலேயுள்ள மடங்கள்தோறும் சென்றுபுராணிகராயிருந்து தருமநெறி யெடுத்துரைப்பார்போலக் கையிலே ஏட்டைத் தாங்கிக்கொண்டு யாதோ சில கூறும்போதெல்லாம் அரிசிகாய் கனி கொண்டுவருபவர்மேலே கண்ணும், வாக்கிலிச்சகமும், மனத்திலே வஞ்சமும் உடையராய் நிற்பாராயின் அவர்களைப் பிறர்பொருள்மேல் விருப்பற்றவரென்பது எவ்வாறுகூடும்! இவர்கள் பாவனையை இவ்வுலகில் யாவர் தாம்படித்தார்.

மூங்கிலிலைபோற் கோபிசந்தனமும், முத்திரைப் பொறிகளுமிட்டு அதனிடையே கரிக்கோடு தீட்டி அங்குல தூரத்துக் கொவ்வொன்றாகப் பலசெம்புகள் நிரைத்து அங்கே சமீபிப்போரை நீங்குமினென்றுவிலக்கி அடிமேற்குந்தியிருந்து பல்வாறுநடித்துத் தம்மைத்தத்துவரென்றுகாட்டி உலகினையெத்துபவர்கள் இங்குள்ள இக் கள்வர்கள்.

அப்பால் தலையைப் பனங்காய்போல முண்டித்து, காவி வஸ்திரந்தரித்து, சீடராகப்பற்பலரைப் பின்செல்லத் தூண்டிச் சந்நியாசிகளெனப்பெயர் பூண்டு, தண்டு கமண்டலந்தாங்கி ஆதரிப்பவர் மனைகடோறும் புகுந்துவயிறுவளர்த்து ஊர்கடோறுமுள்ள மடங்களிற்குடிகொண்டு, உபநிடதத்து உட்பொருளைச் செவ்வேயுணராது தாங்கற்றதை யொருவருக்கொருவரோதி அத்துவிதமார்க்க மிதுவெனக் காட்டுவார் போற்காட்டிக் கண்தெரியாக்குருடர் தம்போலுங்குருடருக்கு வழியெடுத்துரைத்தாற்போலச் சொற்பயன்விளக்கித்தியக்கமுற்று யாதுந்தெளிவுறாதவர்களே இக் கூட்டத்தவர்கள்.

சீதளமாகிய கற்படையிலே தருப்பாசனம், கம்பளாசனம், புலித்தோலாசனம் முதலியன இட்டு, அவற்றின்மீதிருந்து, பட்டு வஸ்திரம் போர்த்து மெய்ம்மையாகிய செபம் செய்வார்போலவிழியினைப்புதைத்து,வாயினால் மிணுமிணுத்து இறுமாந்தகோலத்தோடு இவர்கள் செய்யுமிடம்பம் அம்மம்ம! எத்தனை! எல்லாம்பொருள் கவர்தற்பொருட்டன்றோ. இயல்பாகிய பசியைத்தீர்ப்பதற்கு உபாயமறியாது முக்கவையினதாகியநாமஞ்சாத்திக் காவிப்பூந்துகில் உடுத்து விரதசீலர் போலயார்க்கும் வணக்கமுடையராகி இவர்களொழுகுகின்ற உபாயந்திருமால் கோவிலினமுதம் புசிப்பதற்கன்றோ.

இப்பால் மத்துவகுருவாகியஇவன்சந்நியாசத்திலே புகுந்தும், பிறர்பொருட்பிரியமாகிய பித்தம் மேலேபடர்ந்து மூடினுலொப்ப உடம்பிலே காவிவஸ்திரந்துலங்க, சங்கமுதலிய பலவாத்தியங்கள் முழங்க, பொற்சிவிகைமேல் வருவதை நோக்குமிடத்து இங்குபாமிதுகாறுஞ் சுட்டிவந்த பெயர்களெல்லாம் பாக்காகவும், இவனைக்கமுகந் தோட்டமாகவுங் கூறலாம்.

ஆதலால் என் பிராணநாயகீ! இங்கே இவர்களைப்பார்த்து இவர்களோடு ஒரு வார்த்தை இயம்பினும் எண்ணில்லாத கொடியதீங்குவந்தணையும். இனி இங்கு நாமிருத்தலாகாது என்று இடம்பன் தன்மனைவிக்கு உரைத்து அங்குள்ளார்யாவரையும் நோக்கி இகழ்வுற நகைத்துத் தன்பரிவாரத்தோடு அங்கு நின்றும்நீங்கினன். அச்சமயத்தில் அகந்தைநாயகனுகிய அகங்காரன் காசி எல்லையையடைந்து சமீபித்துச் செல்லும்போது முனிவராச்சிரமம்போல் விளங்குகின்ற ஒரு மனையைஎதிரிற்கண்டான். அந்நகரத்துவீதியிலே அடுத்தமனைகள்யாவற்றினும்இந்தமனையானதுஉயர்ந்து விண்ணளவாயோங்கியது; தருப்பையினல்வேயப்பட்டது; ஓரமெல்லாம்பச்சிலையினலே பொதியப்பெற்றது; சந்திரகாந்தியானது பகலினுமுண்டாகிய தென்னுமாறுசுவரெல்லாம் வெண்சுண்ணம் தீற்றப்பெற்றது; அச்சுவரெல்லாம் சித்திரமியற்றப்பெற்றது; எப்புறத்தும்பந்தரிட்டுமாந்தழைத்தோரணம் பரப்பப் பெற்றது ; வாயிலிலே மூங்கிற்றம்பங்கள் இரண்டு ஆகாயத்தையளாவிநிற்க அவற்றின் நுனியிலே பட்டுக்கயிற்றினற் பூட்டப்பட்ட காவிக்கொடிகளையுடையது. அக்கினிவேள்வியின் கண்ணே எழும்புகின்ற புகைபோல அமுதடும் புகையும், காய்ச்சப்படுகின்ற நெய்யினது வாசனையைக் கொண்டெழும்புகின்ற நறும் புகையும், தழலிலே யிடப்படுகின்ற சாம்பிராணிப்புகையும் ஒன்று கூடி இமய

மலைக்கொழுந்துபோலத் தன்னிடத்தினின்றும் எழுந்து விண்ணிலேறப்பெற்றது. காமதேனுவையொத்த பற்பல பசுக்களைக் கழுத்திலே மணித்திரள்கள் கணகணென் றொலித்திட வலங்கரித்துத் தாமணியிலே நிரையாகக் கட்டிவைத்து அவைதருகின்ற பசுமையாகிய கோமயத் தைப் பற்பலராலடிக்கடி கொணர்வித்துச் சானவிதீர்த்தத் திலே கலந்து மெழுகப் பெற்றது. யாகசாலையும், அர்ச்சனசாலையும், தியாகசாலையும், ஜெபசாலையும், பாகசாலையும் பண்டசாலையும், மருவப்பெற்றதாய்ச் சதுரமாகிய விச்சித்திரக்கோலங்களெங்கு மிடப்பெற்றதாய் வாயிற்படிகடோறும் புஷ்பகந்த அக்ஷதை இடப்பெற்றதாய், செம்பு, தம்பிகை, கெண்டிகை, காசண்டி, செப்புக் கும்பம், வட்டகை, கொப்பரை, கடாரம், கும்பா, பொற்றளிகை, பொற்காளாஞ்சி, பொற்றும்பாளம், மயில்முடியுடைய தூண்டாக்குத்துவிளக்கு, தீர்த்தவேதி, வெண்சங்கு, தர்ப்பணம், தூபம். தீபம், கைம்மணி, பஞ்சபாத்திரம், ஆலவட்டம், சத்திரம், சாமரம்முதலிய தேவபூசைக்கேற்ற உபகரணங்களெல்லாம்பொருந்தப்பெற்றது. இவ்வாறுகுறைவற நிறைந்துவிளங்கிய அம்மனையின்கண்ணேபரிசாரகர்கள் விடிய ஐந்துநாழிகையுண்டென எழுந்து கங்கையிலே நீராடி மோனராகிப் பத்திரங்கட்டி வாய்மூடி தவளச்சாம்பரினும், புளியினும் மேற்சொன்ன உபகரணங்களையெல்லாம் பொன்போலவிளக்கி, உரல் உலக்கை யந்திரம் சுளகு ஆட்டுக்கல் யூபம் தீக்கடைகோல் அதுகடைகயிறு அக்ஷதை நெற்பொரிதுடுப்பு அம்மி சகடம், மான்றோல் புலித்தோல் மரவுரி, அறுகு முஞ்சி தருப்பைமுதலிய புற்றிரள், அரசு பலாசு எருக்குவன்னி அத்தி நாயுருவிமுட்கருங் காலிமுதலிய சமிதைத்திரள் ஆகியயாகத்துக்கு வேண்டும் உபகரணங்களை எல்லாம் இடையிடையே நிரப்பி, திருப்பள்ளித்தாமம் திருமஞ்சனம் தீர்த்தம் அபிஷேகம் மாத்தி

ரவியம் களபசந்தனம் முதலியனயாவும் கொணர்ந்து கைகூப்பி எதிரில்வைக்க, அம்மனைக்கு அதிபனாகிய இடம்பன் காதுகளிலே இரத்தினப்பொற்குண்டலங்களும், கைவிரல்களிலே பொற்பவித்திரங்களும் அணிந்து, மார்பிலே பொற்பூணூலும் இடையிலே பொன் அரைஞாணுமிலங்க, இருசெவிக்குமிரண்டு இருகைக்கு மிரண்டு தலைக்கொன்று இடைக்கொன்றாகத் தருப்பைப்புல் சாத்தி வெண்பட்டுச்சோமனும் உத்தரிகமும் தரித்து, இரத்தினக்குடைமேலே நிழற்ற கால்நிலத்திலே சற்றேபொருந்தகினும் அதனையடிக்கடி நீரினாலேவிளக்கவும், ஆசமனஞ்செய்யவும், பாத்திரங்களிலே ஜலத்தை யேந்தி நாற்பக்கமும் பரிசாரகர்சூழ, தன்போல்பவராகிய நண்பினர்கள் வருங்கால், அவர்வீற்றிருக்க இரத்தினகம்பளம் வட்டப்பலகை சதுரப்பலகைமுதலிய ஆசனம் இருமருங்குங்கிடப்ப, சேமக்கலமும் கண்டாமணியும் இடைவிடாதொலிசெய்ய யாக கர்த்தாவாக வீற்றிருந்து சூரியயந்திரமொன்றை எதிரில்வைத்து அதற்குப் புஷ்பமும் அக்ஷதையும் அறுகுஞ்சொரிந்து கன்னம் மார்பு தோள் இதழ் நாசி நெற்றி முழங்கால் முதலியதானங்கள் மண்ணிலே பொருந்த வீழ்ந்து எழுந்தெழுந்து வணங்கிக் கண்டவர்யாவரும் பரமபக்தனென்று காணிக்கைவைத்து அடிபணியும்படி நடிப்பவனாயினான்.

இவ்வாறு உலோபன்மகனாகிய இடம்பன் எண்ணில்லாத வஞ்சம்புரிந்திருக்கின்ற காலையில், அகங்காரன அந்த மனையைப்பார்த்து, இந் நகரில் இம்மனை யாவர் மனையோ! உண்மையாகிய விரதசீலர்கள் வாசஞ்செய்கின்ற மனைபோலிருக்கின்றதே! யாவராயினுமாகுகஇரண்டுதினமிங்கிருந்து அவர்பண்ணுவது பாவனைதானா அன்றிப்பக்திதானாவென அறிவேன் என்றுகூறித்தனதுதேவியோடும் அம்மனையிற் சென்றான். சென்ற அளவில் எதிரேசூரியவந்தனை செய்

வான்போன்று நின்ற இடம்பனைக்கண்டு அவனையடுத்து ஐயவாழி வாழி என்று ஆசிகூறினன். அதுகேட்ட இடம்பன் அவனுக்கு அஞ்சலிசெய்யாது முகங்கடுத்தான்.

அதுகண்ட அகங்காரன், ஆசிகூறியவெமக்கு அஞ்சலி செய்யாது கடுப்போடுகோபித்த இவன்யாவன்; இவன்தன்மையாது இம்மனை துருக்கர் வாசஞ்செய்கின்ற மனைபோலும் என்று இகழ்ந்து முன்வைத்த அடியைப்பின் வாங்கிக் கொண்டு அங்குநின்றும் பெயர்ந்தான். அங்ஙனம் பெயர்ந்த அவனை இடம்பன்பார்த்து அவனைச் செல்லாவண்ணம் கையமைத்துவிட்டுப் பக்கத்திருந்த ஒரு சீடனைப்பார்த்தான். பார்த்தவளவில் அவனுள்ளக்கருத்தையறிந்த சீடன் அகங்காரனைநோக்கி ஐயனே! காமதேனுவையுடைய வசிட்ட முனிவன்றானும் இங்குவருவானாயின் வாயிலினின்றுகால் கழுவியன்றிப்புகுதல் செய்யான். பிராமணர்முதலியோருக்கு ஏனைய ஆச்சிரமங்களில் கூசாதுசெல்வதியல்பாயினும் நம்மாச்சிரமத்துக்கு வருதல் எளிதன்று; நமது குருமூர்த்தியினது ஒழுக்கங்களைக்குறித்து உமது நாட்டிற் கேட்டறிந்த தில்லையா! நமது மனையினது புனிதத்தைப் பார்த்தாயினும் இங்குப்புகுதல் தகுதியல்லவென்பதுணர்ந்திரில்லையே! கால் கழுவாமல் இப்புனிதமாகியமனையிடத்தின்வரின்யாவர்தாம் அதனைச்சகிப்பார். இத்திருமனையினுள்ளும் புறமும் உண்டாகிய சுத்தியைக்கண்கூடாகக்கண்டும் துருக்கர்மனையென்றீரே. இதுவோ உமது புத்தி! உம்மிடத்துண்டாகிய கோபம் போர்ப்பிரியராகிய க்ஷத்திரியரிடத்து முண்டாசாதே! உம்மிடத்திலே செம்பில்லையா? அன்றித்தண்ணீருமக்குத் துவேஷப்பொருளா? ஆசாரபரனாகிய உம்மிடத்தொரு செம்பில்லையாயின் வாயிலிலிருந்தபடியே எம்மை விளித்துச் சிறிது ஜலங்கொடென்றுற் கொடோமோ என்று கூறி, போனதெல்லாம் போகுக, நீர் எழுந்தருளும் என்று

ஒருசெம்பிலே ஜலத்தையெடுத்து அகங்காரன்முன்னேவைத்தான். அகங்காரனும் இது நன்று நன்றென நகைத்து அதனைவாங்கிக் கன்றிய மனத்தோடுசென்று கால்கழுவிவந்தான். வந்து அங்கிருந்த ஓர் அலங்காரமான ஆசனத்தின் மீது உட்கார அதனையடுத்தான். அடுக்குமுன் மீண்டும் இடம்பன் அவனைக் கோப முகத்தோடு நோக்கினான். அதுகண்ட முன்னைய சீஷன் அகங்காரனைப் பார்த்து ஐயனே! யாது செய்கின்றீர்? கையிலே ஒரு விசிறிதானுங் கொண்டுவந்தீரா? அஃதன்றி நும்முடம்பிலுள்ள வியர்வையைக் காற்றுமுகத்துச்சென்று நீக்குவோமென்றாயினு மெண்ணினீரா? ஒழுகுகின்ற வேர்வையோடு, நங்குருமூர்த்தி யெழுந்தருளுகின்ற பீடத்தி லேறப்போகின்றீரே; இஃதென்னே! முன்பின்யோசனையின்றிப் பொருக்கெனச் சென்று பொற்பீடத்தின்மேல் இருக்க நினைக்கின்ற வுமதுபுத்தி பேதைமையன்றோ! நமது குருமூர்த்தியினது குறிப்பையுணர்ந்தன்றோ நீரிருத்தல்வேண்டும். இஃது உமது அகந்தையோ, அன்றி அடங்காச்செருக்கோ! பெரியோராயின் இங்ஙனஞ்செய்ய மனம்பொருந்தாரோ என்றுகூறி அவ் வாசனத்துக்குப் பக்கத்தில் ஓர் ஆசனம் அமைத்து இங்ஙனம் எழுந்தருளுமென்றான். அதனைக்கேட்ட அகங்காரன்மனம்மறுகி, கவுதமர், வசிட்டர், காசிபர், மரீசி, முதலிய் தவமுனிவர்கள் பலரோடும் பழகி யறிவோம்; அவரவர் நிஷ்டையும் அன்பும் இவ்வளவென்பது மறிவோம். ஆயினும் இவரிடத்துக் கண்ட புதுமையை எவரிடத்துங் கண்டதில்லை என்றான்.

இவ்வுரையைக் கேட்ட இடம்பன்சீடன் அகங்காரனை நோக்கி, நீர் கூறியதொக்கும். அதிற் சந்தேகமுமுளதா! நங்குருமூர்த்தியினுடைய பெருமைசொல்லும்படித்தோ! இப்பூவுலகிற் சக்கரவர்த்திகளெல்லாம் கையினாற் புஷ்பமெடுத்து அருச்சித்துத் தங்கள் பொற்கிரீடங்களோடு வெகுதூரத்தினின்று பாதங்களை நோக்கி வணங்கிப் பாதுகைகளுக்குத் தூபதீப மிடுவதென்றால் மற்றுப் பேசக்கிடப்ப தென்னையோ! எமதுகுருமூர்த்திகையில் திருநீறு வாங்கும்பொருட்டு அவர்க்குப் பாதகாணிக்கையாகப் பொற்பீடம் கம்பளம் இரத்தின

மணி பொற்சிவிகை விளைநிலம் பசும்பொன் முதலியனகொ டாத அரசர் யாவர்! புண்ணிய தினங்கள்முதலிய பலகாலங் களிலும் நான்குவருணத்துள்ளும் எண்ணில்லாத பலகோடி சனங்களாற் கொடுக்கப்பட்ட அவ்வளவுபொன் குபேரனி டத்து மில்லை யன்றே! இவைதாமா! பலராலுங் கொடுக்கப் பட்ட பசு, எருமை, ஆட்டுக்கடா, பீதாம்பரம், நென்மலைமுத லிய விவைசொல்லி முடியாவன்றே-என்று இடம்பனுடைய பெருமையையெல்லா மெடுத்துச் சொன்னான். சொன்னவள வில் அகங்காரன் தனதுகைகளைப் புடைத்துத் தோளுந் தலை யுந்துளக்கி, நன்று! மிகநன்றென்று நகைத்து, ஆகமவேத புராணவிதி யாவையு முணர்ந்து அவ்வாறடங்கி ஒழுகுத லொழிந்து, தம்மைவருகின்ற அரசர்களைப் பணியச்செய்து அவரிடம் பொருள்பறிக்கும் சூதுத்தொழில் ஆன்ற பெரி யோர் செய்கையாமோ! அன்பு, அறிவு, சத்தியம், உபகாரம் என்னும் வேதிய ரிலக்ஷணங்கள் உள்ளபடி யமையப்பெறாத அவரைப்போற் பாவனைசெய்கின்ற மார்க்கம் பேதையர் அணி கின்ற பூச்சிட்ட ஆபரணங்கள் போலாமன்றே என்றான்.

அதுகேட்ட சீடன், இணையற்றவராகிய குருமூர்த்தியினது உண்மையையும், உள்ளன்பையும் பிரமாதிதேவர்கள் அறிந் துணர்வதல்லால் உம்மால் அவை அறியப்படுந் தன்மையவோ என்று மறுக்க, அகங்காரன் நம்மாலுணரப்படாத தொன்று இப்புவனங்களிலு முண்டோ! பிரமாதியர்தாமும் நம்மைப் போலொன்றை ஆழ்ந்துணரவல்லரோ! உன்வாசகம் இனிது இனிது என்று நகைத்தான். அவன் நகைத்ததைக் கண்ட இடம்பன், இவர்யாரோ மகாவேதியர்போலு மென்றெண்ணித் தன்னுடைய நியமத்தைவிட்டு, ஓர் ஆசன மமைத்து அவனை யதிலிருத்தித் தானும் பக்கத்தி லோருயர்ந்த வாசனத்திருந்து அவனைநோக்கி, என்மனைக்குவந்த உம்மை நோக்குமிடத்து யாரோ பெரியவர் போற் றோன்றுகின்றீர். என் நகர்க்கு நீர் வந்தது பெரியதொரு விசேஷமே. ஆயினும், என் மகத்துவ மெல்லாவற்றையுஞ் செவ்வேயுணராம லவற்றிற் சிறிதிழுக் குண்டாக்கினீர்; அது நன்றன்று. ஆயினும், ஆராய்ந் துணரு

ரியல்பில்லாதவர்கள் பரிசுத்தராகிய பெரியோர்க்குப் பழுது சொல்வாராயின் அதிற்ரோஷமென்னே! என்பெருமையை நானேகூறுவது தக்கதன்று. ஆயினும், ஒரு சிறிது எடுத்துச் சொல்வேன் கேளும்.—

பிரமன் ஒருசமயத்திலே கன்மவிதி யொன்றிற் சந்தேகமுடையவனாகித் தன் அன்னவாகனத்தை இங்குவிடுத்து என்னைப் பிரமலோகத்துக்குவருமாறு செய்தியனுப்பினான். அங்ஙனம்வந்த அன்னமானது கங்கையில்மூழ்கி என்னையடுத்துப் பிரமன் சொல்லிய செய்திகளை என்னிடஞ்சொல்லி உம்மைச் சுமந்துபோவதற்கு இங்குவந்தேன் எழுந்தருளு மென்றது. யானும்நன்றென்று அதன்முதுகின்மேலேறித்தேவலோகவழியாகச் செல்லும்போது, எனது செல்கையைக் கேட்டுணர்ந்த இந்திரன் நெடுந்தூரம் எதிர்வந்து, இன்று இந்நகரில் எழுந்தருளி நாளைச்செல்லுதல் வேண்டுமென்று என்னைவணங்கி இரந்தான். அதற்கு யானும் இசைந்து அன்று அந்நகரில் எழுந்தருளி அங்கிருந்து அடுத்த நாள் பிரமலோகஞ் செல்ல எத்தனித்தபொழுது இந்திரன் தனது ஐராவதத்திலேறி என்பின்னே தொடர்ந்தான். தொடர்ந்தவனோடும் பிரம லோகஞ் சென்றேன். அங்கே சனகாதியரும், யோகியரும், சப்த இருஷியரும் ஏனைய தபோதனரும், மற்றைய பெரியோரும் தற்சூழப் பிரமன் எழுந்தருளியிருந்த சபையின்கண்ணே யான் சென்ற அளவில் என்னைக்கண்ட முனிகணங்களெல்லாம் எதிரெழுந்துவர யானும் அன்னத்தை விட்டிழிந்து அவரோடு முன்னேசெல்ல அதுகண்ட பிரமனும் பொருக்கென எழுந்து எனக்கு ஆசனமிடக் கருதி, அந்தோ! இங்குள்ள ஆசனங்களெல்லாம் முனிவராற் றீண்டப் பட்டவைக ளாயினவே; இதற்கு யாதுசெய்வேன் என ஒருநொடியிற் சிந்தித்துத் தெளிந்து, நன்று, நமது தொடையையே ஆசனமாக இடுவேன் என்று துணிந்தான். துணிந்தும், நமது தொடையும் வாணியாற் றீண்டப்பட்டதாயிற்றே. ஆயினும், காமதேனுவினது கோமயத்தினாற் சுத்திசெய்து அதனை ஆசன மாக்குவேன் என்றுகருதி அங்ஙனஞ் செய்து தனது தொடையின்மீது எழுந்தருளுமாறு வேண்டினான்.

அதற்கு யான் உடன்பட்டதைக் கண்ட பிரமன் தான் முதற்கண் தனதாசனத்தின்மீ தெழுந்தருளி, நின்ற என்னைக் கையினாற்பற்றித் தழுவித் தன் மடிமீதிருத்தி உபசாரமொன்றோ அநேகம் புரிந்தான். அங்ஙனம் யான் எழுந்தருளி அரைநொடி யாகு முன்னே தன் மனத்தி லெழுந்த சந்தேகம் நிவிர்த்தியாகப் பெற்றுப் பேராச்சரிய வசத்தனாகி என்னைப் பார்த்து, குருமூர்த்தி, உமது இனிய அருளினாலே என்சந்தேகம் நிவிர்த்தியாயிற்று என்று கூறிப் பலவாறுபுகழ்ந்து, இனி நீர் இங்கிருக்கில் உமது நித்தியகரும நிஷ்டைக்குத் தாழ்வு செய்தவனாவேன் என்றான்; யானும் உண்மையேயென்றேன். அதுகேட்ட பிரமன் மீளவும் என்னைச் சுமந்து செல்லுமாறு தனது அன்னத்தை விடுத்தான். இன்னோரன்ன எனது தகைமைகளை எடுத்துக் கூறப் புகுந்தால் அவை எண்ணில வாம் என்றான்.

அதுகேட்ட அகங்காரன், இதுபோலும் பொய் உலகத்தி லுண்டாவென ஆச்சரியமுற்று நகைத்து, பொய்யென்பது இவனிடத்துத்தான் உற்பத்தி யாயிற்றோ! அன்றிப் பொய் தான் திரண்டு இவ்வுரு வாயிற்றோ!! அதுவுமன்றிப் பேர் பெற்ற இடம்பன் இவன்றானோ! அல்லனேல் அவ் விடம்பனுக்கு இவன் குருவாயுள்ளவனோ! எனப் பலவாறுசிந்தித்து இவன் யாவனாயினு மாகுக. இவன் செருக்கைத் தொலைப் பேன் என அகங்கரித்து, இடம்பனைப் பார்த்து, இன்ன குலம் இவள் தாய் இவன் பிதா இது நகரம் என்ப தின்றியும், தன தென ஒருநகரமும் அதற்குப் பிரதிட்டையு மின்றியும், தன் மனைவியை நாவிலடக்கிக் காத்தும், அவள் பற்பலரிடத்தும் அன்பு காட்டிப்போய் உறைதல்கண்டு நாணத்தால் முகம்வெளுத்தவனாகியும், நீண்டகாலம் தான் ஓதிய வேதத்தைப் பகுத்துணரும் பண்பற்றவனாகியும், சின்னாட்டொகுதியாகிய கற்பமொன்றிலே உயிர்திர வருபவனுமாயுள்ள பிரமனாலே அழைக்கப்பட்டு அவனிடஞ்சென்ற வுன்னை அவன்கண்டெழுந்து சற்காரஞ்செய்து தன் தொடையி லிருத்தி விடுத்த அப்பெருமை உன்போல்வாருக்குப் பெரிதாமன்றி நம்போல்வாருக்குப் பெரிதாமோ! நன்று கூறினை!

ஆற்றினிடத்து வலைச்சி வயிற்றுப் பிறந்தவரும், காணற் ாற்றிடைப் பிறந்தவரும், குடத்திடைப் பிறந்தவரும், வேர் வயிற்பிறந்தவரும், உள்ளத்துப்பிறந்தவரும், மானிடத்துப் பிறந்தவரும், கிளி உதரத்துப் பிறந்தவரும் ஆகிய இவர்கள் திர்சென்று கண்டதும், இந்திரன் ஐராவதமேறி எதிர்சென் தும் உன் மதிப்புக்குப் பெரும் பெருமை யாயின போலும். ப்படி யெத்தனை முனிவர், இப்படி யெத்தனை தேவர், இப் டி யெத்தனை இந்திரன், இப்படி யெத்தனை பிரமன் நாம் ாய்திறந்து அழைக்காமுன்னே அடியேங்கள் செய்யவேண் டியபணி யாதென்றுவந்து நம் வாய்மொழியைத் தஞ் சிரமேற் கொள்வார்! பங்கமற யாம்செய்த பெருந்தவத்தின் பலத்தி றலே எத்தனைகோடி கற்பங்களை இதுகாறுங்கண்டு கழித் தம் எமது கண்முன்னே யெத்தனை பிரமாதியர் இறந்து போயினர். அட்ட கோணத் தற்பங்கன், ரோமசன், தால ங்கன் என்னு மிவர்கள் முடிவுங்கண்டேம். குலத்தளவி லோ, எதிர்காலத்திற் றானும் நம்போல்பவர் யாவர்! நம் தே த்தை யெடுத்தாலோ கவுட தேயத்தினும் சிறந்த தேயம் யாது? தெக்ஷண ராடா புரமோ பொன்னகரிலுஞ் சிறந்தது. ரிச் சிரேஷ்டமென்னும் நம் கோத்திரமோ மற்றெதனினுஞ் சிறந்தது. அக்கோத்திரத்திற் பிறந்தவர்களுள்ளே எமது தந் தை அதிகன். அவருக்குப் புத்திரராய்ப் பிறந்த பலருள்ளும் பாமதிகர். நமது மனையாளும் உயர்ந்தகுடியிற் பிறந்தவள். எமது குணத்தை அறிந்தவர்கள் இவன்றந்தையிலும் இவனுத் தமனென்று புகழாது விடுவதில்லை. நம் பத்தினிகுலத்திலவ தரித்த ஒருவனை அவர்க்குப் பகையாயுள்ள ஒருவர் அசத்திய னென்று கூறினமையால், அது உண்மையளவிற்பொய்யேயா னும் அத்தோஷம் நம்பத்தினிமீது சாராவண்ணம் அவனையக்கி னியில் மூழ்கச்செய்து அதன் பின்னரோ விவாகஞ் செய்தேம்.

"ஆசாரத்திற் கொடையி லறிவில் விவகாரத்தி லன்பிற் சொல்லும், வாசாலகத்தி லுயர்மதியினிறை சம்பத்தில் வாய் மைதன்னில், கேசாதிபாத முதல்வடிவழகிற் பெரும்புகழிற் கெம்பீரத்தில், எசாதபெரும்புவனத் தெமக்கிணையாயின ரொ ருவரொவரோ யென்றான்."

அதுகேட்டு இடம்பன் அவனைத் தன் மூதாதை யென உணர்ந்து பொருக்கென வெழுந்து அவன் பாதங்களில் வீழ்ந்துபணிந்து மீண்டு மெழுந்து தன்கைகளைமாறிக் காதுகளைத்தொட்டு, தொட்டகைகளை அவன் பாதங்களில் வைத்து அடியேன் இடம்பன், நமோநம என்றான். இதனை அவன் தூரநின்று சொன்ன மாத்திரத்தில் அகங்காரனும் மனக் கனிவுடையவனாகி அவனுக்கு ஆசிகூறி, ஐய! உன் பாவனையை யான் மெய்யெனநினைந்து திகைத்துவிட்டேன். உலகமெல்லா மொருசேர மயங்குமாறு நீயல்லாது இயற்றவல்லவர் வேறியாவ ரிருக்கின்றார், உன் தந்தையாகிய உலோபனும், உன் தாயாகிய இச்சாதேவியும் இவ்வூரில் சுகசீவியராயிருக்கின்றார்களா? உன்மனைவியாகிய வஞ்சனாதேவியும், உன்குமாரனாகிய அசத்தியனும் நன்றாக வாழ்கின்றார்களா? உனக்குப் புத்திரன் பிறந்த செய்தியைப் பலராற்கேள்வியுற்று நானும் என்மனைவியும் அந்நாளில்மகிழ்ந்தோம். அவனைப்பார்த்தற்கு மிக்ககாதலுடைய னாயினேன், அவன் எங்குள்னென்றான்.

இடம்பன் அதுகேட்டு, உன்மைந்தனும் என் தந்தையுமாகிய உலோபனும் என்னை யீன்ற வஞ்சனாதேவியும் மோகவேந்தனுடைய ஆஞ்ஞைப்படி கோளநாட்டில் வசிக்கின்றார்கள். யானும் என் பத்தினியாகிய வஞ்சனாதேவியும் மைந்தனும் அரசன் ஏவலின் வழியே இந்நகரில் அமர்ந்தோம். இப்போது உன்னாற் காணப்பட்ட இவ்வஞ்சவேடத்தால் எவரையும் மயக்கிச் சுகித்திருந்து இப்போது இங்கு வந்துபுகுந்த உன்னுடைய பாதசேவையும் கிட்டப்பெற்றேன்.

நகரங்களுள்ளே தலைமை பெற்றதாகிய இராடா நகரத்தைவிட்டு இந்நகருக்குவந்தது என்மாதவமே யாயினும் இங்கு வந்தநோக்கத்தைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன் என்றான். அதனைக்கேட்ட அகங்காரன் மகிழ்ச்சி கூர்ந்து வேற்றரசரால் நம் மோகவேந்தன் மனங்கலங்கினானென்பது கேட்டு, ஆற்றாமல் இவ்விடம் வந்தேனென்றான். இடம்பன் அதுகேட்டு நம் மோகவேந்தன் தான் வாசஞ் செய்கின்ற விடத்திலும் பகைவாது முயற்சி சிறிது வெளிப்பட்டதுகண்டு, இப் பூவலகத்திலுள்ள எத்தலங்களிலும் இக்காசி புரிசுத்த ஸ்தல மென்

திஞலும் ஸ்ரீசங்காதரனும் தேவியும் யாவரோ யாயினும் ார
ப் பிரமநாமத்தை உச்சரித்து இறப்பாராயின் அவர்க்கெல்
லாம் முத்திகொடுத்தற் பொருட்டு இங்கு எழுந்தருளியிருப்
பதனுலும் கொடிய மூடர்தம்மையும் இத்தலம் ஞானிகளாகச்
செய்வதொன்ருதலாலும் மெய்ம்மையாகிய தவங்களைச்செய்
கின்ற விவேகிகள் இங்கு வருவார்களெனக் கருதியே இன்ன
தினத்திற் காசிக்கு வருவேமென்று தானிங்குவருதலை ஓலையி
லெழுதி ஒற்றர்கையிற் கொடுத்து இங்குவரவிடுத்தான். ஆத
லால், மோகவேந்தன் இந்நாளிற் காசிக்கு வருவது உண்மை
யே. அவன்வந்தால் இது அவன் கருத்து இது அவன்செய்
யப்போகுங் கருமம் என்பது அவன் செய்கையினல் வெளிப்
படும் என்று கூறினன். அதுகேட்ட அகங்காரன் இக் காசி
யின்கண்ணே நம் பகைவனுகிய விவேகன் வரத்துணிவா
னேல் அரிபக்தி சிவபக்தியென்னும் மாதர் அவனுக்கு அருள்
செய்வாரன்ருே! அங்ஙனம் அவரிடத்தில் அவன் அருள்
பெறுவானேல் காசிக்கு வருகின்ருே மென்று ஓலைவிடுத்த
மோக வேந்தனுலும் மற்றுள்ள எம்மாலும் அவனை வெல்வது
எவ்வாருமோ என்று கூறினன். அது கேட்ட இடம்பன்
நமது காமனுதியர் போர்செய்யத் துணிவரேல் அரிபக்தி சிவ
பக்தியென்னும் யோகிய ருடைய வருட் பார்வை விவேக
னுக்கு எட்டுமோ! தூர்த்தராய் மனச்சுத்தியுருதவர் தீர்த்த
மாடித் திருத்தலந்தோறும் மூர்த்திசேவைசெய்தாலும் அவர்க்
கு நற்கதிகிட்டுவது யாங்ஙனம் என்று மறுத்துக்கூறினன்.

இடம்பாங்காரச்சருக்கம் முற்றும்.

---

பன்னிரண்டாவது.

## மோகன் காசிபுகுசருக்கம்.

---

இப்படி யிருவரும் இங்கே பேசிக்கலந்திருக்க, அங்கே
அவித்தியாபுரத்தில் இருந்த மோகன் தன்மகனுக்குமுடிசூட்டி
அவனை அங்கிருந்து அரசியற்றுமாறு அமைத்துவிட்டு அங்கு

நின்றும் நீங்கிக் காசிசெல்லப் பிரயத்தனஞ்செய்வானாயினன். முதன்மனைவியாகிய துன்மதி தேவியும், இரண்டாம் மனைவியாகிய பாஷண்டவிஞ்சையும் இருபுறமுந்தொடரவும், சேனைகள் நான்மருங்கும் கொடிய விஷம்போலப் படரவும், மருளென்னும் யானைப்படையும் ஐம்புலக் குதிரைப் படையும் மனோரத மென்னும் தேர்ப்படையும் திக்குகளை மூடிச்செல்லவும், பழியென்னும் முரசு கோடை இடிபோல முழங்கவும், கொடி குடை சாமரம் எங்கும் நெருங்கவும், கொடிய வஞ்சகம் பாவம் என்பன வெல்லாங் கலந்து திரண்டு ஒருவடிவெடுத்தா லொப்ப வெளிப்பட்டுச் சென்ற மோகவேந்தன் தனக்கெதிரே நரையான் செம்போத்து காகம் என்பவை வலத்திருந்து இடஞ் செல்லவும், காடை மயில் வலியன் என்னும் பக்ஷிகள் இடத்திருந்து வலஞ்செல்லவும் கண்டும் அவை துச்சகுனம் என்பது நோக்காது விரைந்துபோயினன்.

அங்கே காசியில் இருந்த இடம்பனும் அகங்காரனும் இத்தினம் நம் அரசனாகிய மோகன் இங்குவரக்குறித்த தினமாயிற்றேயென நினைந்து காசியை விட்டு நீங்கி மோகனை எதிர்கொண்டு உபசரிக்கும் பொருட்டு இரண்டு யோசனைதூரம் போயினர். போய் மோகனைக்கண்டு இருவரும் வணங்க, மோகனும் அவர்க்கு ஆசிகூறி நும்மனைமக்கள் ஆரோக்கியர்களா யிருக்கின்றார்களா என வினவ, அவர்களும் உமது அருட்டுணை எமக்கு இருக்குங் காறும் எமக்கும் எமது மனைமக்களுக்கும் ஒருகுறை வருமோ என்று கூறினர். அங்ஙனங் கூறிய இருவருள் அகங்காரனை மோகன் பின்னரும்பார்த்து உன்தேயம்விட்டு இங்குவந்தது யாதுகாரணமென்றுவினவ, அகங்காரன் அவனைவணங்கி ஒற்றரால் இங்கு உமதுவரவை உணர்ந்து உம்மைக் காணும்பொருட்டு வந்தேன் என்றான்.

அதுகேட்ட மோகன் உன் நாட்டின்கண் வேறு யாதும் விசேஷமில்லையா என்ன, அகங்காரனும் இல்லை என்றான். அதுகேட்டு மோகன்மகிழ்ந்து இங்கே பகைவர் ஒருபோது வருவார் என்னும் சொற்கேட்டு நாமும் அதை உணரும்பொருட்டு வந்தோம். அது உன் வாய்மொழியால் கானற்சலமாயிற்று. உலகெங்கும் ஈதொருபொய்யைப் பிதற்றிப் பரப்பி

ட்டு யாரோ மறைந்தனர். சிங்க ஏற்றின் முன்னே யானை
ளும் வருமா என்று கூறிச்சிரித்தான். சிரித்த பின்னர் இவ்
கைப்பொய்யைச் செவிகொடுத்துக் கேட்போமாயின் யாமும்
றிவிலேமென்று எண்ணப்படுவேம். ஆதலின் இங்குநில்
ாதுசெல்வோம் வாருங்களென்றுகூறி இடம்பனும் அகங்
ாரனும் சேனுபதிபோல் முன்செல்ல அதுகண்டு தானங்
வங்களெல்லாம் நடுங்கி ஒதுங்கித் தூரமோடச்சென்று காசி
கரையடைந்தான்.

அந்நகர் எங்கும் பிரபைகாலப் பலவகைச் சித்திராலங்காரங்
ளால் அலங்கரித்திருக்கக் கண்டு வியப்படைந்து அப்பிர
க்ஷணமாக வீதியிலே பிரவேசித்துப் பகற்காலத்திலும் வல்
ிருட் பிழம்பு ஒன்று இங்குப் படர்ந்ததேயென்று பலரும்தி
கைக்க, தனக்கென்று அமைக்கப்பட்ட பொன் மாளிகையி
டப் புகுந்தான். புகுந்து துன்மதிசமேதனுக அங்கிருந்த
பான்மணி ஆசனத்தில் ஏறியபோது சரணஞ் சரணமென
ங்குநின்றுர்பலரும் அவனைத் தொழுதார்கள். தொழுதவர்
ளைத்தன்சமுகத்திலேவரிசைபெற இருத்தி அவர்க்கெல்லாங்
ண்ணருள்காட்டிப் பாஷண்ட விஞ்சையைமற்றொருபுறத்து
அணைத்து இன்புற்றிருந்தான்.

மோகன் காசிபுகுசருக்கம் முற்றும்.

---

## பதின்மூன்றுவது

## சாருவாகச்சருக்கம்.

---

மோகன் இவ்வாறு காசியில் வதிந்து இன்புற்று வருநாளி
லே முன்னே அவன் ஏவலின் வழித்தலங்கடோறுஞ்சென்ற
சாருவாகன், சீடர் தற்சூழ அவ்வத் தலங்கடோறுஞ் சிறிது
சிறிதுகாலந் தங்கித் தன்போதனையை ஆங்காங்குமுள்ளார்
சிற்சிலர்க்குப் போதித்து அதனுற் சுத்தமாகிய பக்திவிரதங்
களை ஈட்டழித்துத் தாழ்வித்த பின்னர்த் தன்சித்தியை மோக

னுக்கு உணர்த்துமாறு காசிநோக்கி விரைந்துவந்தான். அங்கே அரசனுடைய மாளிகையிற்சென்று வாயில் காவலனாகிய சோத்திரேந்திரியனைக்கூவி அரசனுக்கு நம்வரவை உணர்த்தக்கடவை என்றான். அவனும் அரசனிடஞ்சென்று வணங்கி அவன்வரவை உணர்த்தினான். அதுகேட்ட மோகன்மகிழ்ந்து அவனை இங்கு அழைத்துவா என்ன, அவ்வாயில் காவலனும் ஐய உம்மை அரசன்வருக என்றான் என்று சாருவாகனிடம் கூற அவன்தன் இருண்மதிக் குதிரையினின்றுமிழிந்து அரசன் சமுகஞ்சென்று அவனைவாழ்த்தி அவன் அனுமதிப்படி அவன் பக்கத்திருந்த ஓர் ஆசனத்தி லுட்கார்ந்தான். அவனை அரசன்நோக்கி உன்கருமம்எவ்வாறாயிற்று என்றுவினவ அவனும் அரசனைவணங்கி, ஐயனே, உனது அருட்படி யான் உலகெங்குஞ் சென்று செம்மையாகிய ஒழுக்கங்களை விலக்கி என் விஞ்சைமார்க்கத்தை நாட்டிப் பகைவர் ஆங்காங்குஞ் சிறிது தலைகாட்டத் துணிந்தமையை அடியோடு களைந்து மீண்டேன். பரிசுத்த ஸ்தலங்கடோறுஞ் செல்லுமாறு என்னுடன் புறம்போந்தவனாகிய கலியனும் இந்நாள் இங்குவருவான் இதுவே என்வரலாறு என்று கூறினான். இம்மொழிகளைக்கேட்ட மோகன் அகமகிழ்ந்து சாருவாகனைநோக்கி உன் சொல்லைப் பலருங்கேட்கப்பயிற்றியது எவ்வாறென நமக்குச் சொல்வாயென அவனும், சொல்லுவேன் கேட்பாயாக.

இவ்வுடலை யல்லால் மற்றோர் ஆன்மா வுண்டென்றும், இவ்வுடல்நீங்க அவ்வான்மா வேறோர் உடலிற்புகுந்து பரலோகத்திற் புசிப்பதுண்டென்றும், அங்ஙனம் புசிக்கும்பொருட்டு இவ்வுலகில் அறஞ்செய்ய வேண்டுமென்றும், உலகத்தார் கொள்ளுகின்ற ஆசையானது கைக்கு எட்டிய ஒருமதுரமாகியகனியை உண்ணுமற்றள்ளி, ஆகாய மத்தியிலே ஒருமரமுண்டு அதற்கு நீரைப்பாய்ச்சி அதுதருங்கனியை அருந்திச் சுகிப்போம் எனச் செய்யும்விரதத்தை ஒக்கும். மாதரது அநுபவத்தை வாளாதள்ளி வாலிபம் வீண்போக உபவாசஞ்செய்தும், தாங்குதற்கரிய தவத்தை முயன்று கனிகாய் சருகுதின்றும், தாங் கெட்டதோடும் அமையாது பிறர்க்குங் கேடுசூழ்வித்து உள்ளது சொல்பவனைப் பொய் சொல்பவனென்றும்,

ண்ணிற் ரேன்றாத ஒன்றை உண்மையென்று சொல்பவனை
மய் உரைப்பவனென்றும் சொல்லித்திரிகின்ற துர்ப்புத்தி
டையவனைப்போற் கொடியவர் யாவர்! வெகுசனத் துரோ
கள் யாவர்! நெடிதாகிய இவ்வுடலை இருகூருகப் பிளந்து
ார்க்கின் அதிற் சீவனிருப்பது தோன்றுமா! என் அன்பர்
ாள், நீவிரோ சிந்தித்துப்பாரும். உடலை இருகூருகப் பிளக்கு
டத்து அவ்வான்மா நிற்குமோ என்பீரேல், அதுபோகும்
ழியாவது கண்ணுக்குப்புலப்படுமா? விண்ணுலகத்தில் இவ்
ான்மாபோய்ச் சுகித்திருப்பதை யாவர் கண்டுவந்தார்? இவற்
ல் எள்ளளவாயினும் ஓர் உண்மை உண்டாளுல் இன்றே
ன் சாருவாகன் என்னும் பெயரைப் பரித்தியாகஞ்செய்து
டுகின்றேன்; அத்துடன் என் விஞ்சைப்பிரசங்கக் கடை
யையும் கட்டிவிடுகின்றேன். எவர்க்கும் இறப்பும், பிறப்பும்,
வையவமும் ஒக்கும்; அற்ருயின் வருணபேத மென்பதெவ்
ாறுகூடும், கூடுமாயின் மேல் வருணத்தவர்க்கு உறுப்புச்
ல அதிகமுண்டோ; இவ்வுலகத்திலே பிறவாது அவர் விண்
ிற் பிறந்ததுண்டோ, நரை திரை மூப்பும் சாக்காடும் அவ
ா அடுக்காவோ, உலகத்தில் ஆண் பெண் என்னும் வேற்று
மயன்றி வேற்றுருவங்கண்டவர் யாவரோ, தன்மனை பிறன்
னை என்று பொறித்த குறிவேறுபாடுண்டோ, தன்பொருள்
றர்பொருள் என அவ்வப்பொருளில் அக்ஷரப்பொறியுண்
டா, வலியவருக்கு எப்பொருளும் தமதே ஆகும், அங்ஙனம்
லியற்றவரோ இவள் பிறன்மனையாள்; இது பிறன்பொருள்;
ச்சித்தாற்பாவம்; அதனோடு பழியும் வரும்; ஈற்றிலே நரகக்
தியுமுண்டென்று கூறுவர். பூதம் நான்கென்பதே உண்
மை. இன்பமும் பொருளுமாகிய இரண்டுமே புருஷார்த்தம்.
ணம் முதலிய ஆறுமே பொறிகள். கண்ணுக்குப் புலனுகிய
இவ்வுடலே ஆன்மா. இறப்பேமுத்தி. வேதத்திற் சொல்
லப்பட்டது மிதுவே என்று ஆதிநாளில் தேவகுருவாகிய பிர
கஸ்பதி இந்திரனுக்கு உபதேசித்தானன்றே. அமுதம்போ
லும் தெள்ளிய நல் நீர் வாவி தமது அருகிருக்கப் பெற்றும்
அதிலே தாகந்தணியாது கானலைச் சிறந்தநீரொன்றெண்ணி
ஓடி உழல்வார்போற் கையிற்கிடைத்த இன்பத்தைத்தள்ளி

இல்லாமையாற் கிட்டாத இன்பத்தைத் தேடித் திரிபவராகி
புத்தியீனனைப்போல் வாளா உழன்று கேட்டை அடைய
தீர்; இவ்வின்பமன்றி மற்றோரின்பம் உமக்குக்கிட்டுவதில்லை
நம்பி அவலப்படாதீர். யாவராலுங் கற்கப்படும் பலகலை
னுள்ளும், யானிங்கே யெடுத்துக் கூறுவது நீதியாம். நீ
வார்த்தையாகிய சாஸ்திரமே நிலையுடையது. அதனைச் சா
யாதிருப்பதொருசாதி உலகிலுளதோ. குளிர்ச்சியும் தெ
வும் இயல்பாகவுடைய கங்காசலத்தை உண்பவர்கள் அசுத்
மாகியகிணற்றுச் சலத்தை உண்பார்களா? மகா யாகங்க
செய்கின்றேமென்று அரிதில் தேடிய பொருளையெல்லா
அதன்பொருட்டு இறைத்து உண்ணாமல் வயிற்றையும் உட
யும் வாட்டித் தழல்முதத்துக்கிடந்து வெம்பிப் புகையினுலே
தியங்கி எத்தனைபேர் பித்தராய் அலையக்கண்டேம்! வேள்
யுந் திரவியமும் இவ்வுலகில் ஒழிந்துபோனபின்னர் விண்ணு
லகிற்சென்று இன்பம் பெறுவோமென்பது வேரோடு தீய்
பட்டுவெந்ததொருவிருக்ஷமானது மீண்டும் தளிர்த்துவளர்ந்
கனிதர அதனை உண்ண நினைப்பதொக்கும். இறந்தவர்பெ
ருட்டு உலகத்திலே அன்னதானஞ்செய்பவர்கள் அவ்வன்
தானத்தினுல்வரும் புண்ணியத்தை அவ்விறந்தோர் அடை
ரென்று கூறுவது முண்டன்றே. அங்ஙனம் அவர்வந்து அ
புண்ணியத்தை ஏற்பது உண்மையாயின் நெய் இல்லா
யால் தீபமிறந்துபோக அத்தீபத்தைக்குறித்து மற்றொருத
ளியிலே நெய்யை ஊற்றி நிறைத்தால் அத்தீபம் பின்னு
தோன்றல் வேண்டுமென்றே. தம்முன்னோர் இறந்த திதிக
லே அறுசுவையும் பொருந்த அன்னமிடுங்கால் அப்பிதிர
பசிதீரும் என்பர். மேற்றளத்திலே ஒருவனைப் பசியே
டிருத்திவைத்து அவன்பசியைக்குறித்துக் கீழே ஒருவனுக்
அன்னமிடுங்கால் மேலிருப்பவன் பசிதீருத லுண்டாயின
றே அஃது உண்மையாவது. எப்பொருள் எக்காலத்தி
எவ்வகையில்வந்தாலும் அதனையிகழ்ந்துநீக்காமல் அப்பொ
தே அனுபவிப்பதே மெய்யாகிய பயனும். ஆதலினுலே இ
வுடலே ஆன்மா; மாதர்போகமே முத்தி; கண்டதே காட்சி
உண்டதே உறுதி. இவற்றைச் சிந்தித்துத் தெளிந்து கை

காள்ளுங்களென்று பலர்க்கு மெடுத்துக்கூறுவதே எனது உ
ாயம் என்றான்.

இங்ஙனஞ் சாருவாகன் சொல்லிமுடிக்க அதுகேட்டிரு
த சந்தேகன் அவனைநோக்கி "உண்டதே உறுதி கண்டதே
ாட்சி" என்று நீ கூறில், பெரியோர் * திருச்சிரம் சாந்த
னம் முதலிய அரியவிரதங்களை அனுஷ்டித்தது யாதுபற்றி
யா என்று வினவ, அதற்குச் சாருவாகன் அவனைநோக்கி,
ய, நன்றுவினவினை; நம்மவர்கள் கன்னியரோடு கூடிச்
கிக்கும் இனிய இன்பங்களைப் புத்தி யற்றவர்கள் கண்டு
கிக்காமையால் கன்னியரின்பம் வேதத்துக்கு அடாததென்
ம், அதுவே உண்மையென்றும், பெண்ணாசையைத் துறந்
ால் விண்ணுலகில் பெருஞ்சுகம் பெறலாமென்றும், சிறு
பாருளேனும் தருமஞ்செய்தால் அது மோக்ஷத்தை அளிக்கு
மன்றும், எதுபோல் என்னில் மண்ணில் இடப்படும் வித்து
யும்மண்ணிலே மறைந்துபோகினும் மீண்டும் அஃதொன்று
ம அநந்தமாய்ப் பலன் தருவதுபோலென்றும் பலவாறு
த்துவர். அங்ஙனம் அவர் கூறுகின்ற வீண் மொழியை மெ
ம்மொழியெனக் கொண்டு ஊணுதிகளைத் துறந்து காணுத
தள்ளமுதைக் கனவிலுண்பவர்போலக் கண்ணுங் கருத்துங்
கட்டு விரதங்களை அநுஷ்டித்து வாழ்நாளை வீணாகப்
பாக்குவர் அனேகர் என்று கூறினான்.

அதுகேட்ட சந்தேகன் நீர்கூறியது ஒக்கும், இன்பமே
றுதி என்பீராயின் துன்பமும் இடையிடையே வந்து தொ
ர்வது யாதுபற்றி என்று வினவ, அதற்குச் சாருவாகன்

---

* திருச்சிரமாவது:— "மூன்றுநாள் பகலி லொவ்வொருவேளை உப்
ல்லாத அன்னத்தில் இருபத்தாறுகவளமும், மறு மூன்றுநாள் தான்
ாசிக்காதிருக்கும்போது யாராவது வலிந்துகொடுக்கும் அன்னத்தில்
ருபத்துநாலு கவளமுமாக ஒன்பதுநாட்புசித்து அடுத்த மூன்றுநாள்
த்த உபவாசமிருத்தல்." கவளம் = வாயளவு.

† சாந்தபனமாவது:— "பசுமூத்திரம் சாணம் பால் தயிர் நெய்
ருப்பைநீர் என்னும் ஆறையும் ஒன்றாகக் கூட்டி ஒருநாட்சாப்பிட்டு
டுத்தநாட் சுத்த உபவாசமிருத்தல்."

ஜலத்திலே நுரையும், நெல்லிலே உமியும் இருத்தல் நோக்கி அவற்றை நீக்குவாருண்டோ? வல்லவர்கள் துன்பத்தை அடக்கி எந்நாளும் இன்பத்தையே தேடுவர் என்று உத்தரித்தான்

இவற்றைக் கேட்டிருந்த மோகவேந்தன் சாருவாகனை நோக்கி, அமிர்தத்தைநீக்கி விஷத்தை உண்பவர்யாவர்! முன் கூறியவற்றிற்கு உத்தரமு மொன்றுளதோ என்று அவனையும் அவன்மொழிகளையும் மெச்சித் தன்னிருகரங்களாலும் அவனைப்புல்லி அவனுக்குரிய வரிசையெல்லாஞ்செய்து மகிழ்ந்திருக்குஞ் சமயத்தில், கலியன் கபடிசமேதனாக அவன் சமுகம்வந்து தலைப்பட்டான்.

சாருவாகச்சருக்கம் முற்றும்.

---

பதினொன்காவது

## கலிச் சருக்கம்.

---

அங்ஙனம்வந்து தலைப்பட்டகலியன் மோகனை வணங்கி நிற்க, மோகன் அவனை அங்கு ஓர் ஆசனத்திருத்தி அவனகத்து நிகழ்ச்சியை முகத்தினால் உணர்ந்து அங்கிருந்த ஏனையோரை எல்லாம் புறத்தே அகற்றி உற்றசெய்தியைச் சொல் என்றான். கலியன் எழுந்துவணங்கி ஐயனே, உனது ஆஞ்ஞைப்படி உலகெங்குஞ் சென்று தலங்கடோறுங் கண்ட காட்சியை எவ்வாறு கூறுவேன்! தலங்கள்தோறும் நம்பகைவரால் விளைந்த கேடுகள் பலவுள. முன்னே நம் ஒற்றர்கூறியது மெய்யேயன்றிப் பொய்யன்று. சிவஸ்தலங்கடோறும் யோகினிகளது அக்கினிக்கண்ணும் நெறித்தபுருவமும் கடித்தபல்லும் சூலப்படையும் எடுத்தகயிறும் விபூதிமேனியும் நங்கண்ணால்விழித் தெதிர்நோக்கப் படுவனவோ!

வைஷ்ணவ ஸ்தலங்கடோறும் அரிபக்தியென்னும் யோகினியினது சங்கு சக்கரம் வாள் கதை வில்தரித்த கரங்களும் இரணியனைக்கொல்ல எழுந்த நரசிங்கத்தினது கோபமுமே

ும் கொடியகோபமும், துளசிமணியும், ஊர்த்துவநாமமும் .யிர்களை எல்லாங் கொள்ளை கொள்ளுமே. விவேகனுதிய ா யோகினிகள் புத்திரனைப்போற் காக்கின்றார்கள். அப் லங்கொண்டே விவேகனுதியர் நம்மவனைப்போல் உருமாறி ம்மவர் இருக்கும் இடந்தோறும் தாமுஞ்சென்று நமதுசேனை ளில் அநேகனைத் தம்வழிப் படுத்திக் கொண்டனர். அது ண்ட யான் அவனை மீட்டும் நம்வசந் திருப்புதற்பொருட் ச் சென்றேன். சென்ற என்னை யோகினி எற்றிக்கொல்ல ுயன்றாள். முயன்றதுணர்ந்து யான் உயிர்தப்பி ஓடினேன். ான்சென்ற இடங்களிலே அநேகர் தங்கள் தங்கள் ஜெப ;ப்ாதிகளை நியமமாக நடாத்துபவரா யொழுகக் கண்டேனன் ி, என்னைக் கடைக்கண்ணாலேனும் நோக்குபவனையும் என் ோடு ஒருவார்த்தையேனும் பேசுபவனையுங் கண்டறியேன். ஒன்னும் முன் நம் ஒற்றர்கூறியவை எல்லாம் ஓர் அணுவள ேவனுந் தவறாது நிகழ்கின்றன. சத்துவசிரத்தை சிவபக்தி அரிபக்தி சாந்தி என்னும் நான்குபெண்களும் உபநிடதையை விவேகனுக்கு மணமுடிக்குமாறுசெய்கின்ற முயற்சியும் சிறி ன்று. இப்படி நம்பகைவர் செய்கின்ற பற்பல முயற்சியை ும் உற்றுநோக்குமிடத்து இன்னுஞ் சிறிதுகாலத்தில் அவர் ள் உலகெங்கும் பரந்துவிடுவர் என்று எண்ணற் கிடமா ின்றது. அப்படிப் பரந்துவிடுமுன் நாம்செய்யவேண்டிய ிருஷியை இப்போதே செய்தல்வேண்டும். செய்யேமாயின் கேட்டுக்கு ஆளாவேம் என்பது சுதரிசனம் என்றான். அது கேட்ட மோகன் கோப மொருபாலும், அச்சமொருபாலும் எழும்பப்பெற்றும் அவற்றை அடக்கித் தனதுமுடியை அசை த்து, கருமம் இவ்வாறாயிற்றே! ஆகட்டும் எங்கே எழும்பினு லும் நம்பகைவனை வேரறாது விடுவனோ. பாம்பு சினந்து படத்தைவிரித்தாடினும் பட்சி யரசனாகிய கருடபக்ஷி அதனை விடுமோ! விவேகன் யோகினிகளது கிருபையைப் பெற்றிட் டாலும், பிரமன் புத்திரியாகிய உபநிடதையை அவன்மணந் திட்டாலும், நான்சொல்வதை நீங்களெல்லீருங் கேட்டு ஒழு குவீர்களாயின் அவனுயிரை யான் தொலைப்பது நிச்சயம்; என்று இவ்வாறுகூறி அகங்காரன் இடம்பன் முதலாயினோ

ளை அழைத்து, கலியன் சொன்னவற்றையெல்லாம் அவர்க்
கெடுத்துக்கூறி, இனிச்செய்வது யாதென்றான்.

அதுகேட்ட அகங்காரன் மோகனைநோக்கிப் பகைவரது
முயற்சி எத்தலங்களிலும் வெளிப்படையானதைக் குறித்துச்
சந்தேகித்தலாற் பயனில்லை. அவர்வலி ஓங்குமுன் அடக்கி
விடுவதே இனிச் செய்யத்தக்கது. யோகினியை வெல்வது
அரிதென்பது உண்மையே. ஆயினும் அவர் அருள்கொண்டு
தருக்கிநிற்பவரிடத்து விடுதற்குரியவை விடுத்து அவரால்
அவர்சுத்தியைக் கெடுத்துவிடுங்கால் அவர்மேல் யோகினியா
வைத்த அருள்சுருங்கும். அதன்மேல் எத்திறமிருப்பினும்
நமக்கு அதுதொலைப்பது எளிதாம். இங்ஙனம் அவ்வருளைத்
தவிர்ப்பது கூடாதாகுமிடத்து நம்படை எல்லாவற்றையும்
ஒன்றுகூட்டிக் காமன் முதலாயினோரோடு யாமெல்லேமும்
நெருங்குவேமாயின் நம்மோடு எதிர்ப்பவர் யாவர் என்று இவ்
வாறு சுருக்கிச்சொன்னான்.

அதுகேட்டு அங்கிருந்தவர்கள்யாவரும் நம்பகைவரைவெல்
ல இதுவே உபாயம், இஃதன்றி வேறில்லை என்று ஆர்த்தார்
கள். அதுகண்டு மகிழ்ந்த மோகனும் யான்நினைந்தது மிது
வே என்றுகூறி அங்கிருந்த ஒற்றரை அழைத்தான். அவர்
வந்து தொழுதுநிற்க அவரைநோக்கி, காமன் லோபன் கோ
பன் மதன் மானன் சங்கற்பன் மச்சரன் இராசதன் அதன்மன்
அவமானன் வைரன் தாமதன் கலகன் முதலாயினரை ஆங்
காங்குஞ் சென்று தேடி இத்தனைநா ளெல்லையில் இங்குக்
கொணர்மின் என்று ஆஞ்ஞாபித்து ஓலைகொடுத்துப் போமி
னென்று போக்கினான். அவர்கள் போயபின்னர் மேற்றிசை
யிலே வசிக்கின்ற மானனால் விடுக்கப்பட்ட ஒரு ஒற்றன், ஓர்
ஓலையோடு மோகவேந்தன்சமுகஞ்சென்று அவனைவணங்கி
ன்றான். அவ்வோலையை அரசன் தன்பக்கத்திருந்த ஓர் அமை
ச்சனை ஏற்று வாசிக்குமாறு ஆஞ்ஞைசெய்ய, அவனும் அதை
வாங்கி வாசிப்பானாயினன். "இராசாதி ராசனும் சர்வ நரேந்
திரனுமாகிய மோகவேந்தனது திருச்சமுகத்திற்கு மீளா அடி
யேன் மானன் கைகூப்பிவரையும் விண்ணப்பம்; நம்பகைவ

ாகிய தருமன் நம்மவரைப்போல வேடம்பூண்டு காஞ்சியை
டுத்து அங்கிருந்துகாமன்செய்கின்ற முயற்சிகளுக்குமாறான
சயல்களைச்செய்து அநேகரைத் தன்வயமாக்கினான். சாந்
மாதும் அவள்தாயும் வாணியிடஞ்சென்று அவள்புத்திரியா
ய உபநிடதையை விவேகனுக்கு மணம்புணர்த்தல் வேண்
ம் என்று அவளைவசியஞ்செய்தலே தொழிலாக அல்லும்பக
ம் திரிகின்றார்கள். இவை என் காதுக்குக்கிட்டிய செய்தி
ள். இனிமேல் யாது நிகழுமோ அறியேன் என்பது” என
ாசித்துமுடிக்க அதைக்கேட்ட மோகன் அவ் ஒற்றனைநோக்
ச் சிறிதும் அஞ்சாமல் அத்தருமனை ஒருநொடியிற்பிடித்துக்
ாலிலே தளையிட்டு இங்குக் கொண்டுவருமாறு நாம்பணித்
தாமென்று மானனுக்குச் சொல்லக்கடவை என்றான். அவ்
வாற்றன் அகன்றவுடனே மோகன் தன்னைச் சூழ்ந்திருந்தவ
ா நோக்கி ஈசன், அயன், திருமால் என்னும் மூவரும் தத்
ம்தொழிலையன்றி இன்னும் சாந்தியை அடைந்தாரில்லை.
ங்ஙனமாகவும் விவேகன்பொருட்டுச் சாந்திமாது தூதுபோ
த் துணிவளோ! ஒருபோது துணிந்தாலும் அவளைப்பேதிப்
து அரியசெயலாகுமா! அவள் தாயாகிய சிரத்தையைப்
டித்து வருமாறு முன்னுஞ்சிலரை போக்கியுள்ளோம். அவ
ளைப் பிடித்துத் துன்புறுத்துவேமாயின் அவள் புத்திரியாகிய
ாந்திக்கு உயிர்போவதுநிச்சயம். அன்றியும் அகீர்த்தி புத்தி
யைக்கொண்டும் ஒருகணப்பொழுதில் அவட்குத் துன்பம்
ிளைவிப்பேம். மித்தியாதிட்டியை இக்கணத்திற்றானே என்
ருகிற் கொணர்மின் என்றுரைத்தான்.

கலிச்சருக்கம் முற்றும்.

---

பதினைந்தாவது

## மித்தியாதிட்டிச்சருக்கம்.

---

இங்ஙனம் மோகன்செய்த ஆஞ்ஞையை விப்பிரமையென்
ாள் ஒருபாங்கி கேட்டோடி மித்தியாதிட்டியை யடைந்து,
ன்னை அரசன்வருமாறு பணித்தான் என்றாள். உடனே

மித்தியாதிட்டி மனக்களிப்போ டெழுந்து, மணிச்சிலம்பொ
லிக்கச் சிவந்த பூப்போலும் பாதங்களைப்பெயர்த்து அன்னமும்
நாணி ஓடநடந்து, இடையைக்கண்டு ஆகாயத்துமின்னற்கொ
டிகள் வெளிப்படாது வெள்கி உள்ளடங்கக், கொடிபோலத்
துவண்டு செல்லும்போது தன்பாங்கியைப்பார்த்து, நங்காய்
என்விளித்து, நெடுநாளாக அரசன்சமுகத்தில்செல்லாதிருந்த
யான் இன்றுபோய்க் கைகூப்பினும் அவன் முன்போல என்
னை வருக என்று ஆதரித்து அழைப்பானோ என்பது எனக்குச்
சந்தேகம்என்றாள். அதுகேட்டபாங்கி உன்னைக்கண்டும் உரு
காத புருஷர் உலகத்திலுளரோ என்றாள். அதற்கு மித்தியா
திட்டி என் அழகை இகழ்வது உனக்கு இயல்போ என்று
மறுத்து வினவ, முன்னொருநாள் அரசன் நம்மிருவருக்குஞ்
செய்த வரிசையளவில் வேற்றுமை கண்டாயல்லையோ என்று
விப்பிரமைமறுத்துரைத்து, மீண்டும் அவளைப்பார்த்து, நீ வழி
தடுமாறி நடப்பதென்னை? சென்ற இரவில் நீதுயின்றதில்லை
யா என்றாள். ஒருவருக்கு ஒரு மனைவியா யுள்ளவர்க்கே இ
வில் துயிலுதல் அரிதாக, உலகிலுள்ளபுருஷரொன்னும் எல்ல
வர்க்கும் பொதுமனைவியாய் அவ்வவர்பாற்கலந்துவரும் வினை
உடையேனுக்கு நித்திரை அரிதாவது ஆச்சரியமோ என்றாள்.
அதுகேட்டவிப்பிரமை அவளைநோக்கி நீபுரியும் அத்தொழில்
அரசனுக் குடன் பாடாகுமோ என்ன, அதற்கு மித்தியா
திட்டி யானங்ஙனஞ்செய்வது அரசன் அனுமதிகொண்டே
என்றாள். அற்றாயின் நீ அரசன் அனுமதிகொண்டு கலந்த
பேர்கள் யாவரொன்று விப்பிரமை வினவ; காமன், அதன்மன்,
கோபன், அவன்மகன்கலகன், ஆங்காரன், உலோபன், அவன்
மகன் இடம்பன், மானன், மதன், மச்சரன், சங்கற்பன் முத
லாய அக்குலத்தவர் யாவரும் என்கொழுநரோ என்று மித்தியா
திட்டி கூறினாள். இஃதுண்மையாயின் அவ்வவர் மனைவிய
ருக்கு உன்னிடத்து மனக்கரிப்பு வாராதோ என்ன, என்னை
அவர் கொண்டாடா தொழிவரேல் அவர்க்குத் தலைமை உண்
டாவது யாங்ஙனம் என்றாள். இவ்வாறு விப்பிரமையோடு
சல்லாபித்துச் செல்லுகின்ற மித்தியாதிட்டி தன்வைசிகத்
திற்குரிய கூந்தலை அடிக்கடி சோரவிடுத்து எடுத்து முடித்த

ாதிய குறிகளெல்லாம் நன்குவிளங்க நடந்து மோகன்சபை
ற்சேர்ந்து, மயிலென ஒதுங்கி நந்தாவிளக்குப் போல ஒளி
ாலநின்றாள்.

நின்ற அவளைக்கண்ட மோகன் நாளிதுவரைக்கும் நன்கு
ாழ்ந்தனையோ என்றான். அதற்கு அவள் உனது அன்பு
னக்கு உள்ளவரையிற் குன்றாதவாழ்வு அரிதோ என்றாள்.

அதுகேட்ட மோகன் அவளைநோக்கி உன் முகதரிசனத்
ால் வயசினால் முதிர்ச்சியுற்ற எனக்கு இளமை பெயர்ந்ததே
யன்றோ; அதற்கு மித்தியாதிட்டி என் ஐயனே, உன்னைக்
ண்டு களிகூராத கண்கள் நின்று விளங்குவன வாயினும்
வற்றால் யான் அடையத்தக்க சுகம் யாதோ என்றுகூறி,
ன்னை இங்கே வரவழைத்தபணி யாதென்றுவினவ, அதற்கு
மாகன் நங்காய், விவேகன் உபநிடதையை மணம்புரியக்
ருதி அவளிடத்துச் சத்துவசிரத்தையைத் தூதாக விடுத்
ான். அவளும் நீயும் ஒருவருக்கொருவர் எதிரிகளாதலின்,
)க்கணத்திற்றானே அவள்செல்லும் வழியிற்சென்று அவ
ளப்பிடித்துக்கொண்டு வரக்கடவை என்றான். அதைக்கேட்
. மித்தியாதிட்டி சத்துவசிரத்தையைப் பிடித்துக்கொணர்ந்
ு உன்சமுகத்து விடுப்பது எனக்குப் பெரிதன்று. சுவர்க்க
ாதலங்களில் உள்ள பகைவர்களது மனைவியரைக் கொண்டு
ருக என்று நீ கூறினும் அங்குச்சென்று அவரைக்கொண்டு
ரும் ஆற்றல் உடையேனென்பது அறிவாயன்றோ என்றாள்.
துகேட்ட மோகன் அவள்முகத்தில் தன்முகத்தைப்பொ
த்தி முத்தமிட்டு நீ இப்பொழுது ஓட்டியவாறு சத்துவசிரத்
தையைப் பிடித்துக் கொணர்ந்து இங்கே விடுவையாயின்,
ிவேகனுக்கும் அவன் மனைமக்களுக்கும் அபசெயங்கொடுத்
வளாவையென்றான். அவ்வளவில் மித்தியாதிட்டி அவ
ரிடம் விடைபெற்று அங்குநின்றும் அகன்று விரைந்து நடந்
, முன்னே புத்தனும், காபாலியும், சமணனும் சென்றவழி
ய தனக்கும் வழியாகக்கொண்டு சத்துவசிரத்தை இருக்கு
ிடந் தேடிச்சென்றாள்.

மித்தியாதிட்டிச்சருக்கம் முற்றும்.

பதினாறாவது

## சிரத்தைபோக்கிடையூற்றுச்சருக்கம்.

இங்ஙனம் முன்னாகச்சென்ற புத்தனும் காபாலியும் சமணனும் பின்னாகச்சென்றமித்தியாதிட்டியும் முறையே முன்னும் பின்னும் சத்துவசிரத்தையைக்கண்டு அவளொருகிளியாகவும், தாம் பூனைகளாகவும் அவளை வளைந்தார். வளைந்து நங்கருமத்தை இக்கணத்திலே முடித்துவிடுவோமென்பர்; அவளைப்பிடிப்போம் வாருமென்பர்; அவள் மேற்பாய்வர்; எற்றுவோம் என்று எழும்புவர்; தொடர்ந்துசெல்லுவர். அதுகண்ட சத்துவசிரத்தை தளர்வுகொண்டு ஓட்டெடுக்கவேனும், பின்வாங்கவேனும் கால் எழப்பெறாதவளாகிப் பெரிதாகிய சமுத்திரமத்தியில் அசப்பட்ட சிறியமரக்கலம்போலவும், சாயாகிரகத்தால் மறைக்கப்பட்டுக் கலங்குவதாகத் தோன்றுகின்ற சந்திரனைப்போலவும் தடுமாறிநின்றாள். அதுகண்டமித்தியாதிட்டி இதுவேசமயமெனக்கருதி அவள் கூந்தலைப் பிடித்திழுக்குமாறு அவளை அணுகினான்.

அணுகியமாத்திரத்தில், சத்துவசிரத்தை யோகினிகளது கிருபையென்னும் வலியினாலே, மித்தியாதிட்டியாற் றீண்டப்படாது காக்கப்பெற்றவளாய் யோகியரது உள்ளத்திலே ஓடி ஒளித்தாள். அதுகண்ட மித்தியாதிட்டி, கனவினிடத்தே திரவியப் பொதிகளைக் கண்டு ஆநந்தித்து, அவை கைப்படவரும்பொழுது துயில்நீங்கிக் கண்விழித்தவர் அவற்றைநினைந்து நினைந்து நைவதுபோலக் கைக்குக் கிட்டியுங் கிட்டாது சென்றசத்துவசிரத்தையைநினைந்து புலம்பித்தம்பமாயினான். அவன் அங்ஙனமாக, சமணன் முதலியரும் தனித்தனி சிரத்தையைப்பற்றினும் என்றுகூறி அவள்மேற்பாய்ந்தும் அவள் அவர் கையகப்படாது முன்போல் மறைந்துபோகக் கண்டு இஃதென்னமாயம் என்று திகைத்தார். திகைத்துத்தெளிந்து அவள் எங்கே செல்லுகினும் அவளை நாடிப்பிடிக்காது விடுவதில்லையென்று ஓடுவர்; ஒருவரை யொருவர் உணராமற் றேடுவர்; தேடிமயங்குவர்; மயங்கித் தியங்குவர்; தியங்கித் திகைப்பர். அப்பால், புத்தனொருபக்கஞ்செல்ல, காபாலி மற்றொருபக்கம்நாட, சமணன் அப்பாலொருதிசைபோக, மித்தியாதிட்

தானுமொருபுறந் தொடர்ந்தாள். அச்சமயத்தில் இடம்பன் ;ளுகிய அசத்தியன், சத்துவசிரத்தை சமணுதியர்கையில் கப்பட்டாள் என்று உலகின் நாற்றிசைக்கண்ணுஞ் சென்று ாைபரப்பினுன். அவ்வுரை உலகனைத்தும் எழுந்துகேட்கப் ட்டமாத்திரத்தில் யாவரும் அதனைமெய்யென்றுநம்பிக் கவ க்கடலில்மூழ்கி, அந்தோ! ஈதென்ன விபரீதகாலமோ என் ர். வேத விரோதிகளாகிய சமணுதியர் சத்துவசிரத்தை யப்பிடித்துத் துன்பஞ்செய்கின்றனரோ யென்பார். அவள் தங்களிலே தலையிட்ட பாதகரை என்செய்வோம் என்பார். ண்கொலை செய்வதற்கு அப்புலையர் சிறிதுமஞ்சாரோ என் ர். யாமெல்லோரும் இரக்கமற்ற வன்கண்ணராயினேமே ன்பார். சிரத்தைமாது கவரிமாவினுஞ் சிறந்த நாணுடைய ாதலின் தன்னுயிரைத் தானே போக்கியிருப்பாள் என்பார், வளோடு உடன்பிறந்தவனுகிய தருமனிடத்து இதனை யார் சால்வார் என்பார். இதனை அத்தருமன் கேட்கில் அந்தோ யிர் தரியானே என்பார். கல்நெஞ்சினராகிய புலையர்கை ற் றுன்புறுவாயென வேதன் உனக்கு விதித்தானே என் ர். புத்திரி ஆகிய சாந்தி இதனை அறிந்தால் இறந்தொழிவ ள என்பார்.

உன்னை அரிதிற் பெற்றுவளர்த்த தாயாகிய புனிதை அறி ன் எவ்வாறு சகிப்பாளோ என்பார். வாணி புத்திரியை வேக ராசனுக்குத் தூதுசென்று இனி மணம்பொருத்து ற்கு எவருரியவள் என்பார். இதனைக் கண்ணுரக்கண்டு ங்கிருந்துவந்தவர் யாவர் என்பார். சிலர், இது பகைவர் ட்டியபொய் என்பார். சிலர் யோகினியரது கிருபாநோக்கம் வளுக்கு மிகுதியு முண்டென்பார். உண்டாயின், அவளை நவர் நெருங்குவது எளிதோ என்பார். இச்சிரத்தையைப் டித்துத் துன்புறுத்துபவர்க்குச் சானகியைத் திருடிச்சென்ற ராவணுதியருக்கு உற்றகேடே உறும் என்பார்.

சிரத்தைபோக்கிடையூற்றுச்சருக்கம் முற்றும்.

## பதினேழாவது
# சாந்திச் சருக்கம்.

இவ்வாறு பற்பலர் சிந்தைதடுமாறி நொந்திரங்கும்போது சத்துவசிரத்தையிடத்துப் பேரன்புடையவளாகிய அவள்பு திரி சாந்திகாதில் இச்செய்தி காய்ச்சிய லோகநீரென எட்டு ற்று. எட்டவே உயிர்வெதும்பி, நிலைதுளும்பிக் கீழ்விழுந்து உணர்விழந்து துடித்துப் பிணம்போலாயினள். சிறிது நே ரத்திலே போன உயிர் மீண்டுவரப்பெற்றுப் புலம்புவாளாயி னள். என்னை ஈன்றெடுத்த அன்னையே! தருமனுக்கு ஒரு தங்கையே! யாவர்க்கும் இலக்குமியைப் பொருத்துகின்ற பூங் கொம்பே! தன்னையேயன்றித் தனக்கு உவமை இல்லாதவளே உன்னைப்பிரிந்து யான் ஒருகணப்பொழுதும் உயிர்வாழ்வே னோ! சுகந்தங்களின் சுகத்தை அறியாத குறவரது குடிலி புகுந்த நாவிபோலாயினையே! புலையர் கைவசப்பட்டு, வேட ரது சிற்றூரிலே கட்டுப்பட்டமானையும், மிலேச்சர் மனையி அகப்பட்ட தலையீற்றுப்பசுவையும் ஒத்தனையே.

பிரமாதியரும், வேதியரும், ஞானியரும், தபோதனரு உன்னை யடுத்தன்றோ விளங்குவாராயினர். இனி உன்னை போல யாவர் அவரை விளக்கவல்லவரோ. தீயவர் உ னைத்தீண்டிச் சிறையில்வைக்க நீயோ பொறுப்பாய்! உ நெஞ்சமோ துயருழப்பது! தூயவர்களும் உன்னைத்தோற் விட்டனரோ! யோகியரது மனத்தைவிட்டு நீ எவ்வாறு நீங் கினையோ! தெய்வத்தலங்களினும், புண்ணிய வனங்களிலும் நதிகளிலும், தடாகங்களிலும், பரிசுத்த மலைகளிலும் பொரு தி நீ உலாவிவர இனி எப்பொழுது காண்பேனோ என்றி வாறு தாயைப்பிரிந்த தலைக்கன்றுபோலக் கலங்கி, சமணர் யர் கையிலகப்பட்ட என்தாய் இனிமீள்வதில்லை. யானு தீப்புகுந்து விண்ணுலகஞ்சென்று அவளை அங்குக்காண்பதே கருமம் என்று அங்ஙனஞ்செய்ய எத்தனித்தாள். அதுகண் கருணை என்பவள் அவள் கண்களின் நீரைத்துடைத்து மா போடணைத்து வியர்வையை அகற்றித் தேற்றுவாளாயினள் பெறுதற்கரிய என் அமிர்தமே, துயரமானது உண்மையா நமக்குவருவதாயின் நற்குறிகள் புலப்படுமோ. தோளும், கண்

றும், புருவமும் உனக்குமாத்திரமா எனக்கு மிடப்புறத்துத் டிப்பதைப் பார்ப்பாயாக. ஆதலால், உன் அன்னைக்கு அங் க யாதுந்தீங்கில்லை என்பது திண்ணம். அன்றியும் அவ நக்கு ஒருதீங்குசெய்ய யாவராயினும் வல்லவராவரோ. தா னுஞ் சிறந்தவராகிய நண்பினர்க்கும் தீங்குவிளைவிக்கு மிய பினராகிய நம்பகைவர் நம்மை வருத்தும்பொருட்டு இப் பாய்யுரையைக்கட்டிவிட்டார், அதனை மெய்யென்றுகொண் டனை. அது உன் பேதைமை. சுத்தமாகிய பளிங்கினிடத் த எவ்வெவ்வுருச் சாருகின்றதோ அவ்வவ்வுருவை அதுகா டுவதுபோல உன்னுள்ளமும் எவ்வெவர் பேச்சையுங்கவர்ந் நம்பித் துன்பத்தை அடைகின்றது. அத்துன்பத்தை ஒழி.

பரிசுத்த ஸ்தலங்கடோறுஞ்சென்று அங்கே உன் தாயைத் தடி அவள் இல்லை ஆயின், அப்பால் சமணுதியர் இருப்பி ந்தேடிப் பக்கத்திலேமறைந்திருந்து அங்கு உன்தாய் இருக் ஞ்செய்தியை ஆராய்ந்து உணர்வதே இனிச்செய்யத்தக்க ருமம். ஆதலால், எழுந்திரு போவோமென்றுள். அதற் ச் சாந்தியும் ஒருவாறு மனந்தேறிப் போவோம் வா என்ன, ருவரும்போயினர். அங்ஙனம் போன இருவரும், பற்பல த்துறைகளையும், தேவஸ்தலங்களையும், புண்ணியாரணி ங்களையும், மலைச்சாரல்களையும் அடைந்து ஆங்காங்குந்தேடி ங் காணுமையால், சாந்தி பின்னரும் இரங்கிச்சோருவா ராயினுள்.

என் அன்னையோ! தருமம்புரிவோரிடத்து இருப்பாயென் அவரிடஞ்சென்றேன். அவரையும் நீங்கினுய். வேதிய டத்துக் காணலாமென்று அவர்பாலுஞ் சென்றேன். அவ ரயுந் துறந்தாய். மந்திரஞ் செபிப்பவரிடத்துச் சேர்ந்தா யென்றுசென்றேன். அவரையும் மறந்தாய். விரதம்புரிபவ டத்து வசிப்பாயென்று பார்த்தேன். அவரையுங் கைவிட் டாய். அப்பால் வேள்விசெய்பவரிடத் துறைவா யென்று டினேன். அவரிடத்துங் கண்டிலேனே. பிரமசுரூபிகளா ய முனிவரகத்திலே வாசஞ்செய்கின்ற உன்னைக்காணே ன. இனி என் உயிர்தரிக்குமோ! வாவென்று வாய்திறவா ா! என்று இவ்வாறு புலம்புகின்றவளைக் கண்ணை...

தடுத்து, ஐயோ, தங்காய், ஆராயாது வாளா புலம்புகின்றனை யே. சிரத்தை மாது பகைவர்கையில் அகப்படலாகாதென்று மறைந்து உபநிடதையிடம் சென்றாள்போலும், அன்றேல் யோகினியரிடத்துச் சென்றிருத்தல் வேண்டும். அதுவுமில் லையாயின் யாரோ பெரியோரிடத்திற் சென்றிருத்தல்வேண் டும். ஆதலால், இப்போது சாருவாகன் முதலியோரிடத்தும் நம் உருவை மாற்றிக்கொண்டு சென்று தேடுவோம். அங்கே எச்செய்தியுஞ் செவ்வே வெளியாகும் என்றாள்.

அவ்வாறே கருணையோடு சாந்திசெல்லும்போது, 'பித்த னே, அன்றிப் பேயோ, என்று ஐயுறும்படி ஒருவனெதிர்ப் பட்டான். உடம்பை மூடிப்படர்ந்த தீரா அழுக்கும், மயிர்ச் சிக்கு நாற்றமும், நாசியினின்றும் ஒழுகுகின்ற சளிபுகப் பெற்ற வெள்வாயும், அருவருத்த நிருவாணமும்; ஒருகையி லே பிரம்பும், மற்றொருகையிலே மயிற்றோகையும், பாசிப்பல் லும், மெல்லப் பெயர்த்துவைக்கும் பாதமும், பாழாகிய நெற் றியும், நீண்டு கூர்ந்தநகமும், நீலக்கரிபோன்றநிறமும் திரண் டு கூடி உருவெடுத்தா லொப்பநின்ற அவனைக்கண்ட சாந்தி துணுக்கிட்டுப் பேரச்சமுற்று, நரகந்தான் இவ்வுருவெடுத்து வந்ததோ இவன் யாவன் என்று கருணையை வினவினாள்.

அதற்குக் கருணை என் அம்மே? இவன்றான் சமணனெ னப்படுபவன்; வா அவனிடஞ்சென்று உன் தாய் செய்தியை அறிவோம் என்று அவனை இருவரும் அணுகினர்.

சாந்திச்சருக்கம் முற்றும்.

---

பதினெட்டாவது

## சமணதியர் சருக்கம்.

---

அச்சமயத்தில், சமணன் என்பவன் தன் பாதங்களிலே வீழ்ந்து சித்தமொத்து அன்புடனே வணங்கிய சீஷர்களைநோ க்கித் தனது திகம்பர சித்தாந்தமதத்தின் உண்மைகளை எடுத் துப் போதிப்பானையினன், ஊனுண்ணும் விருப்பினாலே மகங்

ள் செய்கின்றேமென்று பசுக்கொலைபுரிகின்ற தீயவர்களைக் ாணும்பொழுதெல்லாம் கண்களைப் புதைத்துக்கொண்டும், வர்கள் ஓதுகின்ற வேதவசனம் நமது காதிலே நுழையா ண்ணம் செவிகளைச் சேமஞ் செய்துகொண்டும், சக்கராயு த்தையும் சூலப்படையையும் வேலையும் கையிலேந்திக் கொ லக்காயத்தராய்த் திரிகின்ற தெய்வங்களை இகழ்ந்துகொண் ம், சடாதாரிகளையும், நீறணிவோரையும், உருத்திராக்ஷமாலை ரிப்பவரையும் தரிசிக்காது அஞ்சிக்கொண்டும், எவர்க்கும் துக்கும் துன்பஞ்செய்யாமையை விரதமாகக்கொண்டும், சீவ காடிகளையெல்லாம் நம்முயிர் போலக் காத்துக்கொண்டும், கொலைசெய்யா விரதமே எவற்றினும் மேலான விரதமெனச் ாதித்துக்கொண்டும், உடம்பைமூடி அழுக்குப்படர்ந்தாலும் ரிலே ஸ்நானஞ்செய்யாமலும், கையினாலே மயிரை ஒவ்வொ ருக நீக்கிக்கொண்டும், உறியிலே வாசஞ்செய்துகொண்டும், ாமநூலிலே விதித்தபடி ஒழுகுவோமாயின் நமக்கு உலகத்தி ல சித்தியாதது ஒருபொருளும் இல்லை; என்பதும் பிறவுங் றி முடித்தான்.

இவற்றைக் கேட்டிருந்த சீடர்களில் ஒருவன் எழுந்து ணங்கி, உலகில் அவரவர் பக்குவத்துக்கேற்றதே ஒழுக்க மென்பது உணராமல், எவராலும் போற்றப்படுவதாகிய வை சேத்தை வாளா இகழ்ந்து கூறுதல் திருவடிகளுக்கு நன்று மா என்றான்.

என்றலும், சமணன் சினந்து, அங்கு நின்ற சிரத்தையை நாக்கிச் சிரத்தாய், இவ்வறிவிலியைப் பற்றுதற்கு இங்கு ருக என்றான். அச்சொல், முன்னே மாறுவேடந் தரித்து றைந்துவந்து நின்ற கருணைமாதினது செவியிற் பட்டமாத் ிரத்தில் மனம் புண்ணாகினள். மற்றச்சாந்தியோ துணுக் ற்றுத் தம்பமாயினள். அதற்கிடையிற் கருணை மனந்தெ ரிந்து அங்கு வருகின்றவளை யாரோன உற்றுநோக்கினள். நாக்கித் தாமதசிரத்தை என உணர்ந்து சாந்திக்குக்கூற, சாந் ி கவற்சிதீர்ந்தாள். தீர்ந்தபின், இரும்புக்கும் கனகத்திற்கும் பான் என்பது பொதுப்பெயரானாற்போல, அழகுவாய்ந்த ன் தாய்க்கும், பிறைபோல நீண்டுவளைந்த பல்லும், மலைப்

பிளப்புப்போலும் பேழ்வாயும் உடைய இக்குரூபப்பெ
ணுக்கும் இடப்பட்ட சிரத்தை என்னும் பெயரன்றோ நம்
மயக்கியது என்று அடங்கினள். இவர்செய்தி இவ்வாறு
அங்கே தாமதசிரத்தை, சமணன் ஏவலின்படிசென்று அ
சிஷனைத் தழுவினாள். தழுவியபோது அவனும் இவள்வச
பட்டு நமது சமணமதமே இனியமதமென்று ஆனந்தக்கூ
தாடினான். அதுகண்டு சாந்தியுங் கருணையும் அங்குநின்று
மீண்டு அப்பாற்சென்றார்.

செல்லும்போது பனம்பழம்போலத் தலையை முண்டித்து
கொண்டும், மெல்லிய துவராடையொன்றை மேலே போர்
துக்கொண்டும், ஒருகையிலே புஸ்தக மொன்றை ஏந்தி
கொண்டும், நங்காய்! நங்காய்!! பலி இடு என்று மனைகடே
றுஞ்சென்று கூவிக்கொண்டும், எதிரே வருகின்ற ஒருவனை
சாந்திகண்டு கருணையைநோக்கி இவன் யாவனென்று வினவ
னாள். அதற்குக்கருணை இவன்றான் புத்தன். அவனருகே
செல்வோம் வாவென்றுசென்று அவனருகே அவளோடுநின்
றாள். அப்போது பலர் அப்புத்தன் அடியில்வந்து வீழ்ந்
வணங்கி எழுந்தார். அதுகண்ட புத்தன் அவரைநோக்கி
புத்திக்கு விஷயமாகின்ற எப்பொருளும், நீரோட்டமும் தீப
சுடரும்போலத் தோன்றி நித்தியமாகாது அழியும். நெறித
பாமல் ஒத்திருப்பது புத்தியேயல்லாமல் உலகில் வேறு யா
மில்லை. பிரகாசம் பொருந்திய புத்தியானது அகத்திலே
யுள்ளதாயினும், பொருள் யாவும் அதனிடத்தே வெளிப்பட்
நிற்கும் பற்பலவாசனையினாலே அப்புத்தி பற்பலவாய் நிற்
தல்லால் மற்றில்லை.

ஆதலால் பலவகைப்பட்ட வாசனையும், விஷயச்சார்பு
நீங்குமாகிற் புத்தியானது ஒழுங்காகி அலைவின்றித் தீப
போலப் பிரகாசித்து நிற்கத் தலைப்படும். அங்ஙனம் நிறுத்
தற்கு முயற்சிப்பதே தக்க கருமம். இதுவே சௌகத சி
தாந்தப் பொருண்முடிபு என்று கூறினான். அதனைக்கேட்
அங்குநின்றார் யாவரும் உண்மை! உண்மையென்று வண
கும்போது, சமணன் அப் புத்தன்முன்னேவந்து என்வின
வுக்கு உத்தரங்கூறு, இங்குவா என்றான்.

அதற்குப்புத்தன், சமண் மூடா! யானே உன்னிடத்துவரு
து! நீ இங்கேவா என்றான். இவ்வாறு இருவரும் ஒருவரோ
டாருவர்கோபித்து உரையாடுகையில் கரியமேகத்தை யூடு
ளந்து ஒளிவீசுகின்ற மின்னற்கொடிபோலக் கையிலே வா
ளான்றை ஏந்திச் சுழற்றிக்கொண்டும், என்புமாலையை மார்
லே தரித்துக்கொண்டும், மத்தப்பூ, எருக்கம்பூவைத் தலையி
ல சூட்டிக்கொண்டும், மயானத்துச் சாம்பரை எடுத்து உடம்
பங்கும் பூசிக்கொண்டும், கையிலே தலையோடொன்றை ஏந்
க்கொண்டும், என்புக் குண்டலங்களைக் காதிலே அணிந்து
காண்டும், கள்மயக்கினாலே சோர்ந்து நடந்து பிதற்றிக்
கொண்டும், கபாலி அங்குவந்தடைந்தான். அவனைக்கண்ட
மணன், அவனைக்கூவி, மயானம் எல்லாம் ஒன்றுதிரண்டு
ருவெடுத்து வருவதுபோல வருகின்ற ஏ கபாலீ! உன்வர
ாறு என்னை! உன்நெறி என்னை! எனக்குச் சொல்லு என்
ன். அதற்கு அவன் இவ்விரதம் காபாலிகம் எனப்படும்;
னக்குத் தெய்வம் வைரவன். எலும்புடனே தலையோட்
டத்தரித்து மயானத்திலே சாம்பரைவாரிப்பூசி அங்கிருந்து
பவாசஞ்செய்து அன்போடு வைரவம் என்னும் ஓமத்தை
மைத்து நரபலியிட்டு, விலா ஊனை எடுத்து, மதுவைக்
லந்து அவிகாரஞ்செய்து ஓமமுகத்திலே ஆகுதிபண்ணிப்
ன்பு நமது உதரத்தீக்கு மதுவை வார்த்துத் தலையோட்டி
ல உண்டுகளிப்பது பாரணமாகும். இதுவுமல்லாமல், ஒரு
னைநங்கடவுள் எதிரேநிறுத்தி அவன்கண்டத்தை அறுத்து
வன் இரத்தத்தையும் தசையையும் எடுத்துப் பூசைசெய்வது
ண்டு. இதுவே வைரவவிரதம் என்றான். இதனைக் கபாலி
சால்லுந்தோறும் புத்தனும் சமணனும் தம்மிருகாதுகளையுங்
ககளாற் செம்மி அடிக்கடி தங்குருநாமத்தை உச்சரித்துக்
காண்டு கபாலியை நோக்கி இஃதொரு விரதமென்று உனக்
ப்போதித்து இப்பாதகத்தை உன்னைச்செய்யுமாறு ஏவிய
ாவியாவன்? அதனைக் கைக்கொண்டு யாதுசெய்தனை? அந்
தா கொடுமை! கொடுமை!! என்றார்.

என்றமாத்திரத்தில் கபாலி கண்களிலே தீப்பொறிசிந்தச்
னந்து அவரைநோக்கிச் சோதிக்கொழுந்தாகிய கண்ணுதலை

அடையும்வழியை உபதேசிக்கின்ற நங்குருவாகிய ஞானதேசி கனைப் பாவி என்று கூறினீர். எனக்குபதேசித்த விரதபலத்தி னால் எவ்வரியசெயலையும் யான்செய்யவல்லவன். அது பொ தன்று. நமதுகுருநாதன் சங்கரனோடு எத்தேவர்களையும் இவ் வுலகில் அழைக்கவல்லவன். ஆகாயத்திலே சூரிய சந்தி நக்ஷத்திரங்களைச் செல்லாது தடுக்கவல்லவன். நீரினாலே உல கம்முழுதையும் நிரப்புவன். அந்த நீரை ஒரு இறைப்பொழு தில் உண்பன். உலகெங்குஞ்சென்று ஒருநொடியில்மீள்வன் மண்ணை விண்ணாக்குவன். விண்ணை மண்ணாக்குவன். இவை யன்றி இன்னும் எத்தனையோ பேரதிசயங்களைச் செய்யவல் வன் என்றான்.

அதுகேட்ட சமணன், மாயையினாலே உன்னை வஞ்சித்து இவ்விந்திரசாலத்தை உனக்கு அக்குரு தோற்றுவித்தான்போ லும் என்றான். என்றலும், கபாலி அவனைச் சினந்துநோக்கி எம்பிரானோ இவ்விந்திரசாலஞ் செய்பவன்? சிவத்துரோகியா யினை. ஆதலால் இவ்வாளினால் உன்னைக் கூறுசெய்து எவ் வைரவக்கடவுளுக்குப் பலிகொடுத்து விடுவேன் என்றுகூறி முழங்கிக்கொண்டு வாளையுருவிப் பூதகணங்கள் கொக்கரி துப் பின்னேசெல்ல முன் சென்றான். அதுகண்டு சமணன் அஞ்சி ஓடிப் புத்தனைத்தழுவினான். அப்போதுகபாலி, ஈசனை நிந்தித்த உன்னைக் கொலைபுரியாது விடேனென்றான். பு தன் கபாலியை நோக்கி ஐயனே! உனது விரதநீதியை விசா ரிக்கப்புகுந்த ஒருவனைக்கொல்வது தருமமோ! தருமமாகாதே என்ன, கபாலியும் எடுத்தவாளை உறையிலிட்டான். அதுகண் டசீஷர், கபாலியைநோக்கி, எடுத்தவாளை உறையிலிட்டா நாம் முத்தியடைவதெப்படியென்றார்.

அதுகேட்ட கபாலி, கபாலாதிகள் தரித்து ஈசனைப்போல உருக்கொண்டு கௌரியைப்போல ஒருபெண்ணைத் தழுவு தே முத்தியாகும்; சங்கரன்மொழிந்ததும் இதுவே என்றான் அதுகேட்ட சீஷர் மீண்டும் அவனைநோக்கித் துறவிகளுக்கு முத்தியேயன்றிப் பெண்களைச் சேர்ந்து இன்பஞ்சுகிப்பவ ருக்கு முத்தி உண்டென்பீராயின், யார்தாம் அதனை உண்மை யெனக் கொள்வர் என மறுத்தார். அதற்குக் கபாலி அதனை

ண்மையென ஒப்பி மௌனஞ் சாதித்து இவரை மயக்குவ
; தகுதியென் றெண்ணி, சிரத்தாய் இங்குவருக என்றான்.
துகேட்ட சாந்தி கருணையோடு கவன்றுநின்றாள். அதற்
டையில் இறந்தவர்களுடைய எலும்புமாலை மார்பிலேவிளங்க
நகையிலே கபாலமும் மற்றொருகையிற் சூலமுந்தரித்துக்
ருபியாகிய இராசதசிரத்தை அங்குவந்து வெளிப்பட்டாள்.
வளைக்கண்ட கருணை இவள் இராசதசிரத்தை. உன்தாயா
ப சத்துவசிரத்தையல்லள் என்று சாந்திக்குச்சொன்னாள்.
ப்பால் அவ்விராசத சிரத்தை கபாலியைத் தொழுது, யான்
ங்குச்செயற்பாலது யாதென்றுவினவ, கபாலி அவளைநோக்
இங்கிச்சீடரை உன் வசமாக்கக் கடவையென்றான். அவ்
றே அவளும் அச்சீடரைக் கடைக்கண்ணால்நோக்கிய அள
ல் அவரும் ஒந்திமுற்பட்ட மயிலென்ன மனஞ்சுழன்று தம்
பந்தப்பி அவள்வயமாயினர். அப்பால் அச்சீடர்கள் கபாலி
பநோக்கி, ஐயனே! நன்றுபோதித்தீர். உமதுமதத்தில் இன்
;தைக் கைமேற்கனியாகக் கண்டேம்; இதுபோல் மற்றெம்
த்திலும் நாம்கண்டதில்லை என்று பன்முறை அவனைப்
ாற்றி, கிருபைகூர்ந்து இதுகாறும் யாம்செய்துவந்த தீமை
ருக்கு யாதேனும் பிராயச்சித்தம் செய்தருளல்வேண்டுமென
ண்டிநின்றார். அதற்குக் கபாலியு மிசைந்து ஓர் ஓட்டை
த்து மந்திரித்து அதிலே கள்ளை நிறையப்பெய்வித்து,
தைத் தன்வாயிலேவைத்துச் சிறிதுண்டபின்பு, அம்மிச்
ல எடுத்துக் கபாலத்தோடு சிரத்தைகையிற்கொடுத்து, இது
;வருக்குத் தாமுங் கிட்டத்தக்க தொன்றன்று. மூப்பை
கி மரணத்தைப் போக்கிப் பாசபந்தத்தை அகற்றும். இவ்
று சிறந்ததாகிய இதனை நாம் உன்மீதும் எனையசீடர்மீதும்
வத்த அன்பின்மிகுதியினாலே கொடுக்கின்றேம். உண்ணுக
பன்றான், அதனை அச்சிரத்தை ஏற்றுத் தானும் சிறிதுண்டு
டத்தைத் தன்னாற்றழுவப்பட்ட சீடருக்குக் கொடுத்தாள்.
தனைவாங்கி உண்ட சீடர் பேரானந்தமுற்றவராய்க் கபாலி
பநோக்கி, முன் அநேகவேசியர் வாயெச்சிலை உண்டறி
பம். ஆயினும் இதுபோலும் அது மதுரந்தந்ததில்லை. இத
த் தேவர்கள் உண்பார்களாயின் தாம் முன் உண்டது

அமிர்தமன்று ஆலாகலமே யாமென்பர். இச்சிரத்தையினது மொழியிரசம் இதிற் கலந்தமையினாலோ அன்றி அவள் அத சம்பந்தத்தினாலோ இம்மது இவ்வாறு தித்திப்பது! அன்றி இம்மதுவினியற்கை இதுவேயோ! இதற்கு மகிழின் கந்தமு முண்டோ! எவ்வகைக் கனியையும் இது பழித்துவிட்டதே இம்மதுவை நாம் புசித்தமாத்திரத்தில் உடம்பெங்கும் பரபரத்து உள்ளங்களித்து உருகி இன்பம் பெருகி ரோமஞ்சிலிர்த்து விட்டதே என்றுகூறி; இஃது என்னை அற்புதமென்று கரங் கள்கொட்டிக் கண்டவர்கள் நகையாடுமாறு ஓர் ஆடலாடி னார். விழி சிவந்து, வாய் வெளுத்து, மொழி தழுதழுத்து, மெய் சோர்ந்து, தலைசுழன்று, கோபத்தோடு நகைத்து, அகங் களித்து முகம்வேர்த்து எழும்புவார்; இடறி விழுவார்; நடை மிடுவார்; ஒன்றை நினைந்து மற்றொன்றைச் சொல்லுவார் சொல்லிய தொன்றாக மற்றொன்றைச் செய்வார்; இங்ஙனங் கண்டவர்நகைக்க மயங்கி ஆடிய இருவரும் மெய்ம்மறந்து மண்ணில்வீழ்ந்து கண்ணுறக்கமெய்தினார்.

அதுகண்ட கபாலி சிரத்தையைநோக்கி நமதுதொண்ட கள் உடம்பயர்ந்து, வீழ்ந்து உறங்குகின்ற கம்பீரத்தைப்பார் தனையா? என்றுகூற, அவர்களும் வெறிதெளிந்து எழுந்து கபாலியைத்தொழுது, ஐயனே! எனவிளித்து, நாம்புகுந்த இட மதத்திலே உள்ள இன்பம் தேவர் தாமும் அடைதற்கரியது மது என்று மனத்திலே எண்ணுகினும் அதுகொடுக்கின் இன்பம் இணையற்றது என்றால் அதை உண்ணுமிடத்து அது தருகின்ற இன்பத்தை எவ்வாறு கூறுவோம்! அவ்வின்ப தை இன்று உமது திருவருளாலடைந்தோம் என்றனர். அத குக் கபாலி அவர்களைப்பார்த்து, தொண்டர்காள்! இவ்வித சிறந்த மது யாவர்க்குங் கிட்டத்தக்க தொன்றன்று; இன உமக்கு அட்டமாசித்தியும் பலிக்கும். தேவஸ்திரிகளும் நினை க்காமுன் வந்து உம்மைச் சேருவர் என்று கூறினான். அதை கேட்டுப் பக்கத்திலின்றசமணன் கபாலியைநோக்கி, யாமி காறும் வீண்காரியம் புரிந்துவிட்டோம். உமக்கு அட்டம சித்தியும் பலிப்ப துண்மையாயின், யாம் இதுகாறுந் தேட அலைந்தசிரத்தையை இங்கிருந்தபடியே வரவழைப்பீராகவெ

ரன். கபாலி அவனைநோக்கி, சிரத்தை இருக்கின்ற இடம் இதுவென்று உமது கணிதநூலினு லுணர்ந்து சொல்வீராயின், உமது முன்னர்த்தானே இவ்விடத்தில் வரவழைப்போம் என்றான். அதற்குச் சமணன், இக்கணத்திற்றனே சிரத்தை இருக்குமிடத்தைச் சோதிடத்தினல் ஆராய்ந்து கூறுகின்றேன் வாருமென்று அம்முறைப்படி எண்ணத்தொடங்கினன். அப்போது, மானன் என்பவன் தருமனைத் தேடி அவ்விடத்தை அடைந்தான். அங்ஙனம் அடைந்த மானனைச் சமணன் நோக்கி நீ இங்கு வந்தகாரணம் யாதென்று வினவ, அவன் மோகராசனது ஏவலின்படி தருமனைப்பிடித்து விலங்கிட்டுப் போகவந்தேன். உலகத்தில் யானவனைத் தேடிப்போகாத இடமில்லை. அவ்வாறு தேடியும் அவன் இருக்கின்ற இடம் எனக்குப் புலப்படவில்லை, ஆதலால் சோதிடத்தில் ஆராய்ந்து அத்தருமன் இருக்கிற இடத்தை எனக்குக் கூறல் வேண்டும் என்றான். அதற்குச் சமணனும் இசைந்து, அவ்வாறேபார்த்து உனக்குக்கூறுகின்றேன் சற்றுநில்லு என்றான். அங்ஙனங் கூறிப் பலகறைகொண்டு வாரம், திதி, நக்ஷத்திரம், இராசி முதலியவைகளை எண்ணிக் கிரகநிலைகளை ஆராய்ந்து அவற்றின் பலன்களை நாடி அவ்வழியே இருவரும் மறைந்திருக்கின்ற விடங்களை ஊகித்துணர்ந்து, கபாலியைநோக்கி; ஐயனே, சத்துவசிரத்தை என்பவள் யோகினிகளது அருள்பெற்றுத் தபத்திகளது உள்ளத்திலே மறைந்து வாசஞ்செய்கின்றாள். அப்பால் தருமன் இருக்கின்ற இடத்தை ஆராயுமிடத்து அவன் புண்ணியஸ்தலங்கள், தெய்வநதிகள், மலைச்சாரல்கள், தபோவனங்கள் முதலிய இடமெல்லாம் தனது தங்கையாகிய சிரத்தையைத் தேடிக்காணுது அங்கம் வாடி ஈற்றிலே தபத்திகளது உள்ளத்திலே அவள் இருப்பதுணர்ந்து தானும் அங்குச் சென்று வாசஞ்செய்பவனுயினன் எனப் புலப்படுகின்றது என்று கூறினன். இவற்றைச் சமணன் கூறப் பக்கத்திலிருந்து கேட்ட சாந்தியுங் கருணையும் சேமித்துவைத்த அரிய திரவியத்தை இழந்து துன்புற்றுப் பின்னர்க் கண்டடைந்தவர்போலக் களிப்புற்றுச் சிரத்தையைக்குறித்து அவர் மனத்தி லுதித்த ஐயம் நீங்கிச் சோதிடத்திலே இத்துணை

நுண்மையாக ஆராய்ந்து கூறிய இச்சமணன், நம்மையும் ஒரு போது உணர்ந்தறிவன். ஆதலால் இங்கு நின்றும் அகல்வதே கருமமென்று இருவரும் அங்குநின்றும் அகன்றார். அப்பால், கபாலி சமணுதியனை நோக்கி, சிரத்தையுந் தருமனும் யோகினியரது அருட்காவல்பூண்டு தபத்திகளது உள்ளத்திலே வாசஞ்செய்வது உண்மையானல் அங்குச் சென்று அவ்விருவரையும் பற்றுதற்கு வல்லவர் யாவர்! ஆயினும், என் அன்னையாகிய வைரவியை வரவழைத்து அவளைப்போக்கி அவ்விருவரையும் கொணரும்படி செய்வேன் என்றுகூறி வைரவியை மனத்திலே நினைத்தான். அவளும் கபாலமும், சூலமுங் கைகளிலே தாங்கி எலும்புமாலைகள் பூண்டு கண்களிலே அக்கினிசிந்த அட்டகாசஞ்செய்து பிரசன்னமானள். அது கண்ட கபாலி அவள்பாதங்களில் வீழ்ந்து வணங்கி, தருமனையுஞ் சிரத்தையையும் இக்கணத்திற்றனே சென்று பிடித்துக் கொணர்ந்து என்னிடம் விடுமாறு திருவுளங்கொள்வாயாக என்று அவளை வேண்டினன்.

சமணுதியர் சருக்கம் முற்றும்.

---

பத்தொன்பதாவது

## வைரவிச் சருக்கம்.

---

அதுகேட்ட வைரவி என்பவள், விஷமெல்லாந் திரண்டு உருத்தெழுந்து நின்றாற்போல எழுந்து நிமிர்ந்து உலகங்குலுங்க நடந்து சென்று சிரத்தையும், தருமனும் இருக்கின்ற இடந்தேடி அவரைக்கண்டாள். இவர்களைக் கவருவதற்கு எற்ற உபாயம் யாதென்று சிறிதுநேரஞ் சிந்தித்து ஈற்றில் இதுசெய்வேனென்று துணிந்து தன் உருவைமாற்றி, வேற்றுருவந்தாங்கி உயிர்களைக் கவருதற்குச் செல்லுகின்ற காலனைப்போல மாயமாகச் சென்று யோகிகளது உள்ளத்திலே புகுந்து, அங்கிருந்த சிரத்தையையும் தருமனையும் ஒருசேரப்பற்றிச் சிறுபறவைக்குஞ்சுகளைப் பருந்து பற்றிக்கொண்டு ஆகாயத்திற்சென்

?ற்போல வெளிப்பட்டாள். அப்போது அவ் யோகிகளதுள்
ரமானது, வேடர் புள்ளைப்பற்றிப்போக அதனுல் வெறுமை
-ற்றுப் பாழாகிய சேக்கைபோலவும், யானை உண்ட விளாங்
னிபோலவும், அந்துண்டுபோலியாகிய நெல்போலவும் பாழா
ிற்று. அது நிற்க, அவ்விருவரையும் மாயரூபங்கொண்ட
ைவரவி தன் இருகைகளிலும் இடுக்கி வாயுவேகமாகச் சென்
ஈன். சென்றபோது சத்துவசிரத்தை அக்கையில் அகப்பட்
-படியே பேர்வாள், யான்செய்த தீவினை யாதென்பாள், நடு
ங்கி உலைவாள், தருமன்பொருட்டுக் கவலுவாள், கண்மாரிசொ
ிவாள், கருத்தழிவாள், சோர்வாள், துவண்டுவிழுவாள், காற்
றிடிபோலச் சுழலுவாள், இவ்வாறு உடம்புவெதும்பியும், மதி
லங்கியும், வெயர்வரும்பியும், கூந்தல் சோர்ந்தும், வளைகள்
கர்ந்தும், கைகள் நடுங்கியும் துன்புற்றுச் சிரத்தைநிற்ப; அது
கண்ட பலர் ஐயோ! இவட்கு இது வருவதோ என்று பெரு
மூச்செறிவாராயினர். இப்படிப் புலிவாயிலகப்பட்ட மான்
போலநைகின்ற தங்கையைத் தருமன்பார்த்து, என் அம்மே!
ளராதிரு என்று தேற்றி, வைரவியினுடைய கைப்பிடியினின்
றும் வழுவிப் புறத்திலேசென்று நின்று அவள் போக்கைத்
தடுத்து, என் கையிலேயிருக்கின்ற வாளினுலே இவளுடைய
அவயவங்களைக்கொய்து கொல்லுவேன் என்று மனத்திற்குறித்
துக்கொண்டு நின்றான். அப்போது மற்றொருகையினுல், இடு
க்கப்பட்டிருந்த சிரத்தை சகித்தற்கரியதுன்பத்தை அநுபவிப்
பவளாகி யோகினிகளை நினைந்து, என்னைக் காக்குமாறு உறு
திகூறிய உமது அருள்வாக்கு அவம்போயிற்றே! இந்தக் கொ
டிய துஷ்டையினது சாமர்த்தியத்திற்கு அவள் முன்னே
தனித்து நிற்கின்ற என்தமையன் றருமனுடைய பலம் ஒரு
பொருளாகுமா! இதற்கு என்செய்வேனென்பாள்—அன்போ
டு என்னை வைத்துவளர்த்த பெரியோரே இது உமக்கு முறை
யோ என்பாள்—யோகினிகள் சதிசெய்வது முண்டோ என்
பாள்—விதியோ இதுஎன்பாள்—முன்னொருகாலத்திலே கஜே
ந்திரன் முதலைவாயில் அகப்பட்டபோது அவனைக்காத்தது நீ
யல்லலயோ என்று அரிபக்தியைக் கூவுவாள். துரௌபதை
மானபங்கமுற நின்றகாலத்திலே அவள்மானத்தை அன்று

காத்தது நீயல்லையோ என்பாள். பிரகலாதனைக் காக்கும் பொருட்டுத் தூணிலே நரசிங்கந் தோற்றுமாறுசெய்தது நீயல்லையோ. என்னுடம்பு இவ்வாறு உருகியொழியப் பூமியில் யாரை அணைந்து சுகித்திருக்கின்றனையோ! இக்கொடியவள் என்னைத் தன்கையிலே இடுக்கி என் எலும்புகள்நெரிய வருத்துகின்ற இச்செய்தியைப் பாராதிருப்பது என்னபராமுகமோ என்பாள். இப்படிப் புலம்புகின்ற சிரத்தையினது எதிரிலே சோதி ஒன்று தோன்றிற்று. அச் சோதியானது சிரத்தையினது தடையைவிடுவித்து வைரவியைக்கொன்று தருமன்முன்னே வீசிப்போயிற்று.

"பொல்லாதவர்நன்மை பொருந்துவதும்
நல்லார்மீகவன்றுயர் நண்ணுவதும்
தொல்லார்வினையால் வரினும்தொடர்பாய்
நில்லாதெனும்வாய்மொழி நிச்சயமே."

இங்ஙனம் வெல்லுதற்கரிய வைரவி என்பவள் இறந்ததை நோக்குமிடத்து இதுபோலவே மோகனுடையவாழ்வும் மேல் அழியுமென்பதற்கு அதுவோர் எதுவாயிற்று. அப்போது சிரத்தையுந்தருமனும் இரவெல்லாந்துயின்று, துயிலொழிந்து எழுந்து வருபவர்போல வரக்கண்ட தபோதனர்களெல்லாம் பேரானந்தமுற்று அவரைத்தொடர்ந்தார்.

அதுகண்ட அவ்விருவரும் அரிபக்தியே யெம்மைக்காத்தது, அவர் அருளைப்பெற்றநமக்கு எவ்வகைத்தீமைவந்தாலும் அது விளக்கை எதிர்ந்த விட்டில்போல மாய்வது நிச்சயம். அதனை இன்றுகண்டோம் என்றுகூறி யோகினியரை நாடி விரைந்துசென்றார்கள்.

வைரவிச்சருக்கம் முற்றும்.

---

## இருபதாவது
## சிரத்தைமீட்சிச் சருக்கம்.

---

அங்ஙனஞ்சென்ற இருவரும், அரிபக்தி என்னும் யோகினியினது பாதங்களைவணங்கி, துஷ்டையாகிய வைரவிகையி

கப்பட்டுப் புலிவாயில் அகப்பட்ட மான்போலக் கலங்கி
ின்ற எம்மை உனதுகருணைப்பார்வையாலே இரக்ஷித்தாய்;
உன்னைப்போல் இடர்தவிர்ப்பவர் யாவர் என்று புகழ்ந்தார்.
அதனைக் கேட்டு மகிழ்ந்த யோகினிகள் அவ்விருவரையும்
நோக்கி, யாமே விவேகனுக்கு மணம்பொருத்தி அவனுடைய
பகைவரை வேரறுத்து ஈற்றிலே அவனுக்கு முடியுஞ் சூட்டி
வைப்போம். ஆதலால், யாதுவரினும்அஞ்சாதீர் என்றார்கள்.
அதுகேட்ட சிரத்தை, உன்னைப் பற்றுக்கோடாகக் கொண்ட
பான் இனித்தளரேன். யான் அஞ்சத்தகுவதும் யாதுமில்லை
யென்றாள். மீண்டும் யோகினிகள் அவளைநோக்கி இப்போது
யடைந்த துன்பத்தைநினைந்து எடுத்தகருமத்தைச் சோரவி
ாது பின்னரும் அதனை நாடிச்செல்வாயாக. உனக்குப்பின்
னை யாமுந்துணையாக வருவோம் என்றுகூறி, உபநிடதை
பிடம் அவளைப் போக்கினர். இங்ஙனம் விடைபெற்றுச்
சென்ற இருவரும், சிறிதுதூரங் கடந்துசெல்லுகையில், சாந்
திவந்து சிரத்தையைப் பேராவலோடு கட்டித் தழுவினாள்.
கருணைமாதும் தனது நாயகனாகிய தருமனைத் தழுவினாள்.
அவர்களும் முறையே எதிர்தழுவித் தமது கவற்சி தீர்ந்து
களிக்குமளவில், கருணை என்பவள் தனக்கும் சாந்திக்கும்
நிகழ்ந்தவெல்லாம் எடுத்துக்கூறினாள். அதனைக்கேட்ட சிரத்
தை பெருமூச்செறிந்து மீண்டுஞ் சாந்தியைக் கட்டித்தழுவி,
என்கண்மணீ! இத்துணைவருந்தினையோஎன்று உச்சிமோந்து
கண்ணீரிலே ஆட்டிக் கவற்சியும் களிப்பு முடையவளாய்ச்
சிறிதுபோது அடங்கி இருந்து, யோகினியரது கிருபை இருக்
கும்காறும், நமக்குத் துன்பம்வரினும், அது சூரியனைக்கண்ட
பனிபோல அகலுமென்னும் துணிபினாற் றேறினாள். அப்
பால், தருமனை நோக்கி நீயும் உன்தேவியோடு உனது நகரஞ்
செல்லக்கடவாய். நானும், என்புத்திரி சாந்தியும் உபநிட
தையிடஞ் செல்வோம் என்றுகூறி அவரைப்பிரிந்து மக
ளுடன் விரைந்து நடந்தாள். நடந்து சத்தியலோகத்தைய
டைந்து வாணியை யணுகிக் கைகுவித்து நின்றாள். அது
கண்டவாணி அவளை உபசரித்து உன்வரலாறு என்னை என்று
வினவினாள். அதற்குச் சிரத்தை, வாணியை நோக்கி, அம்

மே! யான் விவேகவேந்தனது தூதாக இங்கு வந்தேன்; என் பேர் சிரத்தை, உனது புத்திரியாகிய உபநிடதையை விவே வேந்தன் மணம்பொருந்தக் கருத்துற்றான்; ஆதலின் அவளை நீ அவ்வரசனுக்குக் கொடுத்தல் வேண்டும் என்று கூறினாள்.

அதுகேட்ட வாணி அவளைநோக்கி, விவேகனுக்குச் சுமதி யென்னும் மனையாளிருக்கவும், நீ பெண்கொடு என்று கேட்கி ன்ற உன்மதி என்னமதியாமோ! பெண்டிருக்கப் பெண்கொ ள்வாருண்டோ! உண்டேயாயினும், நாங்க ளதுசெய்யத்தக் தோ! அன்றி நாம் பெண்ணைக்கொடுத்தோமாயினும், இருமனை வியரும் இயைந்து வாழ்வார்கொல்லோ என்று வினவி மறு தாள்.

அதனைக்கேட்ட சிரத்தை அவளைநோக்கி, சுமதிதேவி தன வயிற்றிற் புத்திரோற்பத்தி இல்லாமையாலும், தனதுநாயகன துணைவலியின்றிப் பகைவரால் நலிகின்றமையாலும், பின்வரு வதை முன்னரோ உணரும் திறம் உடையளாதலாலும், இரண் டாம்விவாகம் தனது நாயகன்புரிதல் ஆவசியகமென உட்கொ ண்டு மனம்பொருந்தி இருக்கின்றாள். ஸ்ரீசங்கரனது ஒரு பா கத்தை இடமாகக்கொண்டருளிய உமாதேவி, அவர் தலையை இடமாகக் கொண்டருளிய கங்காதேவியுடன் அன்பாயிருக்க வில்லையோ? விஷ்ணுவினது மார்பை இடமாகக்கொண்ட இலக்ஷுமிதேவி தன் நாயகனைப் பின்னர்மணந்த பூமிதேவி யோடு அபேதமாக வாழவில்லையா? ஆதலால் உத்தமியாகிய சுமதியும், உனது கன்னிகைக்கு மேம்படாதவளாயினும் அவ ளோடு உயிர்க்குயிராய் அன்புகொண்டொழுகுவ ளென்பதில் சிறிதும் ஐயமில்லை என்றாள்.

இம்மொழிகளைக்கேட்ட வாணி அகமகிழ்ந்து முகமலர்ந்து தனது நாயகனாகிய பிரமனுக்கு இவையெல்லாஞ் சென்றுரை த்து, பின்னர்த் தன்மகளுக்குஞ்சொல்லி அவ்விருவர் மனக்க ருத்தையும் உடன்பாட்டையும்பெற்று மீண்டு வந்து சிரத்தை யைநோக்கி, ஆர்பெற்ற நன்மகளும் என்மகளுக்கிணையாகாள் அவளுக்குத்தக்க சீர்பெற்றநாயகனும் அவ்விவேகவேந்தனன் றி மற்றில்லை, ஆதலால் உன்கருத்துக்கு இயைந்தேன். இன்

நீ ஒரு சிறிதுநேரமுந் தாழ்க்காது விரைந்துசென்று விவேக வேந்தனையடைந்து அவனை இங்குக்கொணர்வாயாக என்றாள்.

அம்மொழியைச் சிரமேற்கொண்ட சிரத்தை வாணியையவ ணங்கி விடைபெற்றுக்கொண்டு தன்புத்திரியோடு அங்குநின் றும் நீங்கி அகத்துமகிழ்ச்சி முகத்துநிகழ்ச்சியாக விவேகவேந் தன் இருக்கு மிடத்தை நோக்கிச் சென்று அவ்விடத்தை அடைந்தாள். அவளை வழியிற்கண்டவர்கள் வந்துசேர்ந்தனை யா என்று மகிழ்ந்து அவளைத் தழுவிக்கொள்வார்; உன் வர வைக்காட்டிய இத்தினம் நற்றினம் என்பார்; உன்னை யாரோ பிடித்துச் சிறையிட்டாரென்று கேட்டு நொந்த நோய் இன்று தீர்ந்தது என்பார்; முன் நாம்கேட்ட வார்த்தையெல்லாம் பொய்யாயிற்று என்பார்; இவள் அங்கே சிறைப்பட்டு மீண்ட துண்டேல் முகம் பூரணசந்திரோதயம்போல ஒளிருமோ என் பார். சாந்திபோய் இவளை எவ்விடத்தில் எதிர்ந்துகண்டாள் என்பார். இக்கன்னிகையினது மனநோய் தீர்ந்ததொன்றே நமக்குப் பெரும்பாக்கியம் என்பார். இவ்வாறு பலரும் பல வாறுகூறி அளவில்லாத களிப்பெய்த, சிரத்தையும் விவேக வேந்தனை அடைந்து அவனைவணங்கி நின்றாள்.

அதுகண்ட விவேகவேந்தன் அவளைவாழ்த்தி, நீ இவ்விடம் விட்டகன்றதுமுதல் இன்று காறும் நிகழ்ந்தன வெல்லாம் எனக்குச் சொல்வாயாக என்ன, அவளும் நிகழ்ந்தவற்றை ஆதியோடந்தமாகக் கூறினாள். விவேகன் அவள் அடைந்த துன்பத்திற்காகக் கவன்று பின்னர் அவள் முடித்தகருமத்திற் காகமகிழ்ந்து மெச்சி அவளைநோக்கி என் நங்காய்! அரிபக்தி, சிவபக்தி என்னும் யோகினியரது அருள் நம்பால் உண்டு; புண்ணிய ரூபியாகிய நீயும் நம்மிடத்துள்ளாய். தருமனும் நம்மிடத்துள்ளான். ஆதலால் சுமதியோடுகூடி யான் ஆராய்ந் து இயற்றும் செய்கை முடியாது போவதில்லை. பெரியசமுத் திரத்திலே மரக்கலமே லேறிச் செல்லும்போது அடைந்த துன்ப மெல்லாவற்றையும் மனவலியினாலே பொருட் படுத் தாது சமுத்திரத்தைக் கடந்து நாட்டையடைந்து அங்கே அரிய திரவியங்களை ஈட்டி மீண்டுவந்து வறியவருக்கு அது கொண்டு தருமஞ்செய்வார்போல, நீ வருந்திச்சென்று மீண்டு

வந்து செய்த இவ்வுதவிக்கு யான் செய்யத்தக்க தொரு கைம்மாறு இல்லை! இல்லை!! இதனை நீ சொல்லுகின்ற அளவில் எனக்கு இத்துணை மகிழ்ச்சி உண்டாயிற்றே; இனி நான் உபநிடதையை மணம்புரிந்து மோகனுதியரை வெல்வதில் ஐயமும் இல்லை என்று இவ்வாறு விவேகவேந்தன் அவளுக்குமுகமன் பலகூறித் தானும் மகிழ்ந்திருக்கும்போது நியாயன்வந்து அங்குச்சேர்ந்தான்.

சிரத்தைமீட்சிச்சருக்கம் முற்றும்.

---

## இருபத்தோராவது
## விவேகன் போதகனைவரவழைத்த சருக்கம்.

அங்ஙனம் வந்து வணங்கிநின்ற மைத்துனனாகிய நியாயனை விவேகவேந்தன் நோக்கி, நம்பகைவனாகிய மோகனும் அவன் சேனைகளும் செய்கின்ற கருமங்களையும், நமது பக்கத்தார் தெய்வத்தலங்கள்தோறும் சென்று அங்கிருந்துபுரியுந் தொழிலையும் எனக்குக் கூறுவாயாகவென்ன, அவனும் சொல்லத் தொடங்கினான். ஐயனே, நமது நிரூபகன்முதலிய படைவீரர் தெய்வத்தலங்கள்தோறும் வேற்றுருத்தாங்கிச் செய்கின்ற செய்திகளை ஒற்றராலுணர்ந்த மோகராஜன், கலியனையும் சாருவாகனையும் அழைத்து, கலியனைத் தெய்வத்தலங்கள்தோறும் சென்று நம்மவரைப்பற்றிவருமாறும், சாருவாகனை உலகெங்கெங்கும் சென்று தான் கற்ற மித்தியாபோதனைகளைப் புகட்டிவருமாறும் போக்கிவிட்டுத் தானும் காசிநகரம்சென்றடைந்தான். அங்கே சத்துவசிரத்தை உபநிடதைபாற் றூது சென்றாள் என்பது கேட்டு, அவளைத்தடைசெய்யுமாறு மிச்சாதிட்டியையும் புத்தன் முதலாயினோரையும்போக்கினான். அப்பால், சோமநாதத்திலே தருமன் புரிகின்ற வீரச்செயல்களை மோகன் கேள்வியுற்று அவனையும் விலங்கிட்டுக் கொணருமாறு மானனைநடத்தினான். இங்ஙனம் மோகனாலேவப்பட்டுச் சென்றவருள்ளே, கலியன் என்பவன் தெய்வத் தலங்கள்தோ

ஞ் சென்று நம்மவரை ஒறுக்கத்தொடங்கியபோது அவனை அரி சிவபக்திகளாகிய யோகினிகள் எதிர்ந்து சாடி ஓட்டினர். ஓட்டப்பட்ட கலியன் நாணமேற்கொண்டு மோகனையடைந்து, அரி சிவபக்தியர் அருள் நம்பகைவர்க்குப் பெரிதுமுளதாதலால், அவரை ஒறுத்தல் யார்க்குமரிதுஎன்று கூறினன். அது கேட்ட மோகன் * கிங்கரரைக்கூவி, காமன்முதலிய படைவீரரையெல்லாஞ்சென்று தலைப்பட்டுக் கொணருமின் என்று போக்கினன். அவ்வுரைகேட்ட காமனாதியர் மோகனிடஞ் செல்ல வழிக்கொண்டார். மற்றைச் சமனாதியர்செய்தி இச் சிரத்தைமாது வாயிலாகக் கேட்டனையன்றே. சாருவாகன் மதமும் இனித் தலையெடுப்பதில்லை. ஆதலால் இனிச்செயற்பாலதாகிய கருமம் உனது திருமணமே. அதற்குத்தடை யாதேனுமுளதேல் திருவுளம்பற்றல்வேண்டுமென்று முடித்தான்.

முன்னர்ச் சிரத்தைவாயிற்கேட்ட அமிர்தவசனத்தோடு இந்நியாயனுரைத்த இனியமொழியும் விவேகனுடைய செவிவழியேபுகுந்து அவன் அகத்துண்டாகிய காமாக்கினிக்கு நறிய நெய்யாக, அக்காமாக்கினி சுவாலித்தோங்கி எழுந்தது. அப்போது அவன் மந்திரத்தலைவர் எண்மருள் ஒருவனாகிய நியமன் என்பவன் எழுந்து கைகூப்பி விவேகராஜனை வணங்கி, அண்ணலே, தெய்வகடாக்ஷத்தால் மோகனாதியர் வலிகுன்றினர் என்பதில் ஐயமில்லை. நம்மவர்கள் எத்தலந்தோறும் வலிமிகுந்து வெளிப்படலுமாயினர். கொடியராகிய காமன், லோபன், மானன், மதன், மச்சரன் என்போரும் நீண்டகாலமாகத் தாந்தாம் பற்றிநின்ற ஸ்தலங்களையும் விட்டகன்றார். அங்ஙனம் அகன்றவர்கள் மோகராஜனையடைந்து போருக்கொருப்பட்டு யுத்தசந்நத்தராகுமுன்னரே, நீ உபநிடதையை மணந்துகொளல்வேண்டும். ஆதலால், நிரூபகன்முதலாய நம்மவரையெல்லாம் அழைத்துவருமாறு அவரவர் இடங்கள்தோறும் ஒற்றரையனுப்புதல் வேண்டுமென்றான். அதுகேட்ட விவேகராஜனும் நன்றுகூறினையென மகிழ்ந்து அவனைநோக்கி, ஒற்றர்கையில் திருமுகங்கள்கொடுத்து அவரை ஆங்காங்கும் போக்கி நிரூபகாதியரை விரைவில் வரவழைக்கக் கடவையென்றான்.

---

* கிங்கரர் = கைங்கரியஞ்செய்வோர் ஏவலாளர்.

அவ்வாறே அவனும் ஒற்றரையெல்லாம் கூவி, வம்மின் இவ் வோலைகளோடு விரைந்து சென்று நிருபகாதியரை யடைந்து கொணருமின் என்று ஆஞ்ஞாபித்தான். அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு அவ்வொற்றரும் காற்றினும் விரைவுடைய ராய்ச்சென்று நிருபகாதியரையடைந்து திருமுகங்களைக் கொடுத்து வாய்மொழியாகவும் செய்தியுரைத்தார். அத்திருமுகங் கண்ட நிருபகாதியர் மழைமுகங்கண்ட பயிர்போல விளங்கி ஆடுவார் பாடுவாராகி, பேரானந்தப் பெருஞ்சோதியை வாளா பீடித்துத் துன்புறுத்திய பாதகர் தாழவும் நம்மவர் வாழவும் காலங்கிட்டியதேயென்று களித்துப் பரமபதியாகிய தம் பாட் டனரைவாழ்த்தி, நிருபகன் பொறையன் நிச்சயன் சத்தியன் தருமன் சமன் தமன் சத்துவன் அவிரோதன் தவன் விராகன் சந்தோஷன் முதலாய யாவரும் தந்தம் மனைமக்களோடு வழிக் கொண்டு காதல் முன்செல்லத் தாம் பின்சென்று விவேகனைய டைந்து வாழ்த்தி அவன் தாமரைத்தாளை வணங்கினர். விவே கனும் அவர்களை முகமலர்ச்சியோடு நோக்கி ஆசிகூறிச் சூழ உட்காருமாறு பணித்து, நும்மனைமக்களும் நீவிரும் தீதின்றி வாழ்கின்றீராவென்று வினவ, அவர்களுட் டலைமைபெற்றவ னாகியநிருபகன் எழுந்துவணங்கி, அண்ணலே, ஆத்தியந்தமாக யோகினியரது அருளும் உனதுதஞ்சமும் எம்பாலுளவன் றோ. உளவாக, கோட்டமில்வாழ்வு எமக்கரிதாமோ என்றான். அம்மொழியைக்கேட்ட விவேகன் மனமிகமகிழ்ந்து, சிரத்தை யைத் தூதுபோக்கியதுமுதல் வாணிமகட்கொடுத்தற்கிசைந்த மையீறாக யாவும் எடுத்து அவர்க்குக்கூறி, தான்மணமுடித்தற் குஎத்தனப்பட்டிருப்பதும் விளக்கினான். அதுகேட்டயாவரும் கழிபெருமுவகை யுடையராய் விவேகனைநோக்கி, அத்தா! உனதுமணக்கோலத்தை நாங்காண்பதே பெறுதற்கரிய பெ ரும்பயனாகும். அப்பயனைத்தருதற்கு நீ தாழ்ப்பதென்னையெ ன்றார். அதுகேட்ட விவேகன் நன்று கூறினீர்; மணத்திற்கு வேண்டுவனவெல்லாஞ் செய்மின் என்று தானும் கோலஞ் செய்வானாயினான்.

விவேகன் போதகரை வரவழைத்த

சருக்கம் முற்றும்.

## இருபத்திரண்டாவது

# உபநிடதை வேள்விச்சருக்கம்.

தன்னைக் கோலஞ்செய்துகொள்ளத்தொடங்கிய விவேகன், ற்சங்கம் என்னும் பல ஆபரணங்கள்தரித்து, சாதுக்கள் சக ரசமென்னும் சந்தனபரிமளாதிகளணிந்து, விஷ்ணுசரிதை வசரிதை என்பனவற்றின்கேள்வி என்னும் குண்டலங்கள ரிந்து, அழகிய மார்பினிடத்தே வியாச சூத்திரமென்னும் பாற்பூணூல்தரித்து, புலவரது இருதயமென்னும் வண்டுகள் மாநக்கு மியல்பினதாகிய நல்லறிவென்னும் கூம்புதலும் டுதலுமில்லாத மலர்மாலையணிந்து, தீயவைகளை யார் தனக் ச்செய்யினும் அவற்றை மறந்துவிடுதலாகிய பாதுகையைப் தங்களிலேதரித்து, பிறர்செய்யும் அற்பநன்றியையும் மற ாமையாகிய ரத்தினகிரீடம்கவித்து, கொலைப்பகைஞர் தா ம்வந்து இரந்து உயிரைக்கேட்பினும் வன்மைமனத்திலிருத் ச்சாதிக்காது ததீசியைப்போல அன்போடுகொடுத்தல் என் ம் பொற்கங்கணங் கையிலேதரித்து, மோகனுதியரது வலி யநீக்கும் திறலாகிய வலயம் தோளிலேபூட்டி, புவியிலுள் ார்க் கபயப்பிரதான மீவதாகிய மோதிரங்களை விரல்களிலே ணிந்து, நித்தநைமித்தியங் கைவிடாது பருவத்தில் முடித் ல் என்னும் நுதலணிசாத்தி, விவேக மென்னும் வெண்பட் ாடையும் உத்தரியமும்தரித்து, அரன் அரிமேல்வைத்த அன் ம் அதுகாரணமாக அவர் திருவருள்கண்டு பொழியும் ஆனந் க்கண்ணீரும், பிறர் துன்பங்கண்டு சகிக்கலாற்றாது நெஞ்ச நக்குருகிச் சொரியும் கருணைக்கண்ணீருமாகிய முத்துமாலை ய மார்பிலேயணிந்து, பழிபாவங்கட்கஞ்சி நாணும் நாண் ன்னும் அரைஞாணை இடையிலேதரித்து, மாலாகிய இரு ாக்கடிந் துயர்ந்து ஓங்குவதாகிய வியாபகம் என்னும் சந்திர ட்டக்குடை நிழற்கீழிருந்து, விசாரணைமாதும் * வாஞ்சை ாதும் துறவிகளும் சாஸ்திரமென்னும் சாமரம் வீச, வேதமா ய யானையும் சத்தியன் என்னும் பாகனும் முன்னேசெல்ல, க்துவமாகிய தேரிலேறி, சுமதிதேவி பின்னேதொடர்ந்து சல்ல, யோகினிகளது அருட்பார்வை எப்பாலுமாக, நிருபக

* வாஞ்சை = நற்கதிவிருப்பு.

ஞதியர் நாற்பாலுஞ்சூழ, இயமன் நியமன் பிராணுயாமன்முத லாயஎண்மரும் தருமன் சுசிலன் ஆசாரன் அத்துவைதன் முத லிஞரும், கருணை முதிதை உபேட்சை முதலியபெண்களும் வாகஞருடராய்ச்செல்ல எழுந்தருளுவாஞயிஞன். இவ்வாறு விவேகன் இங்கே மணக்கோலம்பூண்டு பயணமாவதைக்கேள் வியுற்ற பிரமனும் வாணியும் தமது புத்திரியாகிய உபநிடதை யை அணிபெறக் கோலஞ்செய்யத்தொடங்கியது கூறுதும்.

தாரகமே திருமுகமாக, நாதம் நீண்ட குழலாக, சுருதிகள் காதுகளாக, விதியே நாசியாக, நீதிகளையாராய்கின்ற ஊகமே கருந்தடங்கண்களாக, சற்குணமும் நிர்க்குணமும் கரங்களாக, ஜீவபரங்கள் முலைகளாக, அறிதற்கரிய வாக்கியஞ் சிற்றிடை யாக, பிரகரணங்கள் மலரடியாக, பஞ்ச கோசங்களும் ஐம்பு லன்களாக, சச்சிதானந்தவுற்பத்தி மனமுஞ் சிவனுமாக, உப க்கிர முபசங்காரம் நடையாக, மீமாஞ்சைமாவாக்கியம் மென் சொல்லுங் கண்டமுமாக, அகரமுதலாகிய வடமொழி ஐம் பத்தோரக்ஷமும் ஏனை அவயவங்களாக வாணிதேவி பெற்றெ டுத்த உபநிடதையைப் பெருமகிழ்ச்சியென்னும் நறிய நீரிலே கீதைமுதலிய தோழியர்கள் ஆட்டிஞர்கள். ஆட்டி, செம் பதமாகிய பட்டாடையுடுத்தி, செந்தொடர்மொழியாகியமாலை சூட்டி, வருணமென்னும் களபம் அணிவித்து, அலங்காரம் என்னும் பணிகள்பூட்டி, பிரமாணமாகிய மையைக் கண்களி லேதீட்டி, விந்துவென்னுந் திலகம் நெற்றியிலிட்டு, நற்சுத்தி யும் பூருவ ஞானமும் திரண்டுருப்பெற்ற உபநிடதைக்கு இத் தகைய பலகோலங்கள் செய்தார். இவ்வாறு அந்தப்புரத்தில் நடைபெற, அங்கே அத்தாணி மண்டபத்திலேயிருந்த பிரம ஞம் விவேகனுக்கு இருப்பிட மமைக்கவேண்டி, மாதவரது உள்ளமாகிய தாமரைமண்டபமும், அதிலே ஆதரமாகிய மெல் லணையாசனமும், கற்கப்படுகின்ற கலையாகிய விதானமும், சொற்றொடராகிய புஷ்பமாலைத் தொங்கலும், கருணையென் னுந் தீபங்களும் அமைப்பித்து விவேகன்வரவை எதிர்நோக்கி யிருக்கும்போது, சிரத்தைமாதுசென்று பிரமனுடைய பாதங் களைவணங்கி, விவேகன் சமீபித்தான் என்றுகூறிஞள். அது கேட்டபிரமன் முகமலர்ந்து தனது முதன்மந்திரியாகிய அன்

பநோக்கி விவேக வேந்தனை எதிர்கொண்டு உபசரித்து அழைத்துவாவென்றுபோக்கினன். அங்ஙனம் அவ்வன்புமே திர்கொண்டுபசரிக்க விவேகனும் தனதுபரிவாரங்களோடு நக ரா யடைந்து அரமனைக்குள்ளே சென்று குதிரையினின்றுமி ங்கிப்போய்ப் பிரமனுடைய பாதங்களைவணங்கினன். அப் பாது முனிகணங்களும் பிறரும் ஆசிகூறிய மங்கல ஒலியும் ாந்தருவ கின்னரரது வாச்சிய ஒலியும் கேட்டோர்செவி செ டுபடுமாறு முழங்கின. அதுநிற்க; வந்தடிபரவிய விவேக னுக்குப் பிரமன் ஆசிகூறி இருக்கை அமைப்பித்தான்.

அப்போது விரத்தி விராகன் தருமன் கருணை சமன் சாந்திமு லியோரும், யமன்நியமன்முதலிய யோகரும், விவேகனுடன் பிறந்த தங்கையரும் தாயரும், ஏனைய யாவரும் திருமண மண் டபச்சிறப்பையும் அதிலமைந்துகிடந்தசித்திரங்களையும் நோக் கி நோக்கி ஆராமையால் பரவசமாகிச் சிந்திப்பாராயினர்: நிரு மலசோதியாகிய தற்பரம் பூரணத்திலே யருவமாகியும், அயன் அரி அரன் என மூவுருவுகொண்டமையும், அயன் நான்குதிரு முகங்களோடு கமலாசனத்திலே இராசத குணத்தோ டெழுந் தருளிப் பல்லுயிர்ச் சராசரங்களாகிய பகுதிகள் யாவற்றையும் படைத்தமையும், சங்கு சக்கரபாணியாய்ச் சத்துவகுணத்தோ டு திருப்பாற்கடலிலே யெழுந்தருளிய அரி அவ்வயன்படைத் த உயிர்களையெல்லாம் காத்து வருகின்றமையும்; அவ்வரியே அடியார்கள் பொருட்டுத் தசாவதார மெடுத்தமையும், பார்த்த னுக்கு இப்பிறப்பின்றன்மை இவையென வோதினமையும், விஸ்வரூபங் கொண்டமையும், தேவர்களுக் கமுதங்கொடுத் தமை முதலிய பல்திறமும்; அப்பால், அரன் சூலம் மான்மழுத் தாங்கித் தாமத குணத்தோடு கைலையில் எழுந்தருளி, தேவர் குறைதவிர்த்து விஷத்தை யுண்டருளினமையும், காலனைக் காய்ந்து மார்க்கண்டனைக் காத்தருளினமையும், காமனைக்கடிந் து சனகாதியர்க் குபதேசித்தருளினமையும், அப்பர் முதலிய மூவருக்கும் திருவாதவூரடிகளுக்கும் அறுபத்துமூவர் பத்தருக் கும் முத்திகொடுத்தருளினமையும் என்று இன்னோரன்ன திரு விளையாடல்களையெல்லாம் நினைந்து நினைந்து இவர்கள் திரு வருளிருந்தபடி யென்னை என்று நெக்குருகிப் பரப்பொருளை

அவாவத்தொடங்கினர். அதற்கிடையில், அகண்டபரிபூரண ராகிய பழம்பொருள் திருவுளமிரங்கி, திருவருளே திருமேனி யாகக்கொண்டு சற்குருவாய் அங்குவந்தார். அங்கிருந்த யா வரும் தீமுன்னர்ப்பட்ட மெழுகுபோலுருகி அவரைவணங்கி ஞர். வணங்கிய பிரமஞதியரையெல்லாம் உட்காருமாறமைத் துத் தாமும் ஓராசனத்திலெழுந்தருளிப் பிரமனைநோக்கி, மண வேள்விக்குவேண்டுந் திரவியங்களோடு உனதுகன்னிகையை யும் இங்கே கொணர்தியென்ருர். அதுகேட்டபிரமன் யாகத் துக்கு வேண்டுவனவெல்லாம் அமைப்பித்துவிட்டு, கீதையை அழைத்து உபநிடதையை இங்குத் தருவாயாக வென்ருன். அம்மொழியைச் சிரசிற்றங்கிச்சென்ற கீதை வாணியையடை ந்து உபநிடதையை நமது ஐயன் அழைத்தான் என்ன, அவ ளும் தன்புத்திரியாகிய உபநிடதையோடு வேதமங்கையரும் சாஸ்திரமாதரும்சூழப் புறம்போந்தாள். முன்சென்ற உபநிட தை பாதங்களைக்கண்டு தாமரைகள்நாணவும், நடையிலே அன் னம் அன்னமெனச் சிலர் அல்ல அல்லவெனவும், வஞ்சிக் கொடியென எழுந்து அசைந்து பூம்பாயல்மேல்நடந்து சபை யையடைந்து மயிலெனநின்று, குருபாதங்களைவணங்கி இயல் பாகிய நாணல் முகங்கவிழ்ந்து தந்தைபக்கம் போய் நின்ருள். அங்கிருந்த முனிவரர் அவள் வடிவத்தைக்கண்டு சித்திர மாயி ஞர். பெண்கள்கண்டு மதுவுண்டு மயங்கிய வண்டுபோலாயி ஞர். என்ருல் இனி விவேகன்செய்தி கூறவும் வேண்டுமோ! யான் எனது என்பதற்று அவன் அலாதில்லையென்னும் அறி வையுறுத்துதற்கு அம்மாதன்றி யில்லையென்பது யார்க்கும் வெளியாகவே, தேசிகஞர் அயனைக்கூவி, நீ, காலைச் சுத்தி செய்துகொண்டு வருகவென்று அயனுக்குக் கட்டளையிட்டு, விவேகனைக்கூவி, நீ இம் மணப்பீடத்தில் உட்காரக் கடவை யென்று அமைத்து, அப்பால் அயன்வந்தவுடன் அவனைநோக் கித் தாரைவார்ப்பாயாகவென்று பணித்து, அவ னங்ஙனஞ் செய்தலும், ஞானமாகிய ஓமாக்கினிமுன்னே வைக்கப்பட்ட மாங்கலிய சூத்திரத்தை விவேகன் கையிற்கொடுத்துக் கன்னி கைகழுத்தில் தரிப்பாயாகவென்று பல்வகை வாத்தியங்கள் முழங்கவும், தேவர்கள் மலர்மாரி சொரியவும் தரிப்பித்துப் பா

க்கிரகணம் செய்வித்தருளினர். அப்பால் எஞ்சியகிரியை
ாயும் முறைப்படிபுரிவித்து அம்மணமக்களைவாழ்த்தி அன்
னுந் தக்ஷிணைபெற்று அங்குநின்றும் அகன்றார்.

அதன்பின்னர் விவேகன் உபநிடதையோடு பிரமன் வாணி
தங்களில் வீழ்ந்துவணங்கி அவர் வாழ்த்துப்பெற்று அப்
ல் தாயாகிய நிவிர்த்தியைவணங்கினன். அவள் மகனையும்
ந்கியையும் மார்போடணைத்து ஆசிகூறி, இனி நம்பகைவரா
மோகனுதியரைவென்று வாழக்கடவீர் என்று தான்புரியம்
ியைகளையும் புரிந்தாள். அப்பால் இருவரும் தம்மிடத்
ண்டாகிய காதலுக்கு எல்லைகண்டு ஏகரூபமாயினர்.

இவ்வாறு இருவரும் ஞானபோகந் துய்த்துவருநாளிலே,
வேகனுக்குத் தன் இராச்சியநினைவுண்டாகலும், அவன் பிர
னயும் வாணியையுமடுத்துத் தனது தேவியோடும் வணங்கி
ன்று தன் வாசஸ்தலஞ்செல்ல விடைதருதல்வேண்டுமென்
கேட்டான். அதுகேட்ட முனிகணங்களும் பிரமனும் வா
ியும் முகமலர்ந்து அன்பென்னும் சீதனம் அளப்பிலகொ
ந்து விடையருளினர். அப்போது வாணி தனதுபுத்திரி
ப மார்புறத்தழுவி, கீதை என்பாளை அவளுக்குப் பாங்கியா
கொடுத்து அவளுடன்போக்கினள். மூவரும் புறம்போ
, ஞானமாகிய மதயானைகளும் சேனைகளும் மங்கலவார்த்தி
ங்களும் புடைசூழ, பிரமனாதியருடைய மனமும் பின்சென்
தொடர, தத்துவமாகிய தேரிலேறி அதிசம்பிரமமாக வீற்றி
ந்து கண்டோரெல்லாங் கழிபெருமகிழ்ச்சிகொள்ளப் பூவுல
டைந்து சுமதியொருபாலும் உபநிடதை மற்றொருபாலுமாக
ருகவேளென விளங்குவானாயினன்.

உபநிடதை வேள்விச்சருக்கம் முற்றும்.

---

## இருபத்துமூன்றாவது
## சக்கரதீர்த்தச்சருக்கம்.

---

சிலநாள்கழிதலும், நியாயன் என்பவன் வந்து விவேகனை
ணங்கி, ஐயனே, உனதுவலியானது சிற்றிளம்பிறை நாள்

தோறும் வளர்ந்துவருதல்போல வளருகின்றது. மோகனவ யோ அபரபக்கத்துச் சந்திரனுயிற்று. மோகனுதியாகிய ருளிலழுந்தித் துன்புறும் மனுகுலமாகிய சகோரபக்ஷிகளுக் உனது ஞானமாகிய தண்ணிலவைக்கொடுத்து அவற்றின் ப நோயைத் தேறுதல்செய்யாது, அவை வாளாவருந்த நீசுகித் ருத்தல் நன்றாமோ! அன்றியும் நீ மனுகுலம் தளர்வதுகண்டு அவர்க்கு நின் உபநிடதையாகிய கொம்பிற் பழுத்திருக்கு கனிகளைப் படைக்கும் அன்பு குன்றியிருத்தல் உனக் கழக குமோ!

"பருவநோக்கிவான் மழைபொழிந்திடுவதும் பகலோன்
இருள்துரப்பதுந் தண்புனல்நதிகள்மற் றெவையும்
பெருகுகிற்பது மொப்பிலாநற்குணப் பெரியோர்
அருள்சுரப்பதும் தமக்கொருபொருள்குறித் தன்றே"

ஆதலால் இனி நீ சிறிதுந்தாழ்க்காது இக்கணத்திற்றனே நம்மவரோடுங் காசியையடைந்து மோகனுதியருடைய வலி யை வேரோடுகளைந்து வெற்றிமாலைசூடுதல் ஆவசியகமாயிற் று. இதுவே எற்றபருவம் என்று கூறினன்.

அப்போது நியமன் என்பவன் எழுந்து விவேகனை வணங்கி, விறல்வேந்தே எனக் கூவி, நியாயன் உரைத்த வாசகங்களைத் தழுவித் தானுஞ் சிலசொல்வானுயினன். இதுகாறும் நீ எண் ணியவைகள் இடையூறின்றி முடிந்தமையால், வல்லவராகிய உனது படைவீரர் பின்னர்வரும்போரிலும் பகைவரைக் கடை போகக்கடத்தல் நிச்சயம். இனி, கல்லும் முள்ளும் பயிலும் இக்காட்டைவிட்டு நம்படைவீரர் யாவரோடும் புறம்போந்து நம்பகைவீரர் வசிக்கும் பதியை நெருங்காது ஒரு புண்ணியஸ் தலத்தை அடைந்து, ஆதியிற் சுயோதனனாலே காட்டுக்கோ ட்டப்பட்டவராகிய பாண்டவர் அவ்வனவாசம் விட்டு நீங்கி ஸ்ரீகிஷ்ணனைத்தூதுபோக்கித் தமதுரிமையைக்கேட்க, சுயோ தனன் மறுத்தபோது போருக்கெழுந்தமைபோல, நாமும் ஒரு தூதுவனை மோகன்பால்விடுத்து, நம்முரிமையாகிய பூமியை நமக்குக் கொடுவென்றுகேட்டு, அவன் மறுப்பானேல், யுத்தத்

ற்கு ஒருப்பட்டோமென்பதை யுணர்த்துவோம். அதுவே
றையாமென்ருன்.

அதுகேட்ட விவேகன் இதுவே தக்கசூழ்ச்சி என்று அவ
னையைமெச்சி, நியாயனைநோக்கி, நம்படையெலாம்சென்று
தற்கேற்றதொரு புண்ணியஸ்தலம் சொல்வாயென்ன,
ாயனும் அவனைவணங்கி, ஐயனே, கங்காநதிச்சார்புடைய
ிய கவுடதேயத்தின்கணுள்ள ராடாபுரத்திலே சக்கரதீர்த்த
ன்பதொன்றுளது; அதுபோலும் புனிதமுடைய தீர்த்தம்
தியலோகத்திலுமில்லை. அதன்சார்பிலே அளவிடலாகாப்
ருஞ்சோலையொன்றுளது. அங்கே நம்படைவீரரோடு நா
ீ செவ்வேவாசஞ் செய்யலாமென்ருன். விவேகனும் நன்
னத் தனது சேனைவீரரோடு, நாட்டிகணுள்ளநோயைத் தீர்
ற்குக் காட்டின்கணுள்ள மூலிகை கால்பெற்றெழுந்தாற்
ால, காட்டைவிட்டுநீங்கி நாட்டின்வழியாகச்செல்வானுயி
ன். அச்சமயத்திலே அங்கே மோகனுதியர்க்கும் அவர்பத்
னியர்க்கும் இடந்துடிப்பதாயிற்று. அது நிற்க; அங்ஙனம்
ாவானுகிய விவேகன் நாடுகளையெல்லாந்தாண்டி ராடாபுர
தையடுத்துச் சக்கரதீர்த்தக்கரையை அடைந்து அங்கே தன
ம் படைகளுக்கும் பாசறைகளமைப்பித்து வைகுவானுயி
ன். அடுத்தநாள் நியாயனைநோக்கி, இதுதகும், இதுதகாது
னு முணர்வும் அஞ்சாமையுமுடையவீரன் நீயன்றி வேறி
ன; ஆதலின் மோகன்பாற் றூதுபோதற்குரியை நீயேஆக,
ன்றே மோகன்பாற்சென்று நமது கருத்தை யவனுக்கு அஞ்
துணர்த்தி, அதற்கவன் பொருந்துவனேல், சிவஸ்தலம்
ஷ்ணுஸ்தலம் புண்ணியநதி புண்ணியவனமுதலியவற்றை
ல்லாம் நீங்கி, துருக்கர் பப்பரர் எயினர் சோனகர் முதலிய
ினத்தர் வசிக்கின்ற நாடுகளையடைந்து அங்கே தனதரசி
ல நடாத்துமாறு சொல்வாயாக, அதற்குடன்படானேல்
ள யுத்தபேரிகை முழங்குமென்றுணர்த்தி மீள்வாயென்
ன். அவ்வாறே நியாயனும் அப்பணியைச் சிரமேற்றாங்கி,
ாகன்வசிக்கின்ற காசியைநோக்கி நடந்தான்.

சக்கரதீர்த்தச்சருக்கம் முற்றும்.

## இருபத்துநான்காவது

# காமஞ்திியர் சருக்கம்.

முன்னே காசியினின்றும் மோகனிடம் விடைபெற்றுப் போந்த தூதர் ஆங்காங்குஞ்சென்று காமஞ்திியர்க்கு திருபங் களைக்கொடுக்க, அவரவரும் அவற்றைச் சிரத்திற்சூட்டி எடுத்துவாசித்து நிமிர்ந்தெழுந்து, இருள்பரந்ததோ, விடமெலாந் திரண்டெழுந்தவோ, கொடியவினைகள் யாவும் ஒருபுடையுடர்ந்தவோ, நோயெல்லாம் உருப்பெற்றெழுந்துற்றவோ என்று தவத்திகளெல்லோரும் மருண்டஞ்சுமாறு தத்தம்படையொடும்போய்க் காசியையடைந்தார். பெரும்பாரத்தால் முடியயர்ந்தும் முதுகுளுக்கியும் முறையேவருந்திய * ஆதிசேடனும் பூமிதேவியும் காமஞ்திியர் படை வரவைக் கண்டமாத்திரத்தில், கொடியபாவங்கள் யாவற்றையும் சுவடறத்தொலைக்குமியல்பினதாகிய இக்காசியில் இக்கொடியர்வந்தமையால் இனி மீளாது மாள்வர் என்பதில் ஐயமில்லை; நந்துயரமும் நீங்கிடும் என்று களித்தார். அதுநிற்க; மோகனிடம் தூதர்சென்று காமஞ்திியரும் மனைமக்களும்படைகளும் வந்தனரென்றுகூற, மோகன் அவரை இங்கு வரவிடுமின் என்றான். அவ்வாறே காமஞ்திியரும் தந்தம் மனைமக்களோடு சபையிற்புக்கு அவன்றாளை வணங்கினர். அவரையெல்லாம் மோகன் முகமலர்ந்தாசிகூறி அவரவர்க்குமேற்ப வாசனமிடுவித்து இருத்தி, நீவிர் யாவீரும் செவ்வே வாழ்கின்றீராவென்றான். அதற்குக் காமஞ்திியர் எம்மனக்கோயிலில் எழுந்திடையறாது விளங்குகின்ற நீ எம்மைவிட்டகலினன்றே எமது வாழ்வுக்குக் குறைவருவதென்றார். நன்றென்றரசனும் மகிழ்ச்சிகாட்ட, காமன் எழுந்து அரசனைவணங்கி, ஐயனே, உனது அவித்தியாபுரத்தை விட்டு இங்கு வந்து வசிப்பதும் எம்மையெல்லாம் வரவழைத்ததும் யாதுபற்றியோ என்றான்.

அதுகேட்டங்கிருந்த அகங்காரன் நகைத்து, நன்றிருந்தது உன்வாசகம்! என்று எழுந்து மன்னவன்முன்னே கூசாமல்

* ஆதிசேடன் = பூமியை அந்தரத்தில் நிலைபெறுத்தும் மகாமூலவாயு. அது வருணனையால் ஆதிசேடன் எனப்படுவது. எது விரிக்கிற் பெருகும்.

ன்று நெஞ்சுகொதித்து அங்கிருந்தாரை நோக்கிவிளித்து, நம
பகைவராகிய விவேகன்படைவீரர் தங்கள் மெய்யுருவை
மறைத்து வேற்றுருத்தாங்கி உங்கள் நகரங்கள் தோறும்
ந்து புக்கிருந்ததுணரீர்போலும். ஆங்கவர் முயற்சியால்உங்
ர் நாட்டில் எக்காலுமில்லா தொழிந்துபோய்க்கிடந்த தவம்
னம் ஓமம் செபம் முதலியன மீளவும் தலையெடுத்த தறியீர்
பாலும். அச்செய்தியை யொற்றராலுணர்ந்த நமதரசன்
மது நகர் விட்டிங்குவந்தது குறியீர்போலும். வந்த பின்
ர்ச் சூழ்ச்சிசெய்து, மறைந்து பகைத்தொழில் புரியும் பகை
ரைப் பற்றியடக்குமாறு கலியனைப் போக்கியது புலங்கொ
ளலீர்போலும். அவ்வாறு சென்ற கலியன் யோகினிய
லடைந்த துன்பங்களை நுஞ்செவியிலிட்டார் யாருமிலர்
பாலும். அப்பால் அப்பகைவர் வெளிப்பட்டு நிற்பதுங்கா
ரீர்போலும். அதுகண்ட நமதரசன் ஏவலிற்சென்ற சாருவா
ன் நாடெங்குஞ்சென்றுபெண்கள் போகமேமுத்தியா மன்றி
ற்றில்லை யென்று போதித்து வந்ததுங் கேட்டிலீர்போலும்.
பகிடதையை விவேகனுக்கு மணம்பொருத்துமாறு செ
றசிரத்தையைப் பிடித்துவரும்பொருட்டுப் புத்தன் கபாலி
ன்பாரோடு மிச்சாதிட்டி சென்றதும் வினவிலீர் போலும்.
ரணன் தருமனைப்பற்றி வருமாறுபோனதும் அறியீர்போ
ம். நன்றிருந்தது நுஞ்செய்தி! இவையெல்லாம் நிகழ்வது
ராது மங்கையரோடு மலர்ச்சயனத்திலே துயில் கூர்ந்தீர்
பாலும். நன்று நன்று! நுங்காவல் மிகச்சிறந்தது! என்று
றினன்.

இங்ஙனம் அகங்காரன் கூறியவற்றைக் கேட்ட
மன் முடிதுளக்கி நகையாடி அச்சபையில் எழுந்து, ஓ!
ந்துணைவரே! நம் பகைவர் உருமாறி நமது நாட்டிற் பிர
வசித்தனராம்; உபதேசித்தனராம்; உபதேசமொழியைக்
கைக்கொண்டு சிலர்நடக்கின்றனராம்; அஃதுணர்ந்தே அரச
ர் இங்குவந்தனராம். யான் சித்தசனுகவும் எனக்கறிதற்

கரியனவுமுளவாம். இவற்றைக் கலியனூர் கண்டறிந்தனராம்
யோகினியாது வலிமையைக் கண்டனராம். அவருக் கஞ்சி
மைத்துனனூர் அரசனை யடுத்தனராம். பெண்கள் சுகத்தை
அநேகர் துறந்துவிட்டனராம். ஆ! ஆ! பேராச்சரியமே
வெந்த பருப்பு முளைத்துக் காய்த்த கதைபோலிருகின்றதே
நம்மோடு எதிர்க்கும் ஆற்றலின்றிப்பெண்களைச் சரணடைந்
ஓடிமறைந்து திரிவாரோடு சமர் செய்யப்புகுவார் யாவர்! பு
னும் அஃதாண்மையாமா! உபநிடதைபாற் றூதர்கச் சென்
சிரத்தையைப்பற்றிவருமாறு மிச்சாதிட்டியைப் பேர்க்கியதே
டமையாது, புத்தனையுஞ் சமணனையும் உடன்போக்கியது அ
பது கலசத்தை எழுபது குலாலர் ஒருவர்க் கொன்றாகக் ச
ந்துத் தூக்கபுக்கது போலாயிற்றே. பகைவர் வீறிவந்து ஓங்
கினும் அவரை யடக்குமாறுஎன்போல்வாரொருவனை ய
த்து, இது செய்கவென்று ஏவித் தனதுநகரிலிருந்துஅரசா
வதை விட்டு இங்குவந்தது அரசனுக் கழகாகுமா! இவ்வக
காரனூர் தமதுநாட்டைவிட்டு இங்குவந்து அரசனுக்குற
பாராட்டி மற்றெவரிலும் தாமேவிவேகியென மதித்து, இ
தரும் இருதகா தென்பதின்றி இத்துணைச் சிறந்த புத்திகூ
யது வியக்கற்பாலதே! இதைவிட இனிவேண்டப்படுவதுயா
என்று சொல்லி, எதிர் நகைத்துச் சினந்தான். அதுகண்
அரசன், சிங்கேறுபோலும் உனதுவலி வெளிப்படின் எதி
நிற்றற் குரியர் யாவர். அகங்காரன் கூறியது அவன் இய
பேயாகும்; ஆதலின் அதனைப்பொருட் படுத்தலாகா
என்று காமனைத் தணிவித்துத் தானுமிவை சில செ
லானுயினுன். ஏ! காமா! பெண்டிரைத்துணையாகக்கொண்
சமர்கட்க்கமுயலுவாரோடு யாவர் போர்புரிவாரொன்றனையே
பண்டைக் காலத்திலே மயிடனையும் தாருகனையும் கொன்
வெற்றியடைந்தவர் பெண்டிரன்றோ. சிவபக்தி அரிபக்
யென்னும் யோகினியரது கிருபையுண்டேல், புஜவலியில்ல
ரேனும் பகைஞர் போரிலே சிங்கம்போலோங்கிடாரா! ஆ
லால் நம்பகைவர் அப்பக்திமாதாது கிருபையை ஒருங்

பற்றிடா முன்னர் யாமெல்லேமும் திரண்டு சென்று அவரை வல்லேமாயின் பின்னர் முடிப்பது வன்மையாமன்றே. துபற்றியும், இக்காசிநகர் யாவர்க்கும் நற்பதங்கொடுப்ப தான்றுதலாலுமே நான் பகைவரது செல்கை இங்குப்பெற ந்தா வண்ணம் முன்னரே வந்து நம்மனைவீரையும் இங்கு ருமாறு பணித்ததாம். சிரத்தையைப் பிடிக்கச்சென்ற மிச் திட்டி காபாலி புத்தன் சமணன் என்பவர்கள் இன்னும் ராது தாழ்க்கின்ற காரணமும் யாதோ அறியேம். தருமனைப் ற்றிவரப் போனவன் செய்தியுமுணரோம், டம்பன் குமாரன் சூத்தியன், சிரத்தை சமணுதியர்கையிலகப்பட்டாள் என்று சான்னதை நம்புதல் கூடுமா? அவனுரையை யாவர் நம்புவர். ன்னர் நங்கலியனை வாட்டிய யோகினியர்கையில் அகப் ட்டாரோ! யாதுற்றதோ அறியேம் என்று கூறிச் சிந்தாகு ங் கொள்வானுயினுன்.

இச்சமயத்தில் அங்கே, காபாலி தனது தேவதையாகிய பிரவி மீண்டுவரத் தாழ்த்ததுகண்டு சமணனை நோக்கி, சோ —த்தி லாராய்ந்து என்தாய்க் குற்றதைக் கூறுகவென்று வே ட, அவனும் சோதிடங்கொண்டு ஆராய்ந்து நிகழ்ந்ததைச் சான்னுன். அது கேட்ட காபாலி உள்ளம் பதறி அறிவு ன்றி வாடிவீழ்ந்து மீண்டெழுந்து, என்தெய்வமானவள் இவ் றுயிர் மாண்டாளென்னில், அவ்வியோகினியரது அன்பு ண்ட பகைவரை யாவரோ வெல்வார் என்று அதிசயித்து, னி இங்கிருத்தலாகாதென்று எழுந்து யாவரோடுஞ் செ று காசியை யடைந்தான். அங்கே சூரியன் முற்பட்ட சந் ரன்போல முகப்பொலி விழந்து நின்ற காபாலி, மிச்சாதி டி, சமணன், புத்தன் என்பவரைக்கண்ட கிங்கரர், அரசனிடத் தாடி அவர் வரவை யுணர்த்த, அரசன் அநுமதிகொண்டு வரும் அவன் சமுகஞ்சார்ந்து, அவன் பாதங்களை வணங்கி ன்று நிகழ்ந்ததும் தாமடைந்த துயருஞ்சொன்னுர். அவற் றைக் கேட்டமோகன் உளம்பதறிக் கபாலியை நோக்கி, வயிர

வியைப் போக்கிய தன்மைதானு வென்ன; அவனும்,ஐயனே,
அவள் போனதும், அனுமனுல் இலங்கை மாசாளிமடிந்த தொ
த்து மடிந்ததும் உண்மையே என்றான். அதுகேட்ட மோக
னும் மற்றுள்ளோரும் ஜீவனுதாரமாயிருந்த கைப்பொரு
ளைப் பறிகொடுத்தவர் போலத் துயரமீதூர்ந்து கலங்கினர்
அப்போது சேனுபதிகளுக்கெல்லாம் முதன்மை பெற்றவனு
கிய காமன் எழுந்து மோகன்முகத்தை நோக்கி, ஐயனே,
அற்பகாரியத்துக்காக நீ வருந்துதல் அழகன்று. வாயுவின
வலியினாலே ஆதிநாளில் மகாமேரு தன் ஆயிர முடியில் ஒன்
றை யிழந்ததுண்டேனும், தன்வலியை யிழந்து அவ்வாயு
விற்கு வணங்கியதுண்டோ? அதுபோல நமது காபாலியால்
வப்பட்ட வயிரவிமாண்டமையால் நமது வலியெல்லாம் ஒரு
கேபோய் விட்டதோ! அடியேன் வலிமை ஒருபுறமிருக்க
அண்ட ரண்டத்தையு மொருங்கே வெல்லவல்ல கலகனு
கோபனுமிருக்க; அகங்காரனுடன் உலோபனுமுள்ளானாக
மதன் மானன் சங்கற்பனும் மூவருமிருக்க; பின்னரும் மச்
ரன் முதலாயினரு மிருக்க; இன்னும் உன்பணியைச் சிரமே
சூடி நச்சரவம் பாய்ந்து செல்வதுபோற் சென்று பிரமாதி
ரையும் பிடித்துப் பித்தராக்கி மீளவல்ல சதுரரும் நின்னை
சூழ்ந்து நிற்க, ஐயனே உன்னை வெல்லவல்லவர் உலகில்யா
ரோ! இருளெல்லாம் ஒருகடலாய்த் திரண்டனைய நமது சே
னையில் ஒருவனே திரிலோகங்களையும் வெல்லப்போதானே
அது நிற்க; இராஜாதிராஜனே! எனக்கேனும் விடைதருவ
யாக; சிரத்தைபோய்ச் சேராமுன்னரோ யான் சென்று உ
நிடதையை மணம்பொருந்தாமல் விவேகனைத்தடுத்து அவ
மீது அரிசிவபக்தியாது கிருபையையும் விலக்கி அவனைச் சி
றின்பவாழ்விற் புகுத்தி ஒரு நொடியின் மீள்வேன் என்றான்

அது கேட்டமோகன், நன்றென்று கூறி, சிறிது படை
துணையோடு செல்வாயாகவென்று அவனுடன் போக்குமா
படைத் தலைவர்சிலரை யழைக்கவுன்னினான். உன்னியபோ
அவன் சபையின்கண்ணே ஒரொற்றன் வந்துவெளிப்பட்

யனே, விவேகராஜன் உபநிடதையை மணமுடித்துக்கொ
டு பெருஞ்சேனையோடு ராடாபுரத்தை வந்தடுத்தான் என்
கூறினான். அவ்வுரைகேட்ட மோகனுதியரெல்லாம் இடி
மலிடியாக விடையறாது இடிசேட்ட நாகருலம் போலாயி
ர். அவருள்ளும் மிகவஞ்சி மனங்குன்றிய மோகன், அங்கி
ந்தவரை யெல்லாநோக்கி, ஒரொருவராக எனக்குவிடை
க் கடைவீரென்று ஆஞ்ஞாபித்து;விவேகனுதியர்பா லருள்
ிந்து நிற்கின்ற அரிசிவபக்தியனை விலக்கினேமல்லேம்; சிர
தை தூதுபோனபோதிலேனும் அவளைச்சென்று பற்றிவந்
தூமல்லேம்; அப்பால் விவேகனை மணம்புரிய வொட்டா
தனும் தடுத்தேமல்லேம்;இவற்றையெல்லாம் இதுகாறும்
காக்காதிருந்தயாம் இனிமுயன்றுவதென்னை ! இனிமுயன்
றமாயினும் தடங்கரையை யுடைத்துப் பரந்துபாய்கின்ற
ிக்குக் கரையிடுவது போலாமன்றி மற்றென்னும் ! விவேக
தியர் பண்ணியமுயற்சியெல்லாம் முடிவுறப்பெருகின.
து முயற்சியோ பரந்தவெள்ளம் வடிவது போலாயிற்றே
ன்றிரங்கி யுரைத்தான். அப்போது காமன் எழுந்து அர
னவணங்கி, அரசரேறே ! யாதுக்குத்தளருகின்றீர். விவே
் உபநிடதையை மணம்புரிந்து கொண்டமையால் பேரா
மையனாய் விட்டானோ ! என் பூங்கணைக்கு அவன் எதிர்
்கவும் வல்லானோ ! மழைக்குக் குடைபிடித்துப் பிழைத்த
் இடிக்கும் குடைபிடித்துப் பிழைத்தல் கூடுமோ ! விவே
் புரிந்தமணம் என்மோகனப் படைக்கு என்செய்யுமோ !
ு பசுமையுடையதாயினும் அதனிடத்துள்ள வற்றியதளிரில்
க்கினி, பற்றுமாயின் அக்காட்டை யெல்லாம் அதுதகிக்கா
ாழியுமோ வென்று கூறினான். அம்மொழிகளைக்கேட்ட
ாகன் நன்று கூறினை ! நமக்கெதிர் நிற்கவாற்றாது ஓடிக்
டைந்த விவேகனுதியர் இன்று நம்மூர்ப்புறம் புக்கன
ன்றால் இனி நாம் பேசக் கிடப்பதென்னை ! இன்னும்
க்கொரு வீரமும், அதை நாம் கேட்பதுமுளவோ! ஆயினும்
னிவாளாவிருத்தல் தகாது ; தக்கவாறு செய்வதே கட

னென்று கூறி, இடம்பனையழைத்து, நீ உன் துணைவரோடு இவ் வூரெங்குஞ்சென்று விடமெனப் பரந்து விவேகனுதியருடை யபடையைச் சூழ்ந்து அவர்கள் புறஞ் செல்லாவண்ணம் காக் கக்கட்வையென்று அவனுக்குஆஞ்ஞாபித்தான். அவன் போய பின்னை அநாசாரனை யழைத்துக் கங்காதீரத்திற்சென்றுவிவே கனுதியர் அத்துறைகளிலே படராவண்ணம் அவற்றைக்காத் திரு போ என்முன். அப்பால் அவமானனைக்கூவி, நீ காசி காட்டுக்கு அப்பாற்சென்று விவேகனுதியடிதுணைவர் காட்டைவிட்டு வெளியே போதராவண்ணம் அவர் வரத்தக்க வழிகளைக் காவல் செய்திடுகவென்முன்.

காமனுதியர் சருக்கம் முற்றும்.

---

## 25—நியாயன்றூதுசருக்கம்.

இவ்வாறு மோகன் இன்னுஞ் சிலரை ஆங்காங்குஞ் சென்று வழிகளைக்காக்குமாறு ஏவிப் போக்கியபின்னர், மேற் செய்யத்தக்கது யாதென்று மந்திரிகளோடு சூழ்ச்சி செய்வா னுயினன். அப்போது முன்னே விவேகனுதியரால் விடுக்கப் பட்டு வழிக்கொண்ட தூதனுகிய நியாய னென்பவன் மோகன் நகரையடையக்கண்ட கடைகாவலர் மோகனிடஞ் சென்று, நியாயன் என்பானொருவன், முதிர்ந்த கோபத்தோடு நாகத் தின்மேற் பாய்கின்றகருடன் போலப் பகை யஞ்சாதுஇன்று நம்கடைவாயிலில் வந்தனனென்று வணங்கிக்கூறினர். அது கேட்ட மோகன் நன்றெனத் தலை துளக்கிஅவனைப்போயழை த்து வம்மினென்முன்.

அவ்வாறே வாயிலாளருங் கடிதிற் சென்று நியாயனுக் குரைக்க, அவனும்அஞ்சாது மோகன் முன்னர்ச்சென்று அவ னைக் கைதொழ அவனுமெதிர் தொழுது ஏவலரால் ஆசன மொன்றிடுவித்து எதிரே யிருத்தினன். இருத்தி நீ இங்கே

க்ககாரணம் யாதென்று வினவ, நியாயன் அவனைநோக்கி
யனே,உனக்கஞ்சிக்காட்டகத்தில் வசித்த உன்தம்பியர்யாவ
ம் நீதின்றிஇந்நகர்ப்புறத்தையடைந்தனர். உன்தம்பியாகிய
'வேகன் சொன்னவற்றை உனக்குச்சொல்லவந்த தூதுவன்
ரன் என்றான். அதுகேட்ட மோகன் அவற்றைச்சொல்லக்
_வாவென்ன, அவனும், ஐயா! கேள் என்றுசொல்லத்
தாடங்கினான். மானதன் இவ்வுலகையெல்லாம் உனக்குக்
காடுத்துக் குற்றமற்ற வெம்மூதாதையைச் சிறையிட்டகாலத்
ல் சிறிதுமிரக்க மின்றி நமது வேந்தனைக்காட்டுக் கோட்டி
லுனையங்கேமெய்சோர்ந்தலையுமாறு புரிந்தனை. அவனை அங்
னம் புரிந்ததுமன்றி அவன் தாயாகிய நிவிர்த்தியையும்வனை
கிளைஞரோடு குலையும்படிதாக்கி அவர்க்குஎண்ணில் கோடி
'ழைகளைச்செய்தும் இன்னுஞ்செய்யாநிற்கின்ற உன்போ
ம் இரக்கமில்லார்யாருளர். அது நிற்க உன்னால்எண்ணில்லா
துன்பங்களை விவேகனடைந்தானேனும் பக்தி மாதாது
ருணையால் உபநிடதையைமணம்புரிந்து தன்துணைவரோடும்
வல்லுதற்கரியபடை வீரரோடு மித்தினம் இந்நகர்ப்புறத்
'வந்துற்றான். அங்ஙனம்வந்தவிவேகன்,அறிஞராம் புகழப்ப
கின்ற அரும்பெருந்தரும சீலனாதலின் இன்னும் உன் மீது
ருணைகூர்ந்தவனாய் நீசெய்த பிழைகளுக்கு மாறு செய்யக்கரு
ரது என்னை உன்பால் வரவிடுத்தான் என்றறியக்கடவை.
)வ்வுலகைஎல்லா மிதுகாறும் உனதென்று கட்டியரசுபுரிந்த
'சல்வத்தை இனி நீ விடுத்து நீங்கி, உயிருய்யவேண்டி உன்
ணைவரோடும் விவேகனது அருட்பணியைச்சிரத்திற் சூடி
காணகவேடரும், கள்வரும், கடற்கரைவலையரும், சோனக
ம், துருக்கரும், பப்பரரும், சாதியீனரும் என்று இன்னோர்
சிக்கின்ற விடங்களைநாடிச் சென்று அங்கே உறையக்க
வை.

தம்பியர்க்குத் தசரதராமனும் வீடுமனும் தமக்குரிய வா
ச மனம்பொருந்திக் கொடுத்தது அறிவாயன்றோ. ஆதலின்
யும் உன் தம்பியினதரசுரிமையை முதல்முறையாரும் அங்ங
ஞ்செய்வையாயின் என்றும் உன்னை அவனுக்குமூத்தோனெ

ன்று உலகோர் புகழ உன்பரிவாரத்தோடு நீயும் உன்மனை
மக்களும் இவ்வுலகில் வாழ்ந்திருக்கலாகும். அங்ஙனஞ் செய்
யாது மறுத்திடுவாயாகில், அங்கதன் இராமதூதனாய்ச்சென்று
கேட்க மறுத்த இராவணனைப்போலவும், கிருஷ்ணன் பாண்
டவர் தூதனாய்ச்சென்று கூற உடன்படாத துரியோதனன்
போலவும் கிளையோடு அழிவது சரதமென்றான். அதுகேட்ட
மோகன் நகைத்துத் தலைதுளக்கி, சாலவும்நன்றிது நன்றிது
வென்றுகூறி, நியாயனை நோக்கி, எனது தந்தை எனக்கே முடி
சூட்டி விவேகனைக்காட்டுக்கோட்டினான் என்று கூறுகின்ற
நீயே என்னை நோக்கி உன் தம்பிக்குஅரசு கொடுவென்றுகேட்
பையாகில் உன்னையா நியாயனென்று கூறுவது! நன்று கூறி
னாய்! எனதுதந்தை விவேகனாதியரை ஒரு கணமேனும்தரிக்க
இடங்கொடாது ஓட்டிவிடக்கடவாயென்று எனக்குரைத்த
சொல்லைக்கேட்டும் சிறிதுகருணைவைத்து அவரைக்காட்டுக்கு
ஏகவிடுத்த என்னிடத்து மீண்டுவந்து தன்னுரிமைகேட்கத்
தூது விடுத்தவிவேகனோ நீயோ உம்மில்யாவர் துணிந்தவர்! கலி
யன் முதலாயினோர்க்குத்தப்பினர் என்றும் உபநிடதையின்
மணம் பெற்றாரென்றும் அரசுரிமையைத்தம்பியர்க் களிப்பா
ரென்றும்வலிமையும்வழக்கும் பேசவல்லவர் உன்னை அன்றி
வேறு யாவர்! நன்று! என்தந்தை அவ்விவேகனையும் அவன்
தாயையும் புத்திரனும் பத்தினியும் அன்றென்றுதுறந்
தானென்றால் பிதுர்த்துரோகியாகிய அவ்விவேகன் எவ்வாறோ
எனக்குத்தம்பியாவான்! உன்னாற் சுட்டப்பட்ட இராமனும்
வீமனும் அன்றுதமதரசுரிமையைத்தம்பியர்க்குக்கொடுத்தது
தந்தையர் பொருட்டோ அன்றித் தம்பியர்க்கிரங்கியோ இதனை
ச்சிந்தித்தாயில்லை. இந்தநன்னாடெல்லாந்தனக்காகக் கட்டிக்
கொள்வதற்கும் ஈனர்வசிக்கின்ற நாட்டை எனக்குக் கொடுத்
தற்கும் விவேகன்பண்ணிய சூழ்ச்சிநன்றாயிருக்கின்றது! இனை
யானாதலின் அவன்பிழையை இன்னும் பொறுத்து மீண்டும்
அவனுக்குக்காட்டைக் கொடுப்பதேயன்றி, இந்நன்னீர்க்கழ
ணிகாடுகளை நான் கனவிலும் அவனுக்குக்கொடுப்பதில்லை. பக்

ாதாது அருள்தனக்குண்டென்றும் உபகிடதையை மணம்
ிக்துகொண்டேனென்றும் தருக்கி இந்நாட்டிடைவந்
வன்சொல்லிய வன்மையெல்லாம் யான்சினந்து எழும்பு
டத்து வேரோடழியாவா என்றான். அதுகேட்டுப் பக்கத்
ருந்த குதர்க்கன் எழுந்து மோகனைப்பார்த்து,பிரம்மாதி தே
ரும் உன்வலிமையால் தவநிலையழிந்தனரென்றால் உனக்கு
கிர்நிற்கவல்லான் சிறியனாகிய விவேகனோவென்று கூறிந
கத்தான். பின்னரும் அவன் நியாயனை நோக்கி நீதிகேள்வ,
னையாதென்று தன் கலைமானுக்குக் கொம்புமுளைத்தோங்
ியது கண்டு, புலி முன்னே சென்று, இவ்வனத்தையெல்லாம்
ந்து கலைக்குக்கொடுத்து நீ காட்டை விட்டகலக்கடவாயெ
று கூறியதொப்ப,நீயுமிங்குவந்து சிலபுன்மொழிகளைப் புக
ுறாய் என்று கடுத்துக்கூறினான். அவன் அங்ஙனங்கூறி
டிக்க உலோபனெழுந்து மோகவேந்தன் முகத்தைப்பார்த்து,
,லோகத்தில் ஒரெட்கிடை இடந்தானும் விவேகனுகிய
ுக்கு கொடுக்க நினைப்பாயாயின், உன் தந்தையாகிய மானத
ுக்குப்பகையாகி, அவனால் நீ நீக்கப்படுதற்கு ஐயமில்லை;சற்றி
லஅவனும் புத்திர சோகத்தால் மாள்வதற்கும்ஐயமில்லை யெ
று கூறினான். இப்படிப்பலரும் பலவாறு கூறி நிற்குஞ்சம
த்தில் அக்கிரமன் அதர்மனோடு மோகன் முன்னேவந்து
ணங்கி நின்று, ஐயனே, நாகக்கூட்டத்திலே அஞ்சாதோர்
லி புகுந்தாலொப்ப இங்குவந்து உரிமைகேட்ட இந்நியாய
ித்தனைப்பிடித்துவிலங்கிட்டுச்சிறைப்படுத்தாது இன்னும்இத்
னைபெரும் காலந்தாழ்க்கின்றகாரணம் யாதென்றறியேன்
ன்றான். அவனுக்கொப்ப அதர்மனும் அரசனைப்பார்த்து,
இந்நியாயனை யெவ்வகைசெய்தாலும் தக்கதே யென்றான்.
இவற்றைக்கேட்ட நியாயன் அங்குள்ளாரெல்லாரையும் நோ
கி, இங்கு என்னைக்கைப்பற்ற வல்ல வீரருமுளரோ என்று
கைகொட்டி நகைத்து, அதர்மனை நோக்கி,என்னைப்பிடித்தற்கு
ீங்களொருவராய் வருகின்றீரோ, அன்றி, எல்லீரும் ஒரு
ங்கே திரண்டுவருகின்றீரோ, வாருங்கள் ஒருநொடியிலே

உம்மையெல்லாம் யமபுரம் போக்குகின்றேன் என்றான். அது கேட்டுக்கோபன் அகங்கொதிக்கவாய்துடிக்க மீசைகிமிர உயிர் பொங்கக்கண்கள் தீப்பொறிசிந்தவெழுந்து,நியாயன் உயிரை ஒரு கொடியிலுண்பேனென்று மோகனை நோக்கி,பக்திமாதா தரு ஞண்டென்று தருக்கிக்குதிக்கின்றஇத்தூதனைக் கொல்லுதற்கு இவ்வக்கிரமன் ஒருவனே போதுவன் ஆயினும்,தூதரைக் கொ லலுதல் தகாதென்று டெரியோருரைத்தார்;ஆதலின் இவனுயிர் பிழைத்தான் என்று கூறி,நியாயனைப்பார்த்துச் சினந்து, இச் சபையைவிட்டப்பாற்செல்லென்றான். அவன் சொன்னவள வில் நியாயனும்எழுந்து எம்வலிமையை நாளையறி வீரென்று கூறி மீண்டுபோய் விவேகன்பக்கஞ்சார்ந்தான். அவன் எ ழுந்து போனபின்னர் அரசனைஉலோபன் நோக்கி, இச்சபை யில்வந்து நம்மையெல்லாம் மதியாதுதருக்கிகின்ற தூதனைப் பற்றிச் சிறையிடுதற்கு துணிந்துஎழுந்தவர் நம்மில் யாரையுங் கண்டிலேம் என்றால்,இனி,விவேகன் போருக்கு வருங்காலத் தில் அவனோடு பொருதற்குத்துணிவது யாவரோ என்றான். அப்பால்மானன்என்பவனெழுந்துஅரசனை நோக்கித்துரியோ தனனிடத்திலே ஐவர் தூதுவிட்டுப் பெற்றதுயாதேனும்உண் டோ! ஆதலால்பகைவர் பின்பு நம்மைவெல்வது நிச்சயமாயி னும் ஆகுக ;அவருக்குநாம் இடங்கொடுத்தல் அழகன்றும் என்றான்.

நியாயன் தூதுசருக்கம் முற்றும்.

பிரபோத சந்திரோதய முதற்பாகம் முற்றும்,
உ-ம் பாகம் அச்சிடப்பட்டு வருகின்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம்-இராமலிங்கசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய

# ஆனந்தவருட்பாத்திரட்டு.

இஃது
சென்னைபுரத்து
இந்துமதபாலிகா தர்மபாடசாலைத்
தமிழ்ப்பண்டிதரும்,
அஷ்டாவதானம்
பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்
மாணாக்கருமாகிய
பிரசங்கரத்நம்
பாலூர்-வேலுதேசிகரவர்களால்
திருஷ்டிப் பார்வையிடப்பட்டு,

மேற்படி பாடசாலையின் தருமபரிபாலனர்
நே. முருகேசமுதலியாரவர்களால்
தமது
கணேச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
1904.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம் — இராமலிங்கசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# ஆனந்தவருட்பாத்திரட்டு.

உலகெலா முணர்ந் தோதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலிவேணியன்
அலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்.

கலைநிறை கணபதி சரணஞ் சரணம்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவநி னிணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்
சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை சரணஞ் சரணம்.

இராகம்-இந்துஸ்தானி-பியாக்-தாளம்-ஆதி.

சிவசிவகஜமுக கணநாதா
சிவகணவந்தித குணநீதா
சிவசிவசிவசிவ தத்துவபோதா
சிவகுருபரசிவ சண்முகநாதா
சிவசிவசிவசிவ சின்மயதேஜா
சிவசுந்தரகுஞ்சித நடராஜா.

அம்பலத்தரசே யருமருந்தே
ஆனந்தத்தேனே யருள்விருந்தே. 1

பொதுநடத்தரசே புண்ணியனே
புலவரெலாம்புகழ் கண்ணியனே. 2

சிவசிவசிவசிவ சின்மயதேஜா
சிவசுந்தரகுஞ்சித நடராஜா. 3

மலைதருமகளே மடமயிலே
மதிமுகவமுதே யிளங்குயிலே. 4

ஆனந்தக்கொடியே யிளம்பிடியே
அற்புதத்தேனே மலைமானே. 5

படனவிவேக பரம்பரவேதா
நடனசபேச சிதம்பரநாதா. 6

அரிபிரமாதியர் தேடியநாதா
அரகரசிவசிவ ஆடியபாதா. 7

அந்தணவங்கண வம்பரபோகா
அம்பலநம்பர வம்பிகைபாகா. 8

அம்பரவிம்ப சிதம்பரநாதா
அஞ்சிதரஞ்சித குஞ்சிதபாதா. 9

தந்திரமந்திர யந்திரபாதா
சங்கரசங்கர சங்கரநாதா. 10

கருணாநிதியே சபாபதியே
கதிமாநிதியே பசுபதியே. 11

சபாபதிபாதம் தபோபிரசாதம்
தயாநிதிபோதம் சதோதயவேதம். 12

கனகசிதம்பர கங்கரபுரஹர
அனகபரம்பர சங்கரஹரஹர. 13

சகலகலாண்ட சராசரகாரண
சகுணசிவாண்ட பராபரபூரண. 14

சிதம்ப்ரகாசா பரம்பிரகாசா
சிதம்பரேசா சுயம்பிரகாசா. 15

அருட்பிரகாசம் பரப்பிரகாசம்
அகப்பிரகாசம் சிவப்பிரகாசம். 16

நடப்பிரகாசம் தவப்பிரகாசம்
நவப்பிரகாசம் சிவப்பிரகாசம். 17

போகஞ்சுக போகஞ்சிவ போகம்மது நித்தியம்
ஏகஞ்சிவ மேகம்சிவ மேகம்மிது சத்தியம். 18

இக்கரைகடந்திடி லக்கரையே
இருப்பதுசிதம்பர சர்க்கரையே. 19

என்னுயிருடம்பொடு சித்தமதே
இனிப்பதுநடராச புத்தமுதே. 20

ஐயர்திருச்சபை யாடகமே
ஆடுதலானந்த நாடகமே. 21

கனகசபாபதி பசுபதிநவபதி
அனகவுமாபதி யதிபதிசிவபதி. 22

உத்தரஞான சிதம்பரமே
சித்தியெலாந்தரு மம்பரமே. 23

அம்பலவாசிவ மாதேவா
வம்பலவாவிங்கு வாவாவா. 24

நடராசனெல்லார்க்கு நல்லவனே
நல்லவெலாஞ்செய வல்லவனே. 25

ஆனந்தநாடகங் கண்டோமேபர
மானந்தபோனகங் கொண்டோமே. 26

சகளவுபகள நிட்களநாதா
உகளசததள மங்களபாதா. 27

சந்ததமுஞ்சிவ சங்கரபஜனம்
சங்கிதமென்பது சற்சனவசனம். 28

சங்கரசிவசிவ மாதேவா
எங்களையாட்கொள வாவாவா. 29

அரகரசிவசிவ மாதேவா
அருளமுதந்தர வாவாவா. 30

நடனசிகாமணி நவமணியே
திடனகமாமணி சிவமணியே. 3

நடமிடுமம்பல நன்மணியே
புடமிடுசெம்பல் பொன்மணியே. 3

உவட்டாதுசித்திக்கு முள்ளமுதே
தெவிட்டாதுதித்திக்குந் தெள்ளமுதே. 3

நடராஜவள்ளலை நாடுதலே
நந்தொழிலாம்விளை யாடுதலே. 3

அருட்பொதுநடமிடு தாண்டவனே
யருட்பெருஞ்சோதியென் னாண்டவனே. 3

நடராசமாணிக்க மொன்றதுவே
நண்ணுதலாணிப்பொன் மன்றதுவே. 3

நடராசபலமது நம்பலமே
நடமாடுவது திரு வம்பலமே.

இனிப்பாடுபடமாட்டேன் விட்டேனே
யென்னப்பன்மேலாணை யிட்டேனே.

நடராசர்பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார்பாட்டெல்லாம் வெறும்பாட்டு.

சிதம்பரப்பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள்பாட்டெல்லாந் தெருப்பாட்டு.

அம்பலப்பாட்டே யருட்பாட்டு
அல்லாதபாட்டெல்லா மருட்பாட்டு.

பசியாதவமுதே பகையாதபதியே
  பகராதநிலையே பறையாதசுகமே
நசியாதபொருளே நலியாதவுறவே
  நடராஜமணியே நடராஜமணியே.

புரையாதமணியே புகலாதநிலையே
  புகையாதகனலே புதையாதபொருளே
நரையாதவரமே நடியாதநடமே
  நடராஜநிதியே நடராஜநிதியே.

சிவஞானநிலையே சிவயோகநிறைவே
    சிவபோகவுருவே சிவமானவுணர்வே
நவநீதமதியே நவநாதகதியே
    நடராஜபதியே நடராஜபதியே. 44

தவயோகபலமே சிவஞானநிலமே
    தலையேறுமணியே விலையேறுமணியே
நவவாரநடமே சுவகாரபடமே
    நடராஜபரமே நடராஜபரமே. 45

நீடியவேதந் தேடியபாதம்
நேடியகீதம் பாடியபாதம்
ஆடியபோதங் கூடியபாதம்
ஆடியபாதம் ஆடியபாதம். 46

சாக்கியவேதந் தேக்கியபாதம்
தாக்கியநாதம் போக்கியபாதம்
சோக்கியவாதம் ஆக்கியபாதம்
தூக்கியபாதந் தூக்கியபாதம். 47

என்றியசூதந் தோன்றியபாதம்
ஈன்றியநாதம் ஆன்றியபாதம்
ஒன்றியபூதம் ஞான்றியபாதம்
ஊன்றியபாதம் ஊன்றியபாதம். 48

எம்புலப்பகையே எம்புலத்துறவே
எங்குலத்தவமே எங்குலச்சிவமே
அம்பினிற்கலையே அந்தணர்க்கிறையே
அம்பலத்தரசே அம்பலத்தரசே. 49

இன்புடைப்பொருளே யின்சுவைக்கனியே
எண்குணச்சுடரே யிந்தகத்தொளியே
அன்புடைக்குருவே யம்புயற்கிறையே
அம்பலத்தமுதே அம்பலத்தமுதே. 50

பதியுறுபொருளே பொருளுறுபயனே
    பயனுறுநிறைவே நிறைவுறுவெளியே

மதியுறமமுதே யமுதுறசுவையே
மறைமுடிமணியே மறைமுடிமணியே. 51

அருளுருவெளியே வெளியுறபொருளே
அதுவுறமதுவே மதுவுறசுவையே
மருளறுதெருளே தெருளுறமொளியே
மறைமுடிமணியே மறைமுடிமணியே. 52

தருவளர்நிழலே நிழல்வளர்சுகமே
தடம்வளர்புனலே புனல்வளர்நலனே
திருவளருருவே வுருவளருயிரே
திருநடமணியே திருநடமணியே. 53

உயிருறமுணர்வே யுணர்வுறமொளியே
ஒளியுறவெளியே வெளியுறவெளியே
செயிரறுபதியே சிவநிறைநிதியே
திருநடமணியே திருநடமணியே. 54

கலைநிறைமதியே மதிநிறையமுதே
கதிநிறைகதிரே கதிர்நிறைசுடரே
சிலைநிறைநிலையே நிலைநிறைசிவமே
திருநடமணியே திருநடமணியே. 55

மிகவுயர்நெறியே நெறியுயர்விளைவே
விளைவுயர்சுகமே சுகமுயர்பதமே
திகழுயருயர்வே வுயருயருயர்வே
திருநடமணியே திருநடமணியே. 56

இயல்கிளர்மறையே மறைகிளரிசையே
இசைகிளர்துதியே துதிகிளரிறையே
செயல்கிளரடியே யடிகிளர்முடியே
திருநடமணியே திருநடமணியே. 57

புரையறுபுகழே புகழ்பெறுபொருளே
பொருளதுமுடிபே முடிவுறுபுணர்வே
திரையறுகடலே கடலெழுசுதையே
திருநடமணியே திருநடமணியே. 58

நிகழ்நவநிலையே நிலையுயர்நிலையே
நிறையருணிதியே நிதிதருபதியே
திகழ்சிவபதமே சிவபதசுகமே
திருநடமணியே திருநடமணியே. 59

புத்தந்தரும்போதா வித்தந்தருந்தாதா
நித்தந்தரும்பாதா சித்தந்திரும்பாதா. 60

அம்பலவாணனை நாடினனே
அவனடியாரொடு கூடினனே
தம்பதமாபுகழ் பாடினனே
தந்தனவென்றுகூத் தாடினனே. 61

நாதாந்தநாட்டுக்கு நாயகரே
நடராஜரேசபா நாயகரே. 62

நான்சொல்லு மிதுகேளீர் சத்தியமே
நடராஜவெனில்வரும் நித்தியமே. 63

நல்லோரெல்லார்க்குஞ் சபாபதியே
நல்வரமீயுந் தயாநிதியே. 64

நடராஜர்தன்னட நன்னடமே
நடம்புரிகின்றது மென்னிடமே. 65

சிவகாமவல்லிக்கு மாப்பிள்ளையே
திருவாளனவன் சீர்ப்பிள்ளையே. 66

சிவகாமவல்லியைச் சேர்ந்தவனே
சித்தெல்லாஞ்செய்திடத் தேர்ந்தவனே. 67

இறவாவரந்தரு நற்சபையே
யெனமறைபுகழ்வது சிற்சபையே. 68

என்னிருகண்ணு ளிருந்தவனே
இறவாதருளு மருந்தவனே. 69

அம்பலவாணர்தம் மடியவரே
யருளரசாள்மணி முடியவரே. 70

கையறவிலாதுநடுக் கண்புருவப்பூட்டு
கண்டுகளிகொண்டுதிறக் துண்டுநடுநோட்டு
ஐயர்மிகவுய்யும்வகை யப்பர்விளையாட்டு
ஆடுவதென்றேமறைகள் பாடுவதுபாட்டு. 7

சிற்சபையும்பொற்சபையுஞ் சொந்தமெனதாச்சு
தேவர்களுமூவர்களும் பேசுவதென்பேச்சு
இச்சமயவாழ்விலெனக் கென்னையினியேச்சி
என்பிறப்புத்துன்பமெலா மின்றோடேபோச்சு. 7

ஐயாருட்சோதியரசாட்சியெனதாச்சு
ஆரணமுமாகமும் பேசுவதென்பேச்சு
எய்யுலகவாழ்விலெனக் கென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலா மின்றோடேபோச்சு. 7

சிற்பொதுவும்பொற்பொதுவும் நானறியலாச்சு
சித்தர்களுமுத்தர்களும் பேசுவதென்பேச்சு
இற்பகருமிவ்வுலகி லென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலா மின்றோடேபோச்சு. 7

ஈசனருளாற்கடலி லேற்றவொருவோடம்
எறிக்கரையேறினே னிருந்ததொருமாடம்
தேசுறுமம்மாடநடுத் தெய்வமணிப்பீடம்
தீபவொளிகண்டவுடன் சேர்ந்ததுசந்தோடம். 7

மேருமலையுச்சியினில் விளங்குகம்பகீட்சி
மேவுமதன்மேலுலகில் வீறுமரசாட்சி
சேருமதிற்கண்டபல காட்சிகள்கண்காட்சி
செப்பலரிதாமிதற்கென் னப்பனருள்சாட்சி. 7

துரியமலைமேலுளதோர் சோதிவளநாடு
தோன்றுமதிலேயர்நடஞ் செய்யுமணிவீடு
தெரியுமதுகண்டவர்கள் காணிலுயிரோடு
செத்தவரெழுவாரென்று கைத்தாளம்போடு. 77

சொல்லாலளப்பரிய சோதிவரைமீது
தூயதுரியப்பதியில் நேயமறையோது

எல்லாஞ்செய்வல்லசித்தர் தம்மையுறும்போது
இறந்தவரெழுவாரென்று புறந்தாரையூது. 78

வலதுசொன்னபேர்களுக்கு வந்ததுவாய்த்தாழ்வு
மற்றவரைச்சேர்ந்தவர்க்கும் வந்ததலைத்தாழ்வு
வலதுபுசமாடநம்பால் வந்ததருள்வாழ்வு
மற்றுநமைச்சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல்வாழ்வு. 79

அம்பலத்திலெங்களைய ராடியநல்லாட்டம்
அன்போடுதுதித்தவருக் கானதுசொல்லாட்டம்
வம்புசொன்னபேர்களுக்கு வந்ததுமல்லாட்டம்
வந்தலையாட்டமன்றி வந்ததுபல்லாட்டம். 80

நாத்திகஞ்சொல்கின்றவர்தம் நாக்குமுடைநாக்கு
நாக்குருசிகொள்ளுவதும் நாறியபிண்ணுக்கு
சீர்த்திபெறுமம்பலவர் சீர்புகன்றவாக்கு
செல்வாக்குநல்வாக்கு தேவர்திருவாக்கு. 81

அருட்பெருஞ்சோதியைக் கண்டேனே
ஆனந்தத்தெள்ளமு துண்டேனே
இருட்பெருமாயையை விண்டேனே
எல்லாஞ்செய்சித்தியைக் கொண்டேனே. 82

திருச்சிற்றம்பலம்.

---

## வல்லபைகணேசர் பிரசாதமாலை.

திருச்சிற்றம்பலம்.

விண்ணவர்புகழு மெய்கண்டநாதன் வித்தகக்கபிலனு தி
ர்க்கே, கண்ணருள்செயுநின் பெருமையையடியேன் கனவி
நனவிலுமறவேன், தண்ணருட்கடலே யருட்சிவபோக சா
மேசராசர நிறைவே, வண்ணமாமேனிப் பரசிவகளிறே வல்
லபைக்கணேசமா மணியே. 83

நாரையூர்நம்பி யமுதுகொண்டேட்ட நற்றிருவாய்மலர்ந்
தருளிச், சீரைமேவுறச்செய் தளித்திடுநின்து திருவருளுடொ

று மறவேன், தேரையூர்வாழ்வுந் திரமலவெனுநற் றிடமென
கருளிய வாழ்வே, வாரையூர்முலையாண் மங்கைநாயகியெம்
ல்லபைக்கணேசமா மணியே. 8

தடக்கைமாமுகமு முக்கணும்பவளச் சடிலமுஞ்சதுர்
புயங் களுங்கை, யிடக்கையங்குசமும் பாசமும்பதமு மிறை
பொழுதேனும்யான் மறவேன், விடக்களமுடைய வித்தகப்
ருமான் மிகமகிழ்ந் திடவருள் பேறே, மடக்கொடிநங்கை ம
கைநாயகியெம் வல்லபைக்கணேசமா மணியே. 8

கமலமலரயனயநன் முதலமரரிதயமுறு கரிசகலவரு
செய்பசு பதியாம், நிமலநிறைமதியினொளிர் நிரதிசயபரமசு
நிலையையருள்புரியுமதி பதியாம், விமலபிரணவவடிவ விகட
டகடகரட விபுலகயமுகசுகுண பதியாம், அமலபரசிவவொ
யி னுதயசயவிசயசய வபயவெனுமெமதுகண பதியே. 8

திருச்சிற்றம்பலம்.

## புண்ணியவிளக்கம்.

திருச்சிற்றம்பலம்.

பாடற்கினியவாக்களிக்கும் பாலுஞ்சோறும்பரிந்தளிக்கு
கூடற்கினியவடியவர்தங் கூட்டமளிக்குங்குணமளிக்கும், ஆ
ற்கினியநெஞ்சேநீ யஞ்சேலென்மேலாணைகண்டாய், தேடற்
னியசீரளிக்குஞ் சிவாயநமவென் றிடுநீறே. 8

வெய்யவினையின்வேரறுக்கு மெய்ம்மைஞானவீட்டிலை
ந், துய்யவமலநெறிகாட்டு முன்னற்கரியவுணர்வளிக்கும், ஐ
மடைந்தநெஞ்சேநீ யஞ்சேலென்மேலாணைகண்டாய், செய்ய
லர்க்கண்மால்போற்றுஞ் சிவாயநமவென் றிடுநீறே. 8

கண்கொண்மணியைமுக்கனியைக் கரும்பைக்கரும்பின்
ட்டிதனை, விண்கொளமுதைநம்மரசை விடைமேனமக்குத்தே
ற்றுவிக்கு, மண்கொள்வினையானெஞ்சேநீ யஞ்சேலென்மேல
ணைகண்டாய், திண்கொண்முனிவர்சுரர்புகழுஞ் சிவாயநம
ன் றிடுநீறே. 8

நோயையறுக்கும்பெருமருந்தை நோக்கற்கரியநுண்மைத்
த், தூயவிடைமேல்வருநமது சொந்தத்துணையைத்தோற்று
க்கும், ஆயவினையாளெஞ்சேசநீ யஞ்சேலென்மேலாணைகண்
ய், சேயவயன்மாலுடரிதாஞ் சிவாயநமவென்றிடுநீறே. 90

திருச்சிற்றம்பலம்.

## திருவண்ணவிண்ணப்பம்.

திருச்சிற்றம்பலம். நீலம்புரி

கள்ளப்பா யென்றருளுங் காளத்தியப்பாமுன், வண்ணப்
ல்வேண்டு மதலையைப்பால்வாரிதியை, உண்ணப்பாவென்று
த்த வொற்றியப்பாவர்தருள, வெண்ணப்பாவென்றழுமிவ்
ழைமுகம்பாராயோ. 91

மஞ்சுபடுஞ்செஞ்சடில வள்ளலேயுள்ளுகின்றே, ருஞ்சுபடு
ண்ணமரு ளொற்றியூருத்தமனே, நஞ்சுபடுங்கண்டமுடை
பரனேவன்றுயராற், பஞ்சுபடும்பாடுபடும் பாவிமுகம்பாரா
ா. 92

கண்ணாரமுதே கரும்பேயென்கண்ணேயென், னண்ணவு
பொன்னருடா ரார்ந்திடுமோவல்லதென்று, நண்ணுதோயா
நணுகுமோவென்றுருகி, யெண்ணுதுமெண்ணுமிந்த வே
முகம்பாராயோ. 93

நாடியசீரொற்றி நகருடையாய்நின்கோயில், நீடியநற்சந்நி
னின்றுநின்றுமாலயனுந், தேடியறியொண்ணாத திருவுரு
க்கண்டுருகிப், பாடியழுதேங்குமிந்தப் பாவிமுகம்பாரா
ா. 94

திருச்சிற்றம்பலம்.

## சிறுவிண்ணப்பம்.

திருச்சிற்றம்பலம். தி மாசு

பண்ணுலுன்னருட்புகழைப்பாடுகின்றார் பணிகின்றார்நின்
கைப்பார்த்துப்பார்த்துக், கண்ணாரவுளங்குளிரக்களித்தாந
் கண்ணீர்கொண்டாடுகின்றார்கருணைவாழ்வை, யெண்ணு

நின்றனையெந்தாயெந்தாயெந்தா வென்கின்றார்நின்னன்பரெ லாமென்றன், அண்ணாநானொருபாவிவஞ்சநெஞ்சா லலைகி றேனென்செய்கேனந்தோவந்தோ. 9

பொய்யாதநின்னடியாரெல்லாநல்ல புண்ணியமேசெய் நினைப்போற்றுகின்றார், நையாநின் றலைகின்றமனத்தாலிங் நானொருவன்பெரும்பாவிநாயேன்றீமைச், செய்யாநின் றுழ க்கின்றேன்சிறிதுநின்னைச் சிந்தியேன் வந்திக்குந்திறமுநா ன், ஐயாவென்னப்பாவென்னரசேவீணி னலைகின்றேனெ செய்கேனந்தோவந்தோ. 9

தெருளுடையார்நின்னன்பரெல்லாநின்றாட் சிந்தையி வைத்தானந்தந்தேக்குகின்றார், மருளுடையேனொருவன் விவஞ்ச மனத்தாலேயிளைத்திளைத்துமயங்குகின்றேன், இரு டையேனேர்பூட்டும்பகடுபோலிங் கில்லுழைப்பிலுழைக்கி றேனெல்லாம்வல்ல, அருளுடையாயாளுடையாயுடையாய் ணி லலைகின்றேனென்செய்கேனந்தோவந்தோ. 9

கொலையறியாக்குணத்தோர்நின்னன்பரெல்லாங் குண செய்துன்னருடான்கூடுகின்றார், புலையறிவேனொருவன் ழையே செய்துபுலங்கெட்டவிலங்கேபோற்கலங்குகின்றே, லையறியேனெறியொன்றுமறியேனெங்கு மினையன்றித்துணை யொன்றுமறியேன்சற்று, மலையறியாவருட்கடனீயாள்கவீ லலைகின்றேனென்செய்கேனந்தோவந்தோ. 9

திருச்சிற்றம்பலம்.

## கருணைவிண்ணப்பம்.

திருச்சிற்றம்பலம்.

நல்லார்க்கெல்லாநல்லவனீ யொருவன்யாண்டுநாயடி ன், பொல்லார்க்கெல்லாம்பொல்லவனொருவனிற்றப்புணர் பதனை, யெல்லாமுடையாய் நினக்கெதிரென் றெண்ணேலு வென்றெண்ணுகவீ, தல்லால்வழக்கென்னிருமைக்கும் பொ மையன்றேவருளிடமே. 9

புதியேனல்லேனின்னடியைப் பொருத்தமில்லேனல் ன்யான், மதியேன்வேற்றுத்தேவர்தமை வந்தங்கவர்தாமெ

டினுந், துதியேனின்னைவிடுவேனோ தொண்டனேனைவிட ோகோ, நதியேர்சடையோயின்னருணீ நல்கல்வேண்டுநாயே ிக. 100

சிரிப்பார் நின்பேரருள்பெற்றோர் சிவனேசிவனேசிவனே ா, விரிப்பார்பழிச்சொல்லன்றியெனை விட்டால்வெள்ளை டையோனே, தரிப்பாயிவனையருளிடத்தே யென்றுநின்றுத ்வண்ணம், தெரிப்பார்நினக்குமெவர்கண்டாய் தேவர்தேட ரியானே. 101

சொல்லற்கரியபெரியபரஞ் சுடரே முக்கட்சுடர்க்கொழுந் , மல்லற்கருமாலயன்முதலோர் வழுத்தும்பெருஞ்சீர்மணிக் ன்றே, புல்லற்கரிதாமெளியேன்றன் பிழைகள்யாவும்பொறு ிந்த, வல்லற்கடனின்றெனையெடுத்தே யருள்வாயுன்றனரு ாலமே. 102

திருச்சிற்றம்பலம்.

## தனித்திருப்புலம்பல்.

திருச்சிற்றம்பலம்.

திங்கள் விளங்குஞ்சடைத்தருவைத் தீம்பாற்சுவையைச் சந்தேனைச், செங்கைமருவுஞ்செழுங்கனியைச் சீரார்முக்கட் சங்கரும்பை, மங்கைமலையாண்மணந்தபெருவாழ்வைப்பவள லதன்னை, யெங்கள்பெருமான்றனையந்தோ வென்னேயெ ணுதிருந்தேனே. 103

அன்பரிதயமலர்க்கோயி லமர்ந்தபரமானந்தத்தைத், துன் மகலச்சுகமளிக்குந் தூயதுணையைச்சுயஞ்சுடரை, வன்பரிடத் ன்மருவாத மணியைமணியார்மிடற்றானை, யின்பநிறைவையி றயோனை யென்னேயெண்ணாதிருந்தேனே. 104

ஒருமைப்பயனையொருமைநெறி யுணர்ந்தாருணர்வினுள் ணர்வைப், பெருமைக்கதியைப்பசுபதியைப் பெரியோரெவ க்கும்பெரியோனை, யருமைக்களத்திற்கருமையணி யம்மான் ன்னையெம்மானை, யிருமைப்பயனுந்தருவானை யென்னேயெ ணுதிருந்தேனே. 105

கறையோர் கண்டத்தணிந்தருளுங் கருணாநிதியைக் கல
ணுதலை, மறையோனெடுமாற்கரியசிவ மலையையலையில்வா
தியைப், பொறையோருள்ளம்புகுந்தொளிரும் புனிதவொ
யைப்பூரணனை, யிறையோன்றன்னையந்தோநா னென்னேெ
ண்ணாதிருந்தேனே. 10

திருச்சிற்றம்பலம்.

## திருப்புகழ்ச்சி.

திருச்சிற்றம்பலம்.

திருவுளந்தெரியேன்றிகைப்புறுகின்றேன் சிறியரிற்சிறி
னேன்வஞ்சக், கருவுளக்கடையேன்பாவியேன்கொடிய கன்
னக்குரங்கனேனந்தோ, வெருவுறுகின்றேனஞ்சலென்றின்
விரும்பியாட்கொள்ளுதல்வேண்டு, மருவுமாகருணைப்பெருங்
டலமுதே வள்ளலேயென்பெருவாழ்வே. 10

தாயுந்தந்தையுந் தெய்வமுங்குருவுந் தாங்குகின்றதோர்
லைவனும்பொருளு, மாயுமின்பமுமன்புமெய்யறிவு மனைத்து
யெனவர்தரித்திருந்தே, னேயுமென்னளவிரக்கமொன்றிலே
லென்செய்வேனிதையார்க்கெடுத்துரைப்பேன், சேயுநின்ன
ணசை யுறுங்கண்டாய் தில்லைமன்றிடைத் திகழொளிவிள
கே. 10

அருள்பழுத்தோங்குங்கற்பகத்தருவே யருண்மருந்தொள
ர்குணக்குன்றே, யருளெனுமமுதந்தருமொருகடலே யருட்கி
ணங்கொளுஞ்சுடரே, யருளொளிவீசுமரும்பெறன்மணியே ய
ருட்சுவைகனிந்தசெம்பாகே, யருண்மணம்வீசுமொருதனிம
ரே யருண்மயமாம்பரசிவமே. 10

திருச்சிற்றம்பலம்.

## தனித்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

செம்பவளத்தனிக்குன்றே யருளானந்தச் செழுங்கனியே
முக்கண்ணுடைத்தேவேமூவா,வம்புவிநீரனல்வளிவானாதியா
வரசேயென் னுருயிர்க்கோராரணமாகுஞ், சம்புசிவசயம்புவேச

ராவெண் சைலம்வளர்தெய்வதவான்றருவேமிக்க, வம்பவி
மன்குழலொருபால்விளங்கவோங்கு மழவிடைமேல் வருங்
ட்சிவழங்குவாயே. 110

நீடுகின்றமாமறையு நெடுமாலுந்திசைமுகனு நிமலவாழ்க்
, நாடுகின்றமுனிவரு முருத்திரருந்தேடவரு ணட்டங்
ாண்டு, பாடுகின்றமெய்யடிய ருளம்விரும்பியாநந்தப் படிவ
கி, யாடுகின்றமாமணியை யாரமுதைநினைந்துநினைந் தன்பு
ய்வாம். 111

மறைமுடிவிளக்கேபோற்றி மாணிக்கமலையேபோற்றி, க
மணிகண்டபோற்றி கண்ணுதற்கரும்பேபோற்றி, பிறை
உச்சடைகொண்டோங்கும் பேரருட்குன்றேபோற்றி, சி
தவிர்த்தெனையாட்கொண்டசிவசிவபோற்றிபோற்றி. 112
மாற்றரியாபசும்பொன்னே மணியேயென்கண்ணேகண் ம
யேயார்க்குந், தோற்றரியசுயஞ்சுடரே யாநந்தச்செழுந்தே
ா சோதியேநீ, போற்றரியசிறியேனைப் புறம்விடினும்வேற்ற
பாற் போகேன்வேதந், தேற்றரியதிருவடிக்கண் பழிவிளைப்
ணி ன்னுணைச்சிறியனேனே. 113

அருளாரமுதேயரசேநின் னடியேன்கொடியேன் முறை
யோ, விருள்சேர்மனனோடிடருழந் தேனெந்தாயிதுதான்
றையேயோ, மருள்சேர்மடவார்மயலாலே மாழ்கின்றேனுன்
றையேயோ, தெருளோர்சிறிதுமறியாதே திகையாநின்றே
முறையேயோ. 114

ஒழியாக்கவலையுறுகின்றே னுடையாய்முறையோமுறை
யோ, வழியாக்கருணைக்கடலேயென் னரசேமுறையோமு
றயேயோ,பொழியாப்புயலேயனையார்பால் புகுவித்தனையோ
றையேயோ, விழியாத்திரிதந்துழல்கின்றே னிறைவாமுறை
ாமுறையேயோ. 115

பொன்னென்கோமணியென்கோ புனிதவொளித்திரளெ
கோ பொற்பினோங்கு, மின்னென்கோவிளக்கென்கோ விரி
டர்க்கோர்சுடரென்கோ வினையனேன்யா, னென்னென்கோ

வென்னன்கோவெம்பெருமான்றிருமேனி யிருந்தவண்ண, (
ன்னென்கோ தறுதவத்தாற்கண்டுகளித்திடப்பெற்றேன் மு
கண்மூர்த்தி. 11

திருச்சிற்றம்பலம்.

## கலைமகளார்திருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

தவளமலர்க்கமலமிசை வீற்றிருக்குமம்மனையைச் சாந்த
பூத்த, குவளைமலர்க்கண்ணுளைப் பெண்ணுளும்பெண்ணமுமை
க் கோதிலாத, பவளவிதழ்ப்பசுங்கொடியை நான்முகனார்ந
வோங்கும் பாவைதன்னைச், கவளமதமயக்கொம்பின் முலைய
ளைக்கலைமாதைக் கருதுவோமே. 11

சங்கம்வளர்ந்திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்சரச்சுவதி
ன்னையன்பர், துங்கமுறக்கலைபயிற்றி யுணர்வளிக்குங்கலைஞா
த் தோகைதன்னைத், திங்கணுதற்றிருவையருட் குருவைமன
ரோங்கியபெண் டெய்வந்தன்னைத், தங்கமலைமுலையாளைக்கலை
யாளைத்தொழுது புகழ்சாற்றுகிற்பாம். 118

கலைபயின்றவுளத்தினிக்குங் கரும்பினைமுக்கனியையருட்
கடலையோங்கு, நிலைபயின்றமுனிவருந் தொழுதேத்தநான்முக
ஞர் நீண்டநாவிற், றலைபயின்றமறைபயின்று மூவுலகுங்காக்கி
ன்றதாயைவாகைச், சிலைபயின்றநுதலாளைக் கலைவாணியம்
மையைநாஞ் சிந்திப்போமே. 119

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்தக்களிப்பு.

திருச்சிற்றம்பலம்.

நல்ல மருந்திம் மருந்து - சுக
நல்கும் வைத்திய நாத மருந்து - நல்ல.
அருள்வடிவான மருந்து - நம்முள்
அற்புதமாக வமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து - அன்பர்க்
கின்புருவாக விருந்த மருந்து (நல்ல) 120

ந்சலந்தீர்க்கு மருந்து - எங்குந்
தானேதானுகித் தழைக்கு மருந்து
ந்சலென் ருளு மருந்து - சச்சி
தாநந்த மாக வமர்ந்த மருந்து (நல்ல) 121

ந்தகமான மருந்து - சதுர்
வேதமுடிவில் விளங்கு மருந்து
துவாதீத' மருந்து - என்னைத்
தாளுக்கிக்கொண்டதயாள மருந்து - (நல்ல) 122

ப்பை யொழிக்கு மருந்து - யார்க்கும்
பேசப்படாத பெரிய மருந்து
ப்பைத் தவிர்க்கு மருந்து - என்னு
ளென்றுமதுரித் தினிக்கு மருந்து - (நல்ல) 123

பலத் தாடு மருந்து - பர
மாநந்தவெள்ளத்தழுத்து மருந்து -
பலமாகு மருந்து - வேளு
ரென்னுந்தலத்திலிருக்கு மருந்து - (நல்ல) 124

தப்படாத மருந்து - உண்டாற்
றேன்போலினிக்குந் தெவிட்டா மருந்து
தப்படாத மருந்து - மலைப்
பெண்ணிடங்கொண்டபெரிய மருந்து - (நல்ல) 125

ல்வண்ணமாகு மருந்து - அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
ல்வண்ண நாடு மருந்து - உள்ளே
நோக்குகின்ருேர்களைநோக்கு மருந்து - (நல்ல) 126

க்கப் பசிபோ மருந்து - தன்னைப்
பாரா தவர்களைச்சேரா மருந்து
க்கத் தெரிந்த மருந்து - அது
டலமருந்தென்றுகொண்ட மருந்து - (நல்ல) 127

ரமளங்கூடு மருந்து - நலங்
கொடுக்கத்து சங்கட்டிக்கொண்ட மருந்து

நாமளவாத மருந்து - நம்மை
நாமறியும்படி நண்ணு மருந்து - (நல்ல) 128
மூவர்க் கரிய மருந்து - செல்வ
முத்துகுமாரனையீன்ற மருந்து -
நாவிற்கினிய மருந்து - தைய
லுயகிகண்டு தழுவு மருந்து - (நல்ல) 129

திருச்சிற்றம்பலம்.

---

## பாங்கியர்க்கறிவுறுத்தல்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலத்திலாடுகின்றார்பாங்கிமாரே - அவர்
ஆட்டங்கண்டுநாட்டங்கொண்டேன் பாங்கிமாரே. 130

ஆடுகின்றசேவடிமேற்பாங்கிமாரே - மிக
ஆசைகொண்டுவாடுகின்றேன்பாங்கிமாரே. 131

இன்பவடிவாய்ச்சபையிற்பாங்கிமாரே - நட
மிட்டவர்மேலிட்டம்வைத்தேன்பாங்கிமாரே. 132

ஈநவுடற்கிச்சைவையேன்பாங்கிமாரே - நட
நேசர்தமையெய்தும்வண்ணம்பாங்கிமாரே. 133

உத்தமர்பொன்னம்பலத்தேபாங்கிமாரே - யின்ப
வுருவாகியோங்குகின்றார்பாங்கிமாரே. 134

ஊனவுலகைக்கருதேன்பாங்கிமாரே - மன்றில்
உத்தமருக்குறவாவேன்பாங்கிமாரே. 135

கற்பனையெல்லாங்கடந்தார்பாங்கிமாரே - யென்றன்
கற்பனைக்குட்படுவாரோபாங்கிமாரே. 136

கண்டிலர்நான்படும்பாடுபாங்கிமாரே - மூன்று
கண்ணுடையாரென்பாரையோபாங்கிமாரே. 137

கன்மனமெல்லாங்கரைப்பார்பாங்கிமாரே - மனங்
கரையாரென்னளவிலேபாங்கிமாரே. 138

கள்ளமொன்றுமறியேனான்பாங்கிமாரே - என்னைக்
கைவிடவுந்துணிவாரோபாங்கிமாரே. 139

கற்பழித்துக்கலந்தாரேபாங்கிமாரே - இன்று
கைநழுவவிடுவாரோபாங்கிமாரே. 140

கண்டவரெல்லாம்பழிக்கப்பாங்கிமாரே - என்றன்
கந்தியழித்தேயொளித்தார்பாங்கிமாரே. 141

காமனைக்கண்ணலெரித்தார்பாங்கிமாரே - என்றன்
காதலைக்கண்டறிவாரோபாங்கிமாரே. 142

காவலையெல்லாங்கடந்துபாங்கிமாரே - என்னைக்
கைகலந்தகள்ளரவர்பாங்கிமாரே. 143

காணவிழைந்தேனவரைப்பாங்கிமாரே - கொண்டு
காட்டுவாரையறிந்திலேன்பாங்கிமாரே. 144

கிட்டவரவேண்டுமென்றார்பாங்கிமாரே - நான்
கிட்டுமுன்னேயெட்டநின்றார்பாங்கிமாரே. 145

கிந்நரங்களென்றிசைத்தார்பாங்கிமாரே - நான்
கேட்பதன்முன்சேட்படுத்தார்பாங்கிமாரே. 146

கிள்ளையைத்தூதாவிடுத்தேன்பாங்கிமாரே - அது
கேட்டுவரக்காணேனையோபாங்கிமாரே. 147

கீதவகைபாடிநின்றார்பாங்கிமாரே - அது
கேட்டுமதிமயங்கினேன்பாங்கிமாரே. 148

கீழ்மைகுறியாதென்னைப்பாங்கிமாரே - மனக்
கேண்மைகுறித்தாரேயன்றுபாங்கிமாரே. 149

கீடமனையேனையும்பாங்கிமாரே - அடிக்
கேயடிமைகொண்டாரன்றுபாங்கிமாரே. 150

குற்றமெல்லாங்குணமாகப்பாங்கிமாரே - கொள்ளுங்
கொற்றவரென்கொழுநர்காண்பாங்கிமாரே. 151

குற்றமொன்றுஞ்செய்தறியேன்பாங்கிமாரே - என்னைக்
கொண்டுகுலம்பேசுவாரோபாங்கிமாரே. 152

குஞ்சிதப்பொற்பாதங்கண்டாற்பாங்கிமாரே - உள்ள
குறையெல்லாந்தீருங்கண்டீர்பாங்கிமாரே. 153

கூற்றுதைத்தபாதங்கண்டீர்பாங்கிமாரே - நங்கள்
குடிக்கெல்லாங்குலதெய்வம்பாங்கிமாரே. 154

கூறரியபதங்கண்டபோங்கிமாரே - களி
கொண்டுகிற்கவிளைந்தேனன்பாங்கிமாரே. 155

கூடல்விழைந்தேனவரைப்பாங்கிமாரே - அது
கூடும்வண்ணங்கூட்டிடுவீர்பாங்கிமாரே. 156

திருச்சிற்றம்பலம்.

## வெண்ணிலா.

திருச்சிற்றம்பலம்.

தன்னையறிந்தின்பமுறவெண்ணிலாவே - ஒரு
தந்திரநீசொல்லவேண்டும்வெண்ணிலாவே. 1

நாதமுடிமேலிருந்தவெண்ணிலாவே - அங்கே
நானும்வரவேண்டுகின்றேன்வெண்ணிலாவே. 2

சச்சிதானந்தக்கடலில்வெண்ணிலாவே - நானுந்
தாழ்ந்துவிழவேண்டுகின்றேன்வெண்ணிலாவே. 3

இராப்பகலில்லாவிடத்தேவெண்ணிலாவே - நானும்
இருக்கவெண்ணிவாடுகின்றேன்வெண்ணிலாவே. 4

தேசுநிறமாய்நிறைந்தவெண்ணிலாவே - நானுஞ்
சிவமயமதாய்விழைந்தேன்வெண்ணிலாவே. 5

போதநடுவூடிருந்தவெண்ணிலாவே - மலப்
போதமறவேண்டுகின்றேன்வெண்ணிலாவே. 6

ஆருமறியாமலிங்கேவெண்ணிலாவே - அரு
ளாளர்வருவாரோசொல்லாய்வெண்ணிலாவே. 7

அந்தரங்கசேவைசெய்யவெண்ணிலாவே - யெங்க
ளையர்வருவாரோசொல்லாய்வெண்ணிலாவே. 8

வேதமுடிமேலிருந்தவெண்ணிலாவே - மல
வேதையுளவேதுசொல்லாய்வெண்ணிலாவே. 9

குண்டலிப்பால்நின்றிலங்கும்வெண்ணிலாவே - அந்த
குண்டலிப்பால்வேண்டுகின்றேன்வெண்ணிலாவே. 10

ஆதியந்தமென்றுரைத்தார்வெண்ணிலாவே - அந்த
ஆதியந்தமாவதென்னவெண்ணிலாவே. 11

வித்திலாமலேவிளைந்தவெண்ணிலாவே - நீதான்
விளைந்தவண்ணமேதுசொல்லாய்வெண்ணிலாவே. 12

முப்பொருளுமொன்றதென்பார்வெண்ணிலாவே - அந்த
மூன்றுமொன்றாய்முடிந்ததென்னவெண்ணிலாவே. 13

நானதுவாய்நிற்கும்வண்ணம்வெண்ணிலாவே - ஒரு
ஞானநெறிசொல்லுகண்டாய்வெண்ணிலாவே. 14

ஞானமயமாய்விளங்கும்வெண்ணிலாவே - என்னை
நானறியச்சொல்லுகண்டாய்வெண்ணிலாவே. 15

வாசிவாசியென்றுரைத்தார்வெண்ணிலாவே - அந்த
வாசியென்னப்பேசுகண்டாய்வெண்ணிலாவே. 16

ஐந்தலைப்பாம்பாட்டுகின்றார்வெண்ணிலாவே - அவர்
அம்பலத்தினின்றதென்னவெண்ணிலாவே. 17

ஓரெழுத்திலைந்துண்டென்பார்வெண்ணிலாவே - அது
ஊமையெழுத்தாவதென்னவெண்ணிலாவே. 18

அம்பலத்திலாடுகின்றார்வெண்ணிலாவே - அவர்
ஆடுகின்றவண்ணமென்னவெண்ணிலாவே. 19

அந்தரத்திலாடுகின்றார்வெண்ணிலாவே - அவர்
ஆடும்வகையெப்படியோவெண்ணிலாவே. 20

அணுவிலணுவாயிருந்தார்வெண்ணிலாவே - எங்கு
மாகிநின்றவண்ணமென்னவெண்ணிலாவே. 21

அண்டபகிரண்டமெல்லாம்வெண்ணிலாவே - ஐயர்
ஆட்டமென்றுசொல்வதென்னவெண்ணிலாவே. 22

அம்பரத்திலாடுகின்றார்வெண்ணிலாவே - என்னை
ஆட்டுகின்றாரிம்பரத்தேவெண்ணிலாவே. 23

திருச்சிற்றம்பலம்.

## நடேசர்கொம்மி.

### பல்லவி.

கொம்மியடிப்பெண்கள் - கொம்மியடி - இரு
கொங்கைகுலுங்கவே கொம்மியடி.

### அநுபல்லவி.

நம்மையாளும்பொன் னம்பலவாணனை
நாடிக்கொம்மியடியுங்கடி - பதம் - பாடிக்கொம்மியடியுங்க[டி]

### சரணங்கள்.

காமமகற்றியதூயனடி - சிவ
காமசவுந்தரிநேயனடி
மாமறையோதுசெவ்வாயனடி - மணி
மன்றெனுஞானவாகாயனடி. 2[4]

ஆனந்தத்தாண்டவராஜனடி - நமை
யாட்கொண்டருளியதேஜனடி
வானந்தமாமலைமங்கைமகிழ்-வடி
வாளனடிமணவாளனடி. 2[5]

கல்லைக்கனிவிக்குஞ்சுத்தனடி - முடி
கங்கைக்கருளியகர்த்தனடி
தில்லைச்சிதம்பரசித்தனடி - தேவ
சிங்கமடியுயர்தங்கமடி. 2[6]

பெண்ணொருபால்வைத்தமத்தனடி - சிறு
பிள்ளைக்கறிகொண்டபித்தனடி
நண்ணிநமக்கருளத்தனடி - மிக
நல்லனடியெல்லாம்வல்லனடி. 2[7]

அம்பலத்தாடல்செயையனடி - யன்ப
ரன்புக்கெளிதருமெய்யனடி
தும்பைமுடிக்கணிதூயனடி - சுயஞ்
சோதியடிபரஞ்சோதியடி. 28

திருச்சிற்றம்பலம்.

## வேட்கைக்கோத்து.

திருச்சிற்றம்பலம்.

விண்படைத்தபுகழ்தில்லை யம்பலத்தானெவர்க்கும் மே
லானன்பருளமேவுநடராஜன், பண்படைத்த வெனையறியா
ரம்பருவந்தனிலே புரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறி
ன்மீட்டும், பெண்படைத்த பெண்களெலா மவமதித்தே வ
ு பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சியெனலானேன், கண்ப
டத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோ வவன்றன் கணக்
ந்தும்விடுவேனோ கண்டாயென்றோழி. 29

சித்தமணியம்பலத்தா னென்பிராணநாதன் சிவபெருமா
ம்பெருமான் செல்வநடராஜன், வாய்த்தவென்னையறியாத
ம்பருவந்தனிலே மகிழ்ந்துவந்துமாலையிட்டார் மறித்துமு
பாரா, ராய்த்தகலைகற்றுணர்ந்த வணங்கனையார் தமக்
ார்செய்தபோதனையோ வாறுலுமிதுகேள், காய்த்தமரம்
யாத கணக்குமுண்டோ வவன்றன் கணக்கறிந்தும் விடு
னோகண்டாயென்றோழி. 30

என்னுயிரிற்கலந்துகலந் தினிக்கின்றபெருமா னென்னி
வன் பொதுவினடமியற்றுநடராஜன், றன்னையறியார்ப்ப
த் தென்னை மணம்புரிந்தான் றனையறிந்த பருவத்தேயெனை
யவிரும்பான், பின்னையன்றி மூன்றுமொரு பிழைபுரிந்தே
லை பெண்பரிதாபங்காணல் பெருந்தகைக்குமழகோ, கன்
லன்றுறைக்கின்றகணக்குமுண்டோவவன்றன் கணக்க
தும்விடுவேனோ கண்டாயென்றோழி. 31

திருச்சிற்றம்பலம்.

## வியப்புமொழி.

திருச்சிற்றம்பலம்.

மாதர்மணியேமகளேநீ வாய்த்ததவந்தான் யாதறியேன்,
ரனந்தர் மாலனந்தர் மேவிவணங்கக் காண்பரியார், நாதர்
னநாயகனார் நல்லோருளத்துணண்ணுகின்றோர், கோதறி
தியாகர்தமைக் கூடியுடலங்குளிர்ந்தனையே. 32

சேலைநிகர்கண்மகளே நீசெய்ததவந்தான் செப்பரிதான்
லயபனைவானவரை வருத்தம்படிக்கு மதித்தெழுந்த, சே

லவிடத்தை மிடற்றணிந்தார் வீட்டுநெறியா மரசியற்செ
கோலையளித்தாரவர்தம்மைக் கூடியுடலங் குளிர்ந்தனையே. 3

அஞ்சொற்கிளியேமகளேநீ யறியதவமே தாற்றினையே
வெஞ்சொற்புகலார் வஞ்சர்தமை மேவார்பூவார் கொன்றை
னூர், சஞ்சற்கரியார் திருவொற்றிக் காவலுடை யாரின்மொ
யாற், கொஞ்சத்தருவா ரவர்தம்மைக் கூடியுடலங்குளிர்
னையே.

திருச்சிற்றம்பலம்.

அன்புமாலை.

ஆனந்தபைரவி திருச்சிற்றம்பலம்.

அற்புதப்பொன்னம்பலத்தே யாடுகின்றவரசே யார
தேயடியேன்ற னன்பேயென்னறிவே, சற்புதவுபெருங்கரு
க்கடலேயென்கண்ணே கண்ணுதலேபாநந்தக் களிப்பேயெ
க்கதியே, வெற்புதவுபசுங்கொடியை மருவுபெருந்தருவே
சவாகமமுடியின் விளக்குமொளிவிளக்கே, பொற்புறவேயி
வுலகிற் பொருந்துசித்தனேனேன் பொருத்தமுநின்றிருவரு
ண்பொருத்தமதுதானே.

நிறையணிந்த சிவகாமிநேயநிறையொளியே நித்தபரி
ணமாஞ் சுத்தசிவவெளியே, கறையணிந்தகளத்தரசே கண்
டையகரும்பே கற்கண்டேகனியேயென் கண்ணேகண்மணி
யே, பிறையணிந்தமுடிமலையே பெருங்கருணைக்கடலே பெ
யவரெல்லாம்வணங்கும் பெரியபரம்பொருளே, குறையண
து திரிகின்றேன் குறைகளெலாந்தவிர்த்தே குற்றமெலாங்
ணமாகக்கொள்வது நின்குணமே.

ஆண்பனைபெண்பனையாக்கி யங்கமதங்கையா யாக்கிய
ண்மணத்திலொளி யனைவரயுமாக்கு, மாண்பனைமிச்சு வ
ளித்தமாகருணை மலையேவருத்தமெலாந் தவிர்த்தெனக்கு
ழ்வளித்தவாழ்வே, நாண்பனையுந்தையுமென் னற்குருவு
கி நாயடியேனுள்ளகத்து நண்ணியநாயகனே, வீண்பனைபோ
மிகநீண்டு விழற்கிறைப்பேனெனினும் விருப்பமெலாநின்
ளின் விருப்பமன்றியிலையே.

கண்ணோங்குநுதற்கரும்பே கரும்பினிறையமுதே கற்கண்
சர்க்கரையே கதலிநறுங் கனியே, விண்ணோங்கு வியன்சுட
வியன்சுடர்க்குட்சுடரே விடையவனே சடையவனே வேத
ப்பொருளே, பெண்ணோங்குமொருபாகம் பிறங்குபெருந்
கயே பெருமானே யொருகரங்கொள் பெரியபெருமானே,
ண்ணோங்கு சிறியவனேனென்னினுநின் னடியே னென்னை
த்துணியே னின்னின்னருடந்தருளே. 38

குன்றாத குணக்குன்றே கோவாதமணியே குருவே யென்
முழுதாட் கொண்டசிவக்கொழுந்தே, யென்றுதை யாகி
னக் கன்னையுமாய் நின்றே யெழுமையுமென் றனையாண்ட
ன்னுயிரின் றுணையே,பொன்றாத பொருளேமெய்ப் புண்ணி
தின் பயனே பொய்யடியேன் பிழைகளெலாம் பொறுத்தபெ
தகையே, யன்றால நிழலமர்ந்த வருளிறையே யெளியே ஞ
டெலா நின்னடிமே லன்றியொன்று மிலையே. 39

அந்தோவீ ததிசயமீ ததிசயமென்புகல்வே னறிவறியாச்
யேனை யறிவறியச்செய்தே, யிந்தோங்கு சடைமணிநின் ன
டியுங்காட்டி [illegible]துகாட்டியென்னிலையுங் காட்டி
ந்தோட சித்தர்கடந் தனிச்சூதுங் காட்டிச் சாகாதநிலைகாட்
சகசநிலை காட்டி, வந்தோடு நிகர்மனம்போய்க் கரைந்த வி
காட்டி மகிழ்வித்தாய் நின்னருளின் வண்மையெவர்க்கு
த. 40

திருச்சிற்றம்பலம்.

## தெய்வமணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

திருவோங்கு புண்ணியச் செயலோங்கி யன்பருட் டிற
ாங்கு செல்வமோங்கச், செறிவோங்க வறிவோங்கி நிறை
ன வின்பந் திகழ்ந்தோங்கு வருள்கொடுத்து, மருவோங்கு
ங்கமல மலரோங்கு வணமோங்க வளர்கருணைமயமோங்கி
ார், வரமோங்கு தெள்ளமுத வயமோங்கி யானந்தவடிவா
யோங்கி ஞான,உரு வோங்குமுணர்விநிறை யொளியோ
யோங்குமயி லூர்ந்தோங்கி யெவ்வுயிர்க்கும், உறவோங்கு

நின்பதமே னுளமோங்கி வளமோங்க வுய்கின்ற நாளெந்த
ள், தருவோங்கு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
மோங்கு கந்தவேளே, தண்முகத் துய்யமணி யுண்முகச்
வமணி சண்முகத் தெய்வமணியே.

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற நிலனுண்
பலனுமுண்டு, நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்
நெறியுண்டு நிலையுமுண்டு, ஊருண்டு பேருண்டு மணியுண்
ணியுண்டு வுடையுண்டு கொடையுமுண்டு, உண்டுண்டு மகி
வே வுணவுண்டு சாந்தமுறு முளமுண்டு வளமுமுண்டு,
ருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள செல்வங்கள் யாவு
ண்டு, தேனுண்டுவண்டுறு கடம்பணியு நின்பதத் தியான
ண் டாயிலரசே, தாருண்ட சென்னையிற் கந்தகோட் டத்
ள் வளர் தலமோங்கு கந்தவேளே, தண்முகத் துய்யமணி
ண்முகச் சைவமணி சண்முகத் தெய்வமணியே. 4

திருச்சிற்றம்பலம்.

## அத்துவிதானந்தத்தநுபவவிடையீடு.

திருச்சிற்றம்பலம் [illegible]

களக்கமறப் பொதுநடநான் கண்டுகொண்ட தருணங்
டைச்சிறியே னுளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான், விளக்
முறப் பழுத்திடுமோ வெம்பியுதிர்ந் திடுமோ வெம்பாது பழு
தினுமென் கரத்திலகப்படுமோ, கொளக்கருது மலமாயைக்
ரங்குகவர்ந்திடுமோ குரங்குகவ ராதெனது குறிப்பிலகப் பட
னும், துளக்கமற வுண்ணுவனோ தொண்டைவிளக் கிக்கொ
மோ சோதிதிரு வுளமெதுவோ வேதுமறிந் திலனே. 4

ஞானமணிப் பொதுநடஞ்செய் திருவடிகண் டிடவே
டக்கின்றே னந்தோமுன் னடந்தவழி யறியேன், ஈனமிகு
மாணவமாம் பாவியெதிர்ப் படுமோ வுடைமையெலாம் பறி
திடுமோ நடைமெலிந்து போமோ, ஈனமுறு மகங்காரப் புலி
குறுக்கே வருமோ விச்சையெனு மிராக்கதப்பே யெனைப்பிடி
த்துக் கொளுமோ, ஆன்மலத் தடைநீக்க வருட்டுணைதா னு
மோ ஐயர்திரு வுளமெதுவோ யாதுமறிந் திலனே. 4

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்தமேலீடு.

இராகம் - சஹானு - அடதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

தூதுசங்கே யூதூதுசங்கே யூதூதுசங்கே யூதூதுசங்கே.

கைவிடமாட்டானென்றூதூதுசங்கே
　கனகசபையானென்றூதூதுசங்கே
பொய்விடச்செய்தானென்றூதூதுசங்கே
　பூஷைபலித்ததென்றூதூதுசங்கே. 45

பொன்னடிதந்தானென்றூதூதுசங்கே
　பொன்னம்பலத்தானென்றூதூதுசங்கே
யின்னலறுத்தானென்றூதூதுசங்கே
　யென்னுள்ளமர்ந்தானென்றூதூதுசங்கே. 46

தூக்கந்தொலைத்தானென்றூதூதுசங்கே
　துன்பந்தவிர்த்தானென்றூதூதுசங்கே
யேக்கங்கெடுத்தானென்றூதூதுசங்கே
　யேமசபையானென்றூதூதுசங்கே. 47

திருச்சிற்றம்பலம்.

## முறையீடு.

திருச்சிற்றம்பலம்.

உருவாயருவாயொளியாய் வெளியாயுலவா வொருபேரு
மமுதந், தருவாயிதுவேதருணந்தருணந் தரியேன் சிறிதுந்த
யனினிநீ, வருவாயலையேலுயிர்வாழ்கலனுன் மதிசேர்முடி
ம்பதியேயடியேன், குருவாய்முனமேமனமே யிடமாக் குடி
ாண்டவனே யபயமபயம். 48

என்னேசெய்வேன்செய்வகை யொன்றிங் கிதுவென்றரு
ா யிதுவேதருணம், மன்னேயயனுந்திருமாலவனு மதித்த
ரிய பெரியபொருளே, அன்னேயப்பாவையாவரசே யன்பே
வேயமுதேயழியாப், பொன்னேமணியே பொருளேயரு
பொதுவாழ்புனிதாவபயமபயம். 49

கருணாநிதியேயபயமபயம் கனகாகரனேயபயமபயம், ருணுடகனேயபயம்பய மழகாவமலாவபயமபயம், தருண னேயபயமபயந் தனிநாயகனே யபயமபயம், தெருணுடுறுவ பயமபயந் திருவம்பலவாவபயமபயம்.

மருளுந்துயருந்தவிரும்படி யென் மனமன்றிடைநீவரு யபயம், இருளும்பவமும்பெறுவஞ்சகநெஞ் சினனென்றிக லபயமபயம், வெருளுங் கொடுவெம்புலையுங் கொலையும் விடு றருள்வா யபயமபயம், அருளும்பொருளுந் தெருளுந்தருவா பயமபயமபயமபயம்.

திருச்சிற்றம்பலம்.

பிரியேனென்றல்.

திருச்சிற்றம்பலம்.

அப்பாநான்பற்பலகாலறைவதென்னேயடியே னச்சமெ ந் துன்பமெலா மறுத்துவிரைந்துவந்தே, யிப்பாரிலிதுதரு மென்னையடைந்தருளியெண்ணமெலாமுடித்தென்னையேன் கொளாவெனிலோ, தப்பாமலுயிர்விடுவேன் சத்தியஞ்சத்தி நின் ருளிணைகளறிகவிது தயவுடையோயெவர்க்குந், துப்பா த்துணையாகித்துலங்கியமெய்த்துணையே சுத்தசிவானந்தவரு சோதிநடத்தரசே.

ஆணையுன்மேலாணையுன்மே லாணையுன்மேலையா அ க்கணமுநினைப்பிரிந்தே யினித்தரிக்கமாட்டேன், கோணைநி த்தவர்பேசக் கேட்டதுபோலின்னுங் குறும்புமொழிசெவிக றக்கொண்டிடவுமாட்டேன், ஊணையுறக்கத்தையுநான் விடு ன்றேனீதா னுவந்துவராயெனிலென்ற னுயிரையும்விட்டி வேன், மாணைமணிப்பொதுநடஞ்செய் வள்ளால்நீயெனது னமறிவாயினமுனக்கு வகுத்துரைப்பதென்னே. 5

படமுடியாதினித்துயரம்படமுடியாதரசே பட்டதெல்ல ம்போதுமிந்தப்பயந்தீர்த்திப்பொழுதென், னுடலுயிராதியவெ ல்லாம்நீயெடுத்துக் கொண்டுன் னுடலுயிராதியவெல்லா முவ தெனக்கேயளிப்பாய், வடலுறுசிற்றம்பலத்தே வாழ்வாயென் ண்ணுண் மணியேயென்குருமணியே மாணிக்கமணியே, நட சிகாமணியேயென் னவமணியேஞான நன்மணியேபொன்ம ணியே நடராஜமணியே. 5

வாழையடிவாழையென வந்ததிருக்கூட்ட மரபினில்யா
நவனன்றோ வகையறியேனிந்த, வேழைபடும்பாடுனக்குத்
திருவுளச்சம்மதமோ விதுதகுமோவிதுமுறையோவிதுதருமந்
தானோ, மாழைமணிப்பொதுநடஞ்செய் வள்ளால்யானுனக்கு
மகனலனோநீயெனக்கு வாய்த்ததந்தையலையோ, கோழையுல
கியற்றுயர மினிப்பொறுக்கமாட்டேன் கொடுத்தருணின்ன
ருளொளியைக் கொடுத்தருளிப்பொழுதே. 45

திருச்சிற்றம்பலம்.

## காட்சிக்கண்ணி.

இராகம் - எதுகுலகாம்போதி - அடதாளம்.

திருச்சிற்றம்பலம்.

### பல்லவி.

ஆணிப்பொன்னம்பலத்தேகண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி - அம்மா-அற்புதக்காட்சியடி.

### சரணங்கள்.

சோதிமலையொன்றுதோன்றிற்றதிலொரு
வீதியுண்டாச்சுதடி - அம்மா
வீதியுண்டாச்சுதடி. ஆணி. 46

வீதியிற்சென்றேனவ்வீதிநடுவொரு
மேடையிருந்ததடி - அம்மா
மேடையிருந்ததடி. ஆணி. 47

மேடைமேலேறினேன்மேடைமேலங்கொரு
கூடமிருந்ததடி - அம்மா
கூடமிருந்ததடி. ஆணி. 48

கூடத்தைநாடவக்கூடமேலேழ்நிலை
மாடமிருந்ததடி - அம்மா
மாடமிருந்ததடி. ஆணி. 49

எழ்நிலைக்குள்ளுமிருந்தவதிசயம்
என்னென்றுசொல்வனடி - அம்மா
என்னென்றுசொல்வனடி. ஆணி. 50

ஓர்நிலைதன்னிலொளிர்முத்துவெண்மணி

சீர்நீலமாச்சுதடி - அம்மா
சீர்நீலமாச்சுதடி. ஆணி. 5[illegible]

பாரோர்நிலையிற்கருநீலஞ்செய்ய
பவளமதாச்சுதடி - அம்மா
பவளமதாச்சுதடி. ஆணி. 5[illegible]

மற்றோர்நிலையில்மரகதப்பச்சைசெம்
மாணிக்கமாச்சுதடி - அம்மா
மாணிக்கமாச்சுதடி. ஆணி. 5[illegible]

பின்னோர்நிலையிற்பெருமுத்துவச்சிரப்
பேர்மணியாச்சுதடி - அம்மா
பேர்மணியாச்சுதடி. ஆணி. 5[illegible]

வேறோர்நிலையில்மிகும்பவளத்திரள்
வெண்மணியாச்சுதடி - அம்மா
வெண்மணியாச்சுதடி. ஆணி. 5[illegible]

புகலோர்நிலையிற்பொருந்தியபன்மணி
பொன்மணியாச்சுதடி - அம்மா
பொன்மணியாச்சுதடி. ஆணி. 56

பதியோர்நிலையிற்பகர்மணியெல்லாம்
படிகமதாச்சுதடி - அம்மா
படிகமதாச்சுதடி. ஆணி. 57

எழ்நிலைமேலேயிருந்ததோர்தம்ப
மிசைந்தபொற்றம்பமடி - அம்மா
மிசைந்தபொற்றம்பமடி. ஆணி. 58

பொற்றம்பங்கண்டேறும்போதுநான்கண்ட
புதுமையென்சொல்வனடி - அம்மா
புதுமையென்சொல்வனடி. ஆணி. 59

ஏறும்போதங்கேயெதிர்ந்தவகைசொல்ல
வென்னளவல்லவடி - அம்மா
வென்னளவல்லவடி. ஆணி. 60

ஆங்காங்கேசத்திகளாயிரமாயிர
மாகவந்தார்களடி - அம்மா
ஆகவந்தார்களடி. ஆணி. 61

வந்துமயக்கமயங்காமல்நானருள்
வல்லபம்பெற்றேனடி - அம்மா
வல்லபம்பெற்றேனடி. ஆணி. 62
வல்லபத்தாலந்தமாதம்பத்தேறி
மணிமுடிகண்டேனடி - அம்மா
மணிமுடிகண்டேனடி. ஆணி. 63
மணிமுடிமேலோர்கொடுமுடிநின்றது
மற்றதுகண்டேனடி - அம்மா
மற்றதுகண்டேனடி. ஆணி. 64
கொடுமுடிமேலாயிரத்தெட்டுமாற்றுப்பொற்
கோயிலிருந்ததடி - அம்மா
கோயிலிருந்ததடி. ஆணி. 65
கோயிலைக்கண்டங்கேகோபுரவாயிற்
கூசாதுசென்றேனடி - அம்மா
கூசாதுசென்றேனடி. ஆணி. 66
கோபுரவாயிலுட்சத்திகள்சத்தர்கள்
கோடிபல்கோடியடி - அம்மா
கோடிபல்கோடியடி. ஆணி. 67
ஆங்கவர்வண்ணம்வெள்வண்ணஞ்செவ்வண்ண
ஐவண்ணமாகுமடி - அம்மா [முன்
ஐவண்ணமாகுமடி. ஆணி. 68
அங்கவரெல்லாமிங்காரிவரென்னவு
மப்பாலேசென்றேனடி - அம்மா
அப்பாலேசென்றேனடி. ஆணி. 69
அப்பாலேசென்றேனங்கோர்திருவாயிலில்
ஐவரிருந்தாரடி - அம்மா
ஐவரிருந்தாரடி. ஆணி. 70
மற்றவர்நின்றுவழிகாட்டமேலோர்
மணிவாயிலுற்றேனடி - அம்மா
மணிவாயிலுற்றேனடி. ஆணி. 71
எண்ணுமவ்வாயிலிற்பெண்ணேடொருக
இருவரிருந்தாரடி - அம்மா
இருவரிருந்தாரடி. ஆணி. 72

அங்கவர்காட்டவணுக்கத்திருவாயில்
அன்போடுகண்டேனடி - அம்மா
அன்போடுகண்டேனடி. ஆணி. 73

அத்திருவாயிலிலானந்தவல்லியென்
னம்மையிருந்தாளடி - அம்மா
அம்மையிருந்தாளடி. ஆணி. 74

அம்மையைக்கண்டேனவளருள்கொண்டேன்
அமுதமுமுண்டேனடி - அம்மா
அமுதமுமுண்டேனடி. ஆணி. 75

தாங்குமவளருளாலேநடராஜர்
சந்நிதிகண்டேனடி - அம்மா
சந்நிதிகண்டேனடி. ஆணி. 76

சந்நிதியிற்சென்றுநான்பெற்றபேறது
சாமியறிவாரடி - அம்மா
சாமியறிவாரடி. ஆணி. 77

ஆணிப்பொன்னம்பலத்தேகண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி - அம்மா - அற்புதக்காட்சியடி.
திருச்சிற்றம்பலம்.

## சண்முகர்கொம்மி.

திருச்சிற்றம்பலம்.

குறவர்குடிசை நுழைந்தாண்டி - அந்தக்
கோமாட்டியெச்சில் விழைந்தாண்டி
துறவர் வணங்கும் புகழாண்டி - அவன்
தோற்றத்தைப் பாடியடியுங்கடி. 78

மாமயிலேறி வருவாண்டி - அன்பர்
வாழ்த்தவரங்கள் தருவாண்டி
தீமையிலாத புகழாண்டி - அவன்
சீர்த்தியைப் பாடியடியுங்கடி. 79

பன்னிருதோள்களுடையாண்டி - கொடும்
பாவிகள்தன்னை யடையாண்டி
என்னிருகண்களனையாண்டி - அவன்
ஏற்றத்தைப்பாடி யடியுங்கடி. 80

வேங்கைமரமாகி நின்றாண்டி - வந்த
வேடர்தமையெலாம் வென்றாண்டி
தீங்குசெய்சூரனைக் கொன்றாண்டி - அந்த
தீரனைப்பாடி யடியுங்கடி. 81

சீர்திகழ்தோகைமயின்மேலே - இளஞ்
செஞ்சுடர்தோன்றுந் திறம்போலே
கூர்வடிவேல்கொண்டு நம்பெருமான் - வருங்
கோலத்தைப்பாருங்கள் கோதையர்காள். 82

ஆறுமுகங்களிற் புன்சிரிப்பும் - இரண்
டாறுபுயந்திக் ழற்புதமும்
வீறுபரஞ்சுடர் வண்ணமுமோர் - திரு
மேனியும்பாருங்கள் வெள்வளைகாள். 83

ஆனந்தமான வமுதனடி - பர
மானந்தநாட்டுக் கரசனடி
தானந்தமில்லாச் சதுரனடி - சிவ
சண்முகநங்குரு சாமியடி. 84

வேதமுடிசொல்லு நாதனடி - சதுர்
வேதமுடிதிகழ் பாதனடி
நாதவடிவுகொ ணீதனடி - பர
நாதங்கடந்த நலத்தனடி. 85

தத்துவத்துள்ளே யடங்காண்டி - பர
தத்துவமன்றித் துடங்காண்டி
சத்துவஞான வடிவாண்டி - சிவ
சண்முகநாதனைப் பாடுங்கடி. 86

சச்சிதானந்த வுருவாண்டி - பர
தற்பரபோகந் தருவாண்டி
உச்சிதாழன்பர்க் குறவாண்டி - அந்த
உத்தமதேவனைப் பாடுங்கடி. 87

அற்புதமான வழகனடி - துதி
அன்பர்க்கருள்செய் குழகனடி

சிற்பரயோகத் திறத்தனடி - அந்த
சேவகன்கீர்த்தியைப் பாடுங்கடி.

சைவந்தழைக்கத் தழைத்தாண்டி - ஞான
சம்பந்தப்பேர்கொண் டழைத்தாண்டி
பொய்வந்தவுள்ளத்திற் போகாண்டி - அந்த
புண்ணியன்பொன்னடி போற்றுங்கடி.

வாசிநடத்தித் தருவாண்டி - ஒரு
வாசியிலிங்கே வருவாண்டி
ஆசில்கருணை யுருவாண்டி - அவன்
அற்புதத்தாண்மல ரேத்துங்கடி.

இராப்பகலில்லாவிடத்தாண்டி - அன்பர்
இன்பவுளங்கொ ணடத்தாண்டி
அராப்பளியீந்த திடத்தாண்டி - அந்த
அண்ணலைப்பாடி யடியுங்கடி.

ஒன்றிரண்டான வுளவாண்டி - அந்த
ஒன்றிரண்டாகா வளவாண்டி
மின்றிரண்டன்ன வடிவாண்டி - அந்த
மேலவன்சீர்த்தியைப் பாடுங்கடி.

திருச்சிற்றம்பலம்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் துதி.

சீரார் சண்பைக் கவுணியர்தந் தெய்வ மரபிற் றிகழ்விள
கே தெவிட்டா துளத்திற் றித்திக்குந் தேனேயழியாச் செல்
மே, காரார்மிடற்றுப் பவளமலைக் கண்ணின்முளைத்த கற்ப
மே கரும்பேகனியே யென்னிரண்டு கண்ணே கண்ணிற் க
மணியே, யேரார்பருவமூன்றினுமை யினிய முலைப்பா லெடு
ஊட்டு மின்பக்குதலை மொழிக்குருந்தே யென்னுருயிருக் கெ

நணையே, பேரார்ஞான சம்பந்தப் பெருமா னேநின் றிருப்
மைப் பேசுகின்றோர் மேன்மேலும் பெருஞ்செல்வத்திற் பி
ருவரே. 93

## திருநாவுக்கரசு சுவாமிகள்துதி.

திருத்தகுசீ ரதிகையருட் டலத்திலோங்குஞ் சிவக்கொ
ந்தி னருட்பெருமைத் திறத்தால் வாய்மை, யுருத்தகுமெய்
ணர்ச்சிவடி வாகிச்சைவ வொளிவிளங்க நாவரசென் றொரு
ர் பெற்றுப், பொருத்தமுற வுழவாரப் படைகைக் கொண்
புண்ணியனே நண்ணியசீர்ப் புனிதனேயென், கருத்தமர்ந்
கலைமதியே கருணைஞானக் கடலேநின் கழல்கருதக் கருது
யே. 94

## சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

பேரூரும் பரவைமனப் பிணக்கற வெம் பெருமானை
யூரூரும் பலபுகல வோரிரவிற் றூதனெனத்
தேரூருந் திருவாரூர்த் தெருவுதொறு நடப்பித்தா
யாரூரா நின்பெருமை யயன்மாலு மளப்பரிதே. 95

## மாணிக்கவாசக சுவாமிகள்துதி.

நடுகின்ற வானந்தச் சிற்சபையிற் சின்மயமா
டுகின்ற சேவடிக்கீ ழாடுகின்ற வாரமுதே
டுகின்ற வாதவூர் நாயகனே நாயடியேன்
டுகின்ற வாட்டமெலாம்வந்தொருக்கான் மாற்றுதியே, 96

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# மங்களம்.

புங்கவர் புகழுமா தங்கமு கந்திக
ழெங்கள் கணேசராந் துங்கற்கு மங்களம்

போதந்திகழ்பர - நாதத்தனிநிறை
நீதராஞ்சண்முக நாதற்கு மங்களம்

பூசைசெய்வாருள மாசைசெய்வார்தில்லை
யீசரெமது நடராசற்கு மங்களம்

பூமிபுகழ்குரு சாமிதனையீன்ற
வாமியெனுஞ்சிவ காமிக்கு மங்களம்

புங்கமிகுஞ்செல்வந் துங்கமுறத்தரும்
செங்கமலத்திரு மங்கைக்கு மங்களம்

பூணிலங்குந்தன வாணிபரம்பர
வாணிகலைஞர்கொள் வாணிக்கு மங்களம்

புண்ணியராகிய கண்ணியராய்த்தவம்
பண்ணியபத்தர்க்கு முத்தர்க்கு யங்களம்

திருச்சிற்றம்பலம்.

உ

முருகன்றுணை.

குருபாததாசர் அவர்களால் செய்தருளிய

# திருப்புல்வயல்

# குமரேசசதகம்.



அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் அண்டுசன்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

நெ. 24. தாண்டவராயபிள்ளைவீதி

சென்னை.

1909.

இதன் விலை அணா-2.

உ

முருகன்றுணை.

---

குருபாததாசர் அவர்களால் செய்தருளிய

திருப்புல்வயல்

# குமரேசசதகம்.

திருத்தமான பதிப்பு.

இரங்கசாமிமுதலியார் அண்டுசன்ஸ்

அவர்களாற் றமது

பூமகள்விலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

நெ. 24. தாண்டவராயப்பிள்ளைவீதி

சென்னை.

---

1908.

உ

சிவமயம்.

# குமரேச சதகம்.

---

## காப்பு.

மேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தம்மேல்
தமே விபசதகஞ் செப்பவே-கோமேவிக்
ரக்குஞ் சரவணந்தான் கம்பகும்பத் தைந்துகரக்
ரக்குஞ் சரவணந்தான் காப்பு.

---

## அவையடக்கம்.

ரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவு
மனைக்குநிக ரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
மருவுமின் மினிபோ லவும்
ருகரு ணல்லோர்மு னைபித்தர் பலமொழி
பகர்ந்திடுஞ் செயல் போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
பாரிலா டுதல் போலவும்
ரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
போதுவாய்க் கால் போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்த வைத்தது போலவும்
ரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகும ரேசர்மேற் சதகம் புகன்றனன்
மனம்பொறுத் தருள் புரிவையே.

## நூல்.

### குமரேசர் மகிமை

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
பொய்கைதனில் விளையாடியும்
புனிதர்க்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
போதனைச் சிறையில் வைத்துத்
தேமிக்க வரியரப் பிரமாதி கட்குஞ்
செயிக்குமுடி யாவசுரனைத்
தேகங் கிழித்துவடி வேலினு லிருகூறு
செய்தமரர் சிறைதவிர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனி
னினைக்குமுன் வந்து தவியும்
நிதமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலுனை
நிகரான தெய்வ முண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (க)

### அந்தணரியல்பு.

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
கூறுசுருதிப் பெருமையுங்
கோதில்லா வாகம புராணத்தின் வளமையுங்
குலவுயா காதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதி வினைகளையு
முனிபோலே தகிப்பார்
முதன்மைபெறு சிலைசெம்பு பிருதிவிகளிற்றெய்வ
மூர்த்தமுண் டாக்குவிப் பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையா
னீண்மழை பொழிந் திடுவதும்

நிலமனு செழிப்பது மரசர்செங் கோல்புரியு
 நிலையுமா தவர்செய் தவமும்
றைபோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
 மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (உ)

அரசரியல்பு.

;டிப்படையி லபிமான மந்திரா லோசனை
 குறிப்பறிதல் சத்ய வசனங்
கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொறை
 கோடாத சதுரு பாயம்
டிவிசா ரணைபொடு ப்ரதானிதள கர்த்தரைப்
 பண்பறிந் தேய மைத்தல்
பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்கு நிகரென்றே
 பரித்தல் குற்றங்கள் களைதல்
வடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை
 சுகுணமொடு கல்வி யறிவு
தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
 துஷ்டநிக் ரக சௌரியம்
படிவுபெறு செங்கோ னடத்திவரு மரசர்க்கு
 வழுவாத முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. (ங)

வணிகரியல்பு.

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
 கூடிவர நய முரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம்வா ராதபடி
 குறுகவே செலவு செய்வார்

வண்டப் புரட்டர்தா மறிந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்திடார்
மருவுநா ணயமுளோர் கேட்டனுப் புகினுமவர்
வார்த்தையி லெலாங் கொடுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கிலணு வாகிலும் விடார்
காசுவீ ணிற்செலவி டாருசித மானதிற்
கன திரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (சு

## வேளாள ரியல்பு.

நல்லதே வாலயப் பூசனை நடப்பது
நாடோறு மழை பொழிவதும்
நாடிய தபோதனர்கண் மாதவம் புரிவது
நவில்வேத வேதிய ரெலாம்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோ பனங்களுங் கொற்றவர்கள் செங்கோ
றுலங்குமனு நெறி முறைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்
மிக்கவதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூர வலியும்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (௫)

## பிதாக்கள்.

வயதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
    தனைவளர்த் தவனொரு பிதா
தயைபாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
    சார்ந்தசற் குருவொரு பிதா
வமருத் தாள்கின்ற வரசொரு பிதாநல்ல
    வாடத்து வேளை தன்னி
ஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபிதா
    வன்புளமு னோனொருபிதா
வளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
    கலிதவிர்த் தவனொரு பிதா
காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
    கருதுவது நீதி யாகும்
வுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு
    மதலையென வருகுருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
    மலைமேவு குமரேசனே. (௬)

## ஒன்றையொன்று பற்றியிருப்பன.

த்தியந் தவறா திருப்பவ ரிடத்தினிற்
    சார்ந்துதிரு மாதிருக் கும்
சந்ததந் திருமா திருக்கும் விடந்தனிற்
    றனதுபாக் கியமிருக் கும்
மய்ந்துவரு பாக்கிய மிருக்கும் விடந்தனின்
    விண்டுவின் கலையிருக்கும்
விண்டுவின் கலைபூண் டிருக்கும் விடந்தனின்
    மிக்கான தயையிருக் கும்
த்தியுட னினியதயை யுள்ளவ ரிடத்தனிற்
    பகர்தரும மிகவிருக் கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தனிற் சத்துரு
    பலாயனத் திறலிருக் கும்

வைத்திசை யிருந்ததிற லுள்ளவ ரிடத்தில்வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (எ)

இவர்க்கிவர் தெய்வமெனல்.

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வ
மன்பான மாணக் கருக்
கரியகுரு வேதெய்வ மஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம்
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமரபு
காக்குமன் னவர்தெய்வ மாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வ
முயர்சாதி மாந்தர் யார்க்கு
முறவின்முறை யார்தெய்வம் விசுவாசமுள்ளபே
குற்றசிவ பத்தர் தெய்வம் (ர்க்
மாதயையி னுற்சூத் திரர்க்குமறை யோர்தெய்வம்
வானவர்க் குத்தெய்வ நீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (அ)

இவர்க்கிது நினைவெனல்.

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
நல்லறிவு ளோர் தமக்கு
நாடோறுந் தருமத்தி லேநினைவு மன்னவர்க்கு
ராச்சியந் தன்னி னினைவு
ஆன்கா முகருக்கு மாதர்மே லேநினைவு
வஞ்சாத திருடருக் கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
காதாய மீது நினைவு

ணமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனினினைவு கற்ப வர்க்குத்
தருகல்வி மேனினைவு வேசியர்க் கினியபொரு
டருவோர்கண் மீது நினைவு
ணபர னுக்குமரி யாதைமே னினைமெவர்க்கு
யாறுதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கூ)

இவர்க்கிதுவில்லையெனல்

வைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தர்க்கு நன்றி யில்லை
மிடியற்கு விலையாதர் மீதுவங் கணமில்லை
மிலேச்சற்கு கிறைய தில்லை
வைக்கு வெட்கமிலை ஞானியா னவனுக்கு
னகமில்லை மூர்க்கன் றனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோற்
கழகில்லை சித்த சுத்தன்
வைக்கு கவிலங்க சுத்திமிலை யாவுமுணர்
புலவனுக் கயலோர் ரில்லை
புல்லனுக் கென்று முசி தானுசித மில்லைவரு
புலைபர்க் கிரக்க மில்லை
வைத் தவிர்ந்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த வழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கஉ)

இப்படிப்பட்டவ ரிவரெனல்.

பாபநெறி தவறும லுலகபரி பாலனை
நடத்துமவ னேயரச னும்
ராஜயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நடத்துமவ னேமந் திரி

நேமமுடனேதன் சரீரத்தை யென்றுந
நிர்வாகி யேசூரனும்
நிலைபெறு மிலக்கண மிலக்கிய மறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞனும்
ஆயுதாரு வாகடந் தாதுவினி தானமு
மறியுமுதி யோன் வைத்திய
னகமின்றி மெய்புணர்ந் தைம்புல னொழிந்துவிட்
டவனேமெய்ஞ் ஞானியெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கக

விரைந்தடக்கத் தகுவன விவையெனல்.

அக்கினியை வாய்முந்து துர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
யஞ்சா விரோதிகளை யனியாய முடையோரை
யகிர்த்தியப் பெண்களார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளி யைக்கொண்ட வடிமை
களவுசெய் புத்திருடரைக் (பை
கருதிய விசாரத்தை மடக்கமில் பாவிகையைக்
கடிதான கோபந்தனை
மெய்க்கினித லாப்பிணியை யவையுநா சினத்தை
வினைமூண்டிடுஞ் சண்டையை
விஷமேறு கோரத்தை யன்றடக் குவதலான்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கண்ணிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழகனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கஉ

இவர்க்கிது துரும்பெனல்.

நாராள மாகக் கொடுக்குந் தியாகிக
டமக்குநற் பொரு டுரும்பு
தன்னுயிரை யெண்ணாத சூரனுக்கெதிராளி
தனமெலா மொரு துரும்பு
பேரான பெரியருக் கற்பாது கையினிற்
பிரயோசனந் துரும்பு
பெரிதான மோக்ஷசிந் தனையுள்ளவர்க்கெல்லாம்
பெண்போக மொரு துரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிரல்
சேர்வேந்த னொரு துரும்பு
செய்யகலைநாமகள் கடாட்சமுள்ளோர்க்கெலாஞ்
செந்தமிழ்க் கவி துரும்பாம்
வாராரு மணிகொண் முலை வள்ளிதெய் வானைபை
மணம்புணரும் வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே, (கரு)

இதனைவிளக்குவ திதுவெனல்.

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்
பதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதரசு
பரிவிளக் குவது வேகம்
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநல
மிசைவிளக் குவது சுதியூ
ரிடம்விளக் குவதுகுடி யுடல்விளக்குவதுண்டி
யினியசொல் விளக்குவ தருள்
புகல்விளக் குவதுகொடை தவம்விளக் குவதறிவு
பூவிளக் குவது வாசம்
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக் குவதுநகை
புத்திபை விளக்குவது நூல்

மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம்
வாவியை விளக்குவது நீர்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கச)

பிறப்பிட நன்மையால் தன்மைபெறாமை.

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
தீஞ்சொல்புகல் குயிலாகுமோ
திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
செங்கஞ்ச மலராகுமோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகுமோ
வாண்மையா கியகல்ல குடியிற் பிறந்தாலு
மசடர்பெரி யோராவரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக் கிராம மாமோ
தடமேவு கடனீரி லேயுப்பு விளையினுஞ்
சாரசர்க் கரையாகுமோ
மங்காத செந்தமிழ்க் குருமுனிக் குபதேசம்
வைத்தமெய்ஞ் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. (கரு)

பலர்க்கும் பயன்படுவன.

கொண்டல்பொழி மாரியு முதாரசற் குணமுடைய
கோவுமே ருணியி னீருங்
கூட்டமிடு மம்பலத் தருதருவி னீழலுங்
குடியாளர் விவசாயமும்
கண்டவர்க ளெல்லாம் வரும்பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடுந்தணீர்ப் பந்தலுங்
காவேரி போலாற்ற முூம்

டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
வீசுமா ருத சீதமும்
ஷேவங்கியெனு நல்லோ ரிடத்திலுறு செல்வமும்
வெகுசனர்க் குபகார மாம்
டிமிர் கடப்பமலர் மாலைபணி செங்களப
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. கசு

தாமழியினுங் குணமழியாதவை.

கமா னதுதழலி னின்றுருகி மறுகினுந்
தன்னொளி மழுங்கி டாது
ந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமோ
தன்மணங் குன்றி டாது
ங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமோ
பொலிவெண்மை குறை வுறாது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
பொருந்துசுவை போய்வி டாது
ங்கமணி சாணையிற் றேய்ந்து விட்டாலுந்
துலங்குநுண மொளியாது பின்
ருண்மைதரு பெரியோர் மடிந்தாலு மவர்களது
தூயகுறை தவறுகுமோ
களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாசனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. கஎ

நரகில் வீழ்வோர்.

ன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
மறந்தவர் கொலைப் பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
மருவித் திரிந்தபேர்கள்

அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினே
ரரசடக் கியவமைச்ச
ராலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதக
ருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக் குரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினத்தவர்கண்
மூழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோரிவர்க
மாநரகில் வீழ்வ ரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## சரீரசுகம்.

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலம் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னொடுதனது வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றுதயிர் காய்ச்சுபா னீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவளவா னாலும் புசித்தபின்
ருகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவலிவை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்
மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

யார்க்கு மனுபோகம் விடாமை.

பெறு மேருப்ர தக்ஷிணஞ் செய்துமதி
தேகவடு நீங்க விலை
ருமா லுறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை யொழிந்த தில்லை
ர் சமுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு வாகு
ஞியகண் ணகிவரு பரிதியா னவனுக்கி
ராகுவோ கனவி ரோதி
லாப் பெரியோ ரிடத்தினி லடுக்கினு
மமைத்தபடி யன்றி வருமோ
வரவர்க ளனுபோக மனுபவித்திடல்வேண்டு
மல்லால் வெறுப்ப தெவரை
வனு மும்பரனை வரும்விசய சயவென்று
வந்துதொழு தேத்து சரண
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. உ௰

இதுவின்றி இது சிறவாதெனல்.

விலா வித்தைகூ ரறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி யாசை
டிநல மிலாநாடு நீதியில் லாவரசு
குஞ்சரமி லாத வெம்போர்
விலா மெய்த்திறமை பொறையிலா மாதவங்
தியானமில் லாத நிஷ்டை
பமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகரமி லாத சென்னி
விலா மெய்வளமை பசியிலா வுண்டிபுக
லுண்மையில் லாத வசனம்
யாசனையி லாமந்த்ரி தைரிய மிலாவீர
முதவியில் லாத நட்பு

மருவிலா வண்ணமலர் பெரியோ ரிலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறு விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

பகைப்படாதவரிவரெனல்.

அரசர்பகை யுந்தவம் புரிதபோ தனர்பகையு
மரியகரு ணீகர் பகையு
மடுத்துக் கெடுப்போர் கொடும்பகையு முட்ப
மருளிலாக் கொலைஞர் பகையு
விரகுமிகு மூரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்
வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையுமா சான்பகையு
முறவின்முறை யார்கள் பகையு
முற்றதிர வியமுளோர் பகையுமந் திரிபகையு
மொருசிறிது மாகாது காண
வரநதியின் மதலையென வினியசர வண்மிசையி
வருதருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

பேயெனப்படுவோரிவரெனல்.

கடனுதவு பேர்வந்து கேட்கும்வேளையின்முகங்
கடுகடுக் கின்ற பேயும்
கனமருவு பெரியதனம் வந்தவுட னிறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சை விசுவாசித்
தகப்பட் டுழன்ற பேயு
மாசைமனை யாளுக்கு நேசமா யுண்மைமொழி
யானதை யுரைத்த பேயும்

ிலா நல்லோர்கள் பெரியோர் களைச்சற்று
மெண்ணு துரைத்த பேயு
ஷிபரி தானத்தி லாசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்டபேயும்
ானை யிருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்க ளன்றோ
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. உக

## அவ்வவ்வினத்தி லுயர்ந்தவை.

ிவிற் சந்தான நதியினிற் கங்கைவிர
தத்தினிற் சோம வாரந்
கைபெறு திலத்தினிற் காஸ்மீர கண்டந்
தலத்திற் சிதம்பர தலம்
வு ரிஷிகளில் வசிட்டர்பசு விற்காம
தேனுமுனி வரிஞ ரதன்
சல்வ நவமணிகளிற் றிகழ்பதும ராகமணி
தேமலரி லம்போ ருகம்
லவு கற்பினி லருந்ததி கதித்திடு
பெலத்தின்மா ருதம் யானையிற்
பசிலை ராவதந் தமிழினி லகத்தியம்
பிரணவம் மந்திரத் தில்
தியி லேதிருப் பாற்கடல் குவட்டினின்
மகாமேரு வாகு மன்றோ
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே, உ௰

## அவரவர்க்குப் பெலமாவன.

ணர்க் குயர்வேத மேபெலங் கொற்றவர்க்
கரியசௌ ரியமே பெல
ானவணி கர்க்குநிதி யேபெலஞ் சூத்திரர்க்
காயினே ருழவே பெலம்

மந்திரிக் குச்சதுரு பாயமே பெலநீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு பெலமடவியர்க்குநிறை
மானமிகு கற்பே பெலம்
தந்திர மிகுத்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலஞ்
சான்றவர்க் குப்பொறுமை யேபெலம் புலவே
தமக்குநிறை கல்வி பெலமாம்
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## இருந்தும் பயன்படாதவை.

தருணத்தி லுதவிசெய் யாதநட் பாளர்பின்
றந்தெனத ராமலென்ன
தராதர மறிந்துமுறை செய்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கிலென்ன
பெருமையுட னுண்மையில் லாதவொரு பிள்ளை
பெற்றென பெறுமலென்ன
பிரியமா யுள்ளன்பி லாதவர்க ணேசம்
பிடித்தெனவி டுக்கிலென்ன
தெருளாக மானமில் லாதவொரு சீவனஞ்
செய்தெனசெ யாமலென்ன
தேகியென வருபவர்க் கீயாத செல்வஞ்
சிறந்தெனமு றிந்துமென்ன
பருவமுளமை தன்னிலில் லாதகன் னிகைபின்பு
வந்தெனவ ராமலென்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## உபகார மில்லாதவை.

கடனீர் மிகுந்தென்ன வோதிதான் பெருத்தென்ன
  காட்டிலவு மலரி லென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் சுரந்தென்ன
  கானின்மழை பெய்து மென்ன
அடர்கழுதை லத்தி நிலமெல்லாங் குவிந்தென்ன
  வரியகுண மில்லாத பெண்
ணழகா யிருந்தென்ன வாஸ்தான கோழைபல
  வரியநூ லோதி யென்ன
திடமினிய பூதம்வெகு பொன்காத் திருந்தென்ன
  திறமிகுங் காடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
  சித்திரத் துற்று மென்ன
மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
  வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. உஎ

## பதரெனப்படுவோர்.

தன்பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
  சமர்கண் டொளிக்கும் பதர்
தக்கபெரி யோர்புத்தி கேளாத பதர்தோழர்
  தம்மொடு சலிக்கும் பதர்
பின்புகா ணவிடந் தன்னிலே புறணிபல
  பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தையர் படவாழ்ந் திருந்தபதர்
  பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பண மிருக்கவே போயிரக் கின்றபதர்
  பொய்ச்சாட்சி சொல்லும் பதர்
புவியோர் நடத்தையை யிகழ்ந்தபதர் தன்மனைவி
  புணர்நல்வெளி யாக்கும் பதர்

மன்புணரும் வேசையுடன் விபசரிக் கின்றபதர்
மனிதரிற் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௨அ

காணுவிடிற்றுயரப்படுமவை.

இரவிகாணு வனச மாரிகா ணுதபயி
ரிந்து காணுத குமுத
மேந்தல்கா ணுநாடு கரைகள்கா ணுவோட
மின்சொல்கா ணுவி ருந்து
சுரபிகா ணுதகன் றன்னைகா ணுமதலை
சோலைகா ணுத வண்டு
தோழற்கா ணுநேயர் கலைகள்கா ணுதமான்
சோடு காணுத பேடு
குரவர்கா ணுதசபை தியாகிகா ணுவறிஞர்
கொழுநர்கா ணுதபெண்கள்
கொண்டல்கா ணுதமயில் சிறுவர்காணு வாழ்வு
கோடைகா ணுத குயில்கள்
வரவுகா ணுதசெல விவையெலாம் புவிமீதில்
வாழ்வுகா ணு விளமை யாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௨௯

வியாதி மூலங்கள்.

கல்லினுன் மயிரினுன் மீதூண் விரும்பலாற்
கருதிய விசாரத்தினுற்
கடுவழி நடக்கையான் மலசல மடக்கையாற்
கனிபழங் கறியுண்ண லால்
நெல்லினு லுமியினு லுண்டபின் மூழ்கலா
னித்திரைக ளில்லாமை யா
னீர்பகையி னுற்பனிக் காற்றினி லூலவலா
னீடுசெரு கிலையூற லால்

மெல்லிநல் லார்களவி யதிகமுன் விரும்பலால்
வீழ்மலஞ் சிக்குகையி னால்
மிகுசுமை யெடுத்தலா லிளவெயிற் காய்தலால்
மெய்வாட வேலை செயலால்
பல்லிரவி லேதயிர்கள் சருகாதி யுண்ணலால்
வன்பிணிக் கிடமென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௨௰

செத்துஞ் சாகாதவர்.

அனைவர்க்கு முபகார மாம்வாவி கூவமுண்
டாக்கினோர் நீதி மன்ன
ரழியாத தேவாலயங்கட்டி வைத்துளோ
ரகரங்கள் செய்த பெரியோர்
தனையொப்பி லாப்புதல்வனைப்பெற்ற பேர்பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனி னிலைநிற்க வெந்நாளு மாறாத
தருமங்கள் செய்த பேர்கள்
கனவித்தை கொண்டவர்க ளோயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினின்மிகுத்தவொரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்களும்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவ ராகு மன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௨௧

சாகாதிருந்துஞ் செத்தவர்.

மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தி லுண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்

தூறுக ளிக்கைசெய் துய்குவோர் சிவிகைகள்
சுமந்தே பிழைக்கின்ற பேர்
தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையிற்
சோர்வுபட லுற்ற பெரியோர்

வீறுக மனையா டனக்கஞ்சி வந்திடு
விருந்தினை யொழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகார மதுகொண்டு
மிக்கசபை யேறு மசடர்

மாறுக விவரெலா முயிருடன் செத்தசவ
மாகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௯௨

## சிறிதும் பயன்படாதவர்.

பத்ராகி லுங்கன விபூதிவிளை விக்கும்
பழமைபெறு சுவராகி லும்
பலருக்கு மறைவாகு மாடுரிஞ் சிடும்லம்
பன்றிகட் குபயோக மாம்

சுதமிகு கடாவென்னி லுழுதுபுவி காக்கும்வன்
கழுதையும் பொதி சுமக்கும்
கல்லெனிற் றேவர்களு மாலயமு மாம்பெருங்
கான்புற்று மரவ மனையாம்

இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயு
மிழிவுறு குறங்காயி னு
மிக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாறுகா
லேற்றமா ளிகை விளக்கும்

மதமது மிகும்பரமலோபரா லுபகார
மற்றொருவ ருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே, ௯௩

## உலுத்த ரியல்பு.

ரவியங் காக்குமொரு பூதங்கள் போற்பணந்
    தேடிப் புதைத்து வைப்பார்
சீலநல மாகவுங் கட்டார்க ளல்லமுது
    செய்துண் ரறமுஞ் செயார்
ரவலர்செய் தண்டந் தனக்கும் வலுவாகப்
    புகுந்திருட ருக்கு மீவார்
புலவரைக கண்டவுட னோடிப் பதுங்குவார்
    புராணிகர்க் கொன்று முதவார்
ரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
    வெகுபணஞ் செலவாக லால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
    மிகுசெட்டி சொன்ன கதைபோல்
ரவுபார்க் கின்றதே யல்லாது லோபியர்கண்
    மற்றொருவ ருக்கீவ ரோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
    மலைமேவு குமரேசனே. ௯௪

## திருவாழிடங்கள்.

டவா ரணத்திலுங் கங்கா சலத்திலுங்
    கமலாச னந்தன்னி லுங்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவ ரிடத்திலுங்
    காலியின் கூட்டத்தி லும்
டமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
    நல்லோ ரிடந்தன்னி லு
நல்லசுப லக்ஷண மிகுத்தமனை தன்னிலும்
    ரணசுத்த வீரர் பாலும்
வுடர்கே தனத்திலுஞ் சுயவரந் தன்னிலு
    மருந்துளசி வில்வத்தி லு
மலர்தரு கடப்பமலர் தனிலுமிர தத்திலு
    மதிககுண மான ரூப

மடவா ரிடத்திலுங் குடிகொண்டு திருமாது
மாறு திருப்ப ளென்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௩௫

மூதேவி வாழிடங்கள்.

சோரமங் கையர்கணிச முரையார்கள் வாயினிற்
சூதகப் பெண்க ணிழலில்
சூளையிற் சூழ்தலுறு புகையிற் களேபரஞ்
சுடுபுகையி னீசர் நிழலில்

காரிரவி லரசுநிழ லிற்கடா நிழலினொடு
கருதிய விளக்கு நிழலில்
காமுகவ னிஷ்டையில லாதவர் முகத்திற்
கடுஞ்சினத் தோர் சபையினில்

ஈரமில் லாக்களர் நிலத்தினி லிராத்தயிரி
லிழியுமது பானர் பாலில்
லிலைவேல் விளாநிழலி னிதமழுக் கடைமனையி
லேணநா யசகரத் தூள்

வாரிய முறத்தூள் பெருக்குதூண் மூதேவி
மாறு திருப்ப ளென்பார்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௩௬

திருத்தினுந் திருந்தாமை.

கட்டிபெரு விட்டுச் செழுந்தேனை வார்க்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத் தோமம் வளர்க்கினுங்
கதிபெருங் குதிரை யாமோ

குட்டியர வுக்கமு தளித்தே வளர்க்கினுங்
கொடுவிட மலாது தருமோ
குக்கனெடு வாலுக்கு மட்டையைக் கட்டினுங்
கோணமலே நிமிருமோ

டயே குறுணிமை யிட்டாலு நயமிலா
யோனிகண் ணாகி விடுமோ
லவுகன கர்ப்பூர வாடைபல கூட்டினு
முள்ளியின் குணமாறு மோ
டகட் காயிரம் புத்திசொன் னாலுமதின்
மார்க்கமறி யாதை வருமோ
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬எ

## குறிப்பறிதல்.

திற் கடும்பகை முகத்தினா லறியலா
மாகிலப் பூடுக ளெலாம்
மைழயினா லறியலா நல்லார்பொ லார்தமை
மக்களா லறியலா கும்
மருவு சூரரைச் சமரினா லறியலாங்
கற்றவொரு வித்துவா னைக்
ல்விப்ர சங்கத்தி னாலறிய லாங்குணங்
களைநடையி னாலறிய லாம்
தக மடுத்தது பளிங்கினா லறியலாஞ்
சாதிசொல் லாலறிய லாங்
ருநீதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளாலறிய லாம்
சவிக சிதவதன பரிபூர ணானந்த
வாலவடி வானவேலா
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬அ

## குணமாறாமை.

மிலாத் துஷ்டமிரு கங்களையு நயகுணங்
கொண்டிடப் படுத்தி விடலாங்
கொடியபல விடநோய்க ளியாவுமௌ ஷதமது
கொடுத்துத் திருப்பி விடலாம்

உணர்விலாப் பிரமராட் சசமுதற் பேய்களை
யுகந்துகூத் தாட்டி விடலா
முபாயத்தி ஞற்பெரும் பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்க லாமுயிர் பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பெரும்புன லெனச்செய்ய லாம்''
பிணியையு மகற்றலாங் காலதூ துவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிறுத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந்தி ருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

இத்தீக்குணத்தோரிவ்விலங்குபோல்வரெனல்

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
தள்ளிச்செய் வோர் குரங்கு
சபையிற் குறிப்பறிய மாட்டாம னின்றவர்
தாம்பய னிலாத மரமாம்
வீம்பிஞ லெளியவரை யெதிர்பண்ணி நிற்கும
வெறியர்குரை ஞமலி யாவார்
மிகாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை
சோம்பலொடு பெரியோர் சபைக்குட் படுத்திந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுட னடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாம்
மாம்பழந் தனைவேண்டி யன்றாளி வீசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## அற்பர்வாழ்வால் குணம்வேறுபடுதல்.

பர்க்கு வாழ்வுசற் றதிசமா னால்விழிக்
 கியாவரூரு வுந்தோன் றிடா
ண்டிகின் றேநல்ல வார்த்தைக ளுரைத்தாலு
 மவர்செவிக் கேறி டாது
பக்ஷமானபேர் வருகினும் வாருமென
 மொழிபவும் வாய்வ ராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
 முன்காலே யகல வைப்பார்
பன மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
 வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
 விழும்போது தீருமென்பார்
புயந் தனினீப மாலையணி லோலனே
 மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. சக

## இத்தீங்குளோ ரிக்கொள்கை போல்வரெனல்.

ன்னை தந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
 வஷ்டமச் சனிபாகு வா
ஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்
 கிலங்கார கச்சன்ம மாம்
ன்னமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாவடிமை
 சந்திராஷ் டகமென்ன லாம்
தன்பங்கு தாவென்று சபையேறு தம்பியோ
 சார்ந்தசன் மச்சூரியன்
னயமி லாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
 றுமிடத் தில்வியா ழம்
காடொறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்
 ராகுகே துக்க ளெனலாம் [துளோன்

மன்னயனை யன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திர முரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## நல்லினஞ்சேர்பயன்.

சந்தன விருட்சத்தை யண்டிநிற் கின்றபல
தருவுமவ் வாசனை தருந்
தங்கமக மேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமே தரும்.

பந்தமிகு பாலுடன் விளாவிய தணீரெலாம்
பால்போ னிறங் கொடுக்கும்
புடிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங் கொடுக்கும்

அந்தமிகு மாகதக் கல்லைத் தரித்திடி
லடுத்ததும் பசுமை யாகு
மானபெரி யோர்களொடு சகவாச மதுசெயி
லவர்கள்குணம் வருமென்பர் காண்

மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தவரி
மருகமெய்ஞ் ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## வலியோரையு மூழ்விடாமை.

அன்றுமுடி சூடுவ திருக்கரகு ராமன்மு
னருங்கா டுறைந்த தென்ன
வண்டரெல் லாமமிர்த முண்டிடப் பரமனுக்
காலம் லபித்த தென்ன

வென்றிதரு தேவர்சிறை மீட்டநீ ளவில்வே
டச்சிலைச் சேர்ந்த தென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
வெஞ்சிறையி லுற்ற தென்ன

ான்றுமொரு பொய்சொலா மன்னவன் விலைபோன
தென்னகாண் வல்லமையி னு
லெண்ணத்தி னுலொன்றும் வாராது பரமசிவ
னெத்தனைப் படிமுடியு மாம்
ன்றுதனி னடனமிடு கங்காதரன்பெற்ற
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. சஅ

பெரியோர் வாக்யபரிபாலனஞ் செய்தோர்.

ந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
றசரத குமார ராமன்
றமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்க
டருமனுக் கிளைய நால்வர்
க்கையி னுணர்ந்துகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவ னரிச்சந் திரன்
றேகியென் றோர்க்கிலெ னுவாக்ய பாலனஞ்
செய்தவன் றுரு கன்னன்
ந்தைதவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவ
னீள்பெல மிகுத்த வநுமா
னிறையுடன் பக்தாவின் வாக்யபரி பாலன
நிலத்திலு ளாகினி செய்தாள்
ந்தைவழி கோயில்குள முங்குலவு தம்பிமுகன்
மகிழ்தர வுகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. சகூ

முயற்சியின் மிக்கதாமெனல்.

ங்கள மேறுகினும் வாருகோ லொருகாசு
மட்டன்றி யதிக மாமோ
வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி
வண்ணப் பருந்தாகு மோ

கங்கா சலந்தன்னின் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரையாகுமோ
கடலுக்கு ணாழியை யமுக்கிபே மொண்டிடிற்
காணுமோ நாழிதான்
ஐங்காத மோடினுந் தன்வினைக டன்னோடே
யடையாம னீங்கி விடுமோ
வாரிடஞ் சென்றாலும் வெகுதூலைகள் சுற்றினு
மமைத்தபடி யன்றி வருமோ
மங்காத செந்தமிழ்க் கொண்டுநற் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.



இடும்பாலழிவு.

சூரபத் மன்பெலமு மிராவணன் றீரமுந்
துடுக்கான கஞ்சன் வலியுந்
துடியாத விரணியன் வரப்ரசா தங்களுந்
தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோத னதிநாற் றுவராது
பராக்கிரம மது கைடவர்
பாரிப்பு மாபெலித னண்மையுஞ் சோமுகன்
பாங்கிலுறு வல்லமைகளும்
ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுர
ரெண்ணமுந் தக்க னெழிலு
மவர்களது சம்பத்து மின்றவோ வவரவ
ரிடும்பா லழிந்த வன்றோ
மாரனைக் கண்ணா லெரித்தருள் சிவன்றந்த
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## நட்புநிலை.

மதியின் முயலான தநுதேய் வுழித்தேய்ந்து
வளருமப் போது வளரும்
வாவிதனி லாம்பல்கொட் டிகளதனினீர்வற்றின்
வளருமப்போது வளரும்
மருவு புதல்பூடு கோடையிற் றீய்ந்திடும்
பொங்குகா லந் தழைக்கும்
புண்டரிக மிரவியோ மளவிற் குவிந்திடும்
போதுதய மாகின் மலரும்
சமுடலி ளைக்கிலுயிர் கூடவு மிளைக்குமது
தேறிலுயி ருஞ்சிறக் கும்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலு நல்லோர்
சினேகமப் படியாகுமே
ரமணசொ ரூபமத யானைமுக னுக்கிளைய
வாலகுரு பரவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௪௮

## கைப்பலனமவை.

ருவத்தி லேபெற்ற சேயும் புரட்டாசி
பாதிசம் பாநடுகை யும்
பலமினிய வாடிதனி லானைவால் போலவே
பயிர்கொண்டு வருகரும்பும்
ருணையொடு மிக்கநா ணயமுளோர் கையினிற்
கடனிட்டு வைத்த முதலுங்
காலமது நேரிற் றனக்குறுதி யாகமுன்
கற்றுணர்ந் திடு கல்வியும்
விருதரச ரைக்கண்டு பழகிய சினேகமும்
விவேகிகட் குபகார மாம்
வீணல்ல விவையெலாம் கைப்பலன தாகவபி
விர்த்தியாய் வருமென்பர் காண்

மருவுலா விபசீப மாலையுந் தண்டரள
மாலையும் புனைமார்பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௫

சமையத்துக் குதவாதவை.

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினிற்
கட்டிவைத் திடு வித்தையுங்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையிற் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடி வாழ்க்கையு
மேறுமா றுகவே தேசாந் தரம்போ
யிருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமான தொன்றுமாச்
சொல்லுவஞ் சகர் நேசமும்
சுசிபமா யுண்டென் றிருப்பதெல்லாந் தருண
துரிதத்தி லுதவாது காண்
வல்லான கொங்கைமட மாது தெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௰

திரும்பமாட்டாதவை.

ஆடரவின் வாயினி லகப்பட்ட தவளையு
மானைவா யிற் கரும்பு
மரிதான கப்பலிற் பாய்மரக் காற்றினி
லகப்பட்டு மெலி காக்கையும்
நாடறிய வேதாளை வார்த்துக் கொடுத்தது
நமன்கைக்கு ளானவுயிரும்
நலமாக வேபண்ணை கடந்திட்ட வெள்ளமு
நாய்வேட்டை பட்ட முசலும்

…தடியுன் பார்வைக்கு ளானபல வுடைமையுந்
தீவாதை யான மனையுந்
திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளுந்
திரும்பிவா ராவென்பர் காண்
…டபிசை …ன்னக் கொடித்திரள்கொண் சோணாடு
வாழவந் திடுமுதல் வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௯௧

இதினுமிது நன்றென்பவை.

…டுகடுத் தாயிரஞ் செய்குவதி லின்சொலாற்
களிகொண் டழைத்த னன்று
…கனவேள்வி யாயிரஞ் செய்வதிற் பொய்யுரை
கருத்தொடு சொலாமை நன்று
…வெடுவெடுக் கின்றகோ ரவிவேகி யுறவினில்
விவேகியொடு பகைமை நன்று
…உவகுமதிக ளாயிரஞ் செய்வதி
வேளைகண் டுதவ னன்று
…டுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை யென்ன னன்று
…ம்பத் துடன்பிணியின் மெலிகுவதி ஞெயற்ற
தாரித்திரிய னன்று காண்
…டுவினிற் கரிபோல மென்னவந் தருள்செய்த
மான்மருக ஞான முதல்வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௯௨

பலகூடினு மொன்றற்கீடாகாதவை.

…தாரகைக ளொருகோடி வானத்திருக்கினுஞ்
சந்திரற் கீடாகுமோ
…காருவிற் கொடிதொனிகள் பலகூடி னுமொரு
தம்பட்ட வோசை யாமோ

கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு
குஞ்சரக் கன்றாகுமோ
கொட்டிமலர் வாவியிற் பலகூடி னாலுமொரு
கோகனக மலராகுமோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னாலுமொரு
பைம்பொன்மக மேருவாமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்துமிற்
பணொருவ னுக்கு நிகரோ
வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௫௯

அருமையறிதல்.

மணமாலை யருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங்கறியுமோ
மக்களுடை யருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதா னறிவ துண்டோ
கணவருடை யருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவ ளறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென் பதை வருங்
களவான நாயறியுமோ
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடியபூ னையுமறியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்
கொடுமூடர் தாமறிவரோ
மணவாள னீயென்று குறவள்ளி பின்றொடர
வனமூடு தழுவு மழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௰

டுவினிற் கஞ்சமல ருண்டொருவ ரணுகாமல்
வன்முதலை யங்கிருக்கும்
மலையினிற்றேனுண்டு சென்றொருவர்கிட்டாமன்
மருவியதில் வண்டிருக்கும்
நெடுமைதிகழ் தாழைமல ருண்டொருவ ரணுகாம
னீங்கசத முள்ளிருக் கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீரளவு சூழ்ந்திருக் கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினிற் செல்லாது
குரைநாய்க ளங்கிருக் கும்
கொடுக்குந்தி யாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி யுண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ருடு

வேசையரிழிவு.

பூவில்வே சிகள்வீடு சந்தைப் பெரும்பேட்டை
புனைபவர் படுக்கை வீடு
பொன்வாசல் கட்டில்பொது வம்பல முடுத்தது
பொருவில்கூ தாடு சாலை [கில்
மேவலா கியகொங்கை கையாடு திரள்பந்து
விழிமனங் கவர் தூண்டி லாம்
மிக்கமொழி நீர்மே லெழுத்ததிக மோகமொரு
மின்னலிரு தொடைசர்ப்ப மாம்
ஆவலா கியவல்கு லோதண்டம் வாங்குமிட
மதிகபட மாமனது கல்
லமிர்தவா யிதழ்சித்ர சாலையெச் சிற்குழி
யவர்க்காசை வைக்க லாமோ

மாவடிவு கொண்டே யொளித்தவொருசூரனை
 வதைத்தவடி வேலாயுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. ௫௪

கலிகாலக் கொடுமை.

தாய்புத்தி சொன்னான் மறுத்திடுங் காலமுப்பர்
 தந்தையைச் சீறுகாலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
 சற்றுமெண் ணாதகாலம்
பேய்தெய்வ மென்றுப சரித்திடுங்காலம்
 புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
 பெரியர்சொல் கேளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
 சிறியவன் பெருகு காலஞ்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்
 செப்புவோர்க் குதவு காலம் [வசை
வாய்மதம் பேசிவிடு மனியாய காரர்க்கு
 வாய்த்தகலி கால மையா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. ௫௫

அவரவர்க் குரியவை.

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
 காணவைப்போன் பிதாவாங்
கற்றுணர்ந் தேதன து புகழாற் பிதாவைப்ர
 காசஞ்செய் வோன் புத்திரன்
செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
 சிந்தைசெய் பவண்மனைவியாஞ்
சினேகிதன் போலவே யன்புவைத் துண்மை
 செப்புமவ னேசோத ரன்

ால்வள மிகுத்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவ னேகுரவ னுஞ்
சொன்னநெறி தவறுமல் வழிபாடு செய்துவரு
துய்யனே யினிய சீஷன்
விரக மிஞ்சுசுர குஞ்சரி யுடன்குறவர்
வஞ்சியை மணந்த கணவா
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௫௮

## சிறுமையிற் பெருமை.

ற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக் கும்
கெழ்சிப்பி யுடலிற் சனித்தமுத் தாசாது
தேகத்தின் மேலிருக் கும்
ற்றியிடு பூச்சியின் வாயினூல் பட்டென்று
பூசைக்கு நேச மாகும்
கலரிய வண்டெச்சி லானதேன் றேவர்கொள்
புனிதவபி டேக மாகும்
றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாஞ்
ாதியினத்திற் பிறக்கினுங் கற்றோர்கள்
சபையினிற் றலைவ ரன்றோ
றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
வைத்தவெய்ஞ் ஞான முதலே
யிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௫௯

## செயத் தகாதவை.

சரித்துவரு தெய்வமிது வென்றுபொய்ச்
சத்தியஞ் செயில்வி டாது
ன் வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்

ஆனாலு மேலவர்கண் மெத்தவுந் தனதென்
றடாதன செயிற் கெடுதியா
மானைதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்

ஊணா தினிதென்று மீதூண் விரும்பினாற்
றேகபீ டைகளே தருஞ்
செகராசர் தயவென்ன வேலாத காரியஞ்
செய்தான் மனம்பொறார் காண்

வானாடு புகழுமொரு சோணாடு தழைபவிவண்
வந்தவ தரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## நடுவுநிலைமை.

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்று நேச ரென்றும்
வன்பகைஞ ரென்றுமய லோரென்று மிக்கத
வானென்று மேழை யென்றும்

இந்தவகை யைக்குறித் தொருபட்ச பாதமோ
ரெள்ளள வுரைத்தி டாம
லெண்ணமுட னேவிகித புத்தியொடு சாக்ஷி
மேலுண்மை யதுதேர்ந்து

முந்தவிரு தலையுஞ் சமன்செய்த கோல்போன்
மொழிந்திடற் றர்மமது காண்
முனைவீம னுடல்பாதி மிருகந் தனக்கென்று
முன்றருமர் சொன்ன தலவோ

மைந்தனென வன்றுமை முலைப்பால் கொடுத்
வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## பக்ஷபாதகம்.

விவ காரமா வந்தவர் முகம்பார்த்
 துரைப்போர் மலைக்குரங் கா
ழபர்வெள் ளெருக்குடன் முளைத்தூவிடு மவரில் [ல
 முறையுமூர் பாழ்நத்த மாம்
ரணிபி ஙிவர்கள்கிளை செல்வியிலே போலுகுஞ்
 சமானமா வெழுபிறப் புஞ்
சந்ததியி லாதுழல்வ ரவர்முகத் தினின்மூத்த
 தையலே குடியிருப் பாள்
ரமிவ ரென்றுபுவி மங்கையு நடுங்குவள்
 பழித்ததூர் மரண மாவார்
பகர்முடிவி லேரவுர வாதிநர கத்தனு
 பவிப்பரெப் போது மென்பார்
ரமுடனருணகிரி நாதருக் கனுபூதி
 வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே. ௯௨

## ஒன்றிலாமையாற் சிறவாதவை.

காங்கையில் லாதவட்கெத்தனைப் பணியுடைமை
 கூடினும் பெண்மை யில்லை
கூறுமிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
 கூறினும் புலமை யில்லை
ங்கையில் லாதவர்க் கெத்தனை விவேகந்
 தரிக்கினுஞ் சனைதை யில்லை
சட்சுவை பதார்த்தவகை யுற்றாலு நெய்யிலாச்
 சாதமுந் திர்த்தி யில்லை
ங்கய மிலாமலெத் தனைமலர்கள் வாவியிற்
 பார்த்து மேன்மையில்லை
பத்தியில் லாமல்வெகு நியமமா யர்ச்சனைகள்
 பண்ணினும் பூசை யில்லை

மங்கைய ரிலாமனைக் கெத்தனை யருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## அளவுபடாதவை.

வாரியா ழத்தையும் புனலெறியு மலைகளையு
மானிடர்கள் சனனத்தை யும்
மன்னவர்க ணினைவையும் புருஷர்போ கங்களையு[ம்]
வானினுயர் நீளத்தை யும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்ன வரையும்
பருப்பதத் தின்னிறையு மீசுரச் செயலையும்
பனிமாரி பொழி துளியையும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தை யுந்
தெரிவையர்கள் சிந்தையையு மிவ்வளவெனும்படி
தெரிந்தள விடக்கூடு மோ
வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## பிறர்மனை நயத்தல்.

தந்தார மன்றியே பரதார மேனினைவு
தனைவைத்த காமுகர்க் குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமிலை சமரினிற்
றைரியஞ் சற்று மில்லை
அந்தார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
யறிவில்லை மரபு மில்லை
யறமில்லை நிதியில்லை யிரவினிற் றனிவழிக்
கச்சமோ மனதி லில்லை

தாத சனமில்லை யினமில்லை யெவருக்கு
ட்பில்லை கனதை யில்லை
நயமில்லை யிளமைதனில் வலிமையிலை முத்திபெ
ஞானமிலை யென்பர் கண்டாய் (று
தார டரிமள சுகந்தாதி புனையுமணி
மார்புனே யருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௫

## மானம்விடாமை.

னபார மேறிற் பிளந்திடுவ தன்றியே
கற்றூண் வளைந் திடாது
கருதலர்க ளாலுடைந் தாலுமுயி ரளவிலே
கனசூர னமரின் முறியான்
னமோ ரிடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
சீவனள விற்கொ டாது
திரமான பெரியோர் சரீரங்க ளிளைக்கினுஞ்
செப்புமுறை தவறிடார்கள்
னமேலு கவரிமான் வுயிர்போகு மளவுந்தன்
மயிரினென் றுங்கொடாது
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
ன தார வுனதடைக் கலமென்ற கீரற்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௬

## திருவருட்சிறப்பு.

திருமகள் கடாக்ஷமுண் டானு லெவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி யெல்லாம் பெரும்பாதை யாய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்

பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமோ
புகல்பெருக் காறு போலாம்
புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
போலவே நேச மாவார்
பெருமையொடு சாதியி லுயர்ச்சிதரு மனுதினம்
பேரும்ப்ர திஷ்டை யுண்டாம்
பிரியமொடு பகையாளி கூடவுற வாகுவான்
பேச்சினிற் பிழைவ ராது
வருமெனநினைத்தபொருள் கைகூடி வருமதிக
வல்லமைகண் மிகவு முண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௧௭

## நட்புநிலை.

கதிரவ னுதிப்பதெங் கேகமல மெங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தினட் பான தென்ன
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்லிரவு விடிவதெங் கேகோழி யெங்கே
மகிழ்ந்துகூ விடுத லென்ன
நிதிபரச ரெங்கே யிருந்தாலு மவர்களொடு
நேசமொன் றுயிருக்கு
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந்தாலுமவர்
நிறைபக்ஷ மறவார்கள் காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட்டதிப னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௧௮

## காலமறிதல்.

ர்கம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
  களகமுடி யரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையிற்
  காரிய முடித்து விடுவார்
மகமுங் கார்கால மதுகண்டு பயிர்விளைய
  மேன்மேலு மாரி பொழியும்
மிக்கான வறிவுளோர் வருதருண காலத்தின்
  மிடியாள ருக்குதவு வார்
ாகரிக முறுகுயில் வசந்தகா லத்திலே
  நலமென் றுகந்து கூவு
நல்லோர் குறித்ததைப் பதறும லந்தந்த
  நாளையின் முடிப்பர் கண்டாய்
ாகனைய கலைகன மாலைபுல் லெனுமுலக
  வாடிக்கை நிசமல்ல வோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. ௬௯

## இடமறிதல்.

ரையதனி லோடுதேர் நீள்கடலி லோடுமோ
  சலதிமிசை யோடு கப்பல்
தரைமீதி லோடுமோ தண்ணீரி லுறுமுதலை
  தன்முனே கரிநிற்கு மோ
விரைமலர் முடிப்பரமர் வேணியர வினைவெல்ல
  மிகுகருட னலாகு மோ
வேங்கைகளிருக்கின்ற காடுதனி லஞ்சாமல்
  வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை யண்டிவாழ் வோர்தமைத்
  துஷ்டர்பகை யென்ன செய்யும் [த்
துணைகண்டு சேரிட மறிந்துசே ரென்றௌவை
  சொன்னகதை பொய்யல்லவே

வரையூது மாயனை யடுத்தலாற் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. எ[illegible]

யாக்கை நிலையாமை.

மனுகன்மாந் தாதாமு னவர்க ளெல்லாரு
மண்மே லிருந்து வாழ்ந்து
மடியா திருந்தபே ரில்லையவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பணியதனை நம்பியே யேர்பூட்டு கதையெனப்
பாழான வுடலை நம்பிப்
பாரமீதி லின்னம்வெகு நாளிருப் போமென்று
பலகோடி நினைவை யெண்ணி
அனிதமாய் விருதாவின் மாய்வதே யல்லாம
லன்பாக நின் பதத்தை
யர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணு
ளாசைவலை யிற்சுழலு வர் [ர்க
வனிதைபர்கள் காம விகாரமே பகையாகு
மற்றுமொரு பகைமை யுண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. எக

வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகர்* தன்னிலே மருகன்வந்திடுமளவின்
மென்மேலு முபசரித்து
விருந்துகல் சமைத்துநெய் பாறயிர் பதார்த்த வ
வேண்டுவவெலாமமைப் பார் [கை
ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகுவிப் பா
ரோயாது தின்னமீவ பாக்கிலை கொடுத்திடுவ
ருற்றநா ளுலாகிலோ

* வேட்டகம்-மாமியார்வீடு.

ட்டமொரு படியிறங் குவதுபோன் மரியாதை
  நாளுக்கு நாள்குறைவுறும்
ணைசெய்வர் மைத்துனர்க ளலுவல்பார்போவெ
  னாணுமன் மாமிசொல்வான் [ன்று
ட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பளவன்
  மட்டியினு மட்டி யன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. எஉ

## செல்வநிலையாமை.

மிடு மிடமது மணற்சுடுஞ் சுடுமிடமு
  மோடமிக வேகடக்கு
மூற்றதோ ராற்றின்மடு மேடாகு மேடெலா
  முறுபுனல்கொண் மடுவாயிடும்
டுகா டாகுமுயர் காடுநா டாகிவிடு
  நவில்சகடு மேல்கீழ தாய்
டையூறு சந்தைபல கூடுமுட னேகலைபு
  நன்னிலவு மிருளாய் விடும்
பகல் போயபின் பிரவாகு மிரவுபோய்
  நிறைபகற் போதாய் விடும
டியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவ
  நிசமல்ல வாழ்வு கண்டாய்
டுமனை பாரிசன மக்கணிதி பூஷணமு
  மருவுகன லாகுமன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
  மலைமேவு குமரேசனே. எ௩

## பிறந்தார் பெறுபேறு.

மொன் றெடுத்ததாற் புவிக்குநல் லவனென்று
  தன்போ விளங்க வேண்டுஞ்
சகிருடனி தல்லாது மெய்ஞ்ஞானி யென்றவ
  தரிக்கவே வேண்டு மல்லால்

திடமினிய ரணசூர வீரனிவ னென்னவே
திசைமெச்ச வேண்டு மல்லால்
இசையென வருபவர்க் கில்லையென் றுமலே
செய்யவே வேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
னாகவே வேண்டு மல்லா
லறிவான துரைமக்க ளாகவர வேண்டுமிவ
ரதிகபூ பாலரைப்பா
வடகுவடு கிடெனவெழு கடலு மலையெறிப
மணியுரகன் முடிகணெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௭௪

## வேசை சிந்தை.

தேடித்தம் வீட்டிற் பணக்காரர் வந்திடிற்
றேகசீ வன்போலவே
சினேகித் துவும்மையொரு பொழுது காணாவிடி
செல்லுறா தன்ன மென்றே
கூடிச் சுகிப்பரென் றாசையுண் மேலென்று
கூசாம லாணையிடுவார்
கொங்கையை யெடிக்கப் பிடிக்கக் கொடுத்திச
கொடுப்பர்சும் பணமுசப்ப
வேடிக்கை பேசிமேபைைமுதல் பறித்தபின்
வேறுபட சிந்தைசெய்து
விட்டுவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாயிந்த வண்டப் பரத்தையர்
மயக்கத்தை நம்ப லாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௭

### இதற்கிது உறுதியெனல்.

கக்குறுதி வேல்விழி மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருளடக்கம்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடிற் சத்ய வசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதியூண்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீரரும் பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குறுதி வேழஞ்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகண கர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்களாம்
கைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந்தலைவனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௭௬

### வறுமையிற் சிறுமை.

வறுமைதான் வந்திடிற் றாய்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மில்லை
செய்ய சபைதன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணினாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் இருந்துவரி
லுயிருடன் செத்த பிணமா
முலகம்பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னால்

மறுவசன முஞ்சொலார் றன்பினிற் றுன்பமித்து
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. எஎ

## தீச்சார்பா னன்மையிழப்பு.

ஆனை தண்ணீரினிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி யுலவு
மாயிரம் பேர்கூடி வீடுகட் டிடிலேத
மறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போசனஞ் செயுமளவி
லீக்கிடந் திசைகேட தா
மின்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோ னதுதடுக் கும்
சேனைமன் னவரென்ன கருமமிப மிக்கினுஞ்
சிறியோர்க ளாற்குறை படுஞ்
சிங்கத்தை யும்பெரிய ரிஷபத்தை யும்பகைமை
செய்ததொரு நரியல்ல வோ
மானையுந்திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே யருளாள னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. எஅ

## இடையூறுற்றும் பயன்படுமவை.

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலு மூற்றுநீ
ரமுதபா னங்கொடுக் கு
மாதவனை* யொருபாதி கட்செவி ! மறைத்தாலு
மப்போது முதவிசெய் வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினுங்
குவலயத் திருள் சிதைக்குங்
கொல்லைதான் சாவிபோய் விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேச்சலுண்டு

* ஆதவன் சூரியன். ! கட்செவி-பாம்பு.

றுட னுதாரிதான் மிடியான போதினிலுன்றன
மிகநாடி வருபவர்க்கு
வேறுவகை யில்லையென் றுரையாதி ய
வியந்துள மகிழ்ந் துதவுவான்
றுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. எ௯

இன்னவர்க்கிது வில்லையெனல்.

ர்பிலா தவருக்கு கிலையேது முதலிலா
தவருக் கிலாப மேது
தயையிலா தவர்தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசை யுறவு
ரிலா தவர்தமக் கரசேது பசிவேளை
யுண்டிடார்க் குறுதி யிலையே
துன்மையில் லாதவர்க் கறமேது முயல்விலார்க்
குறுவதொரு செல்வ மேது
ார்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை யேது
துர்க்குண மி லாதவர்க் கெதிராளி யேதிடர்செப்
துஷ்டர்க் கிரக்க மேது
ர்புருவ வாவிமே லஸ்திரம் விடுத்தநெடு
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. அ௦

இதினுமிது நன்றெனல்.

ஞ்சரித் * தருமையறி யார்பொருளை யெய்தலிற்
பலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக வுபகார மில்லா விருந்தினிற்
பட்டினி யிருக்கை நன்று

* பஞ்சரித்து-உபசாரமாய்ப்பேசி.

தஞ்சமொரு முயலையடு வென்றிதனில் யானையோ
 சமர்செய்து தோற்ற நன்று
சரசகுண மில்லாத பெண்களைச் சேர்தலிற்
 சன்னியா சித்த னன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனி
 லரவினொடு பழகுவது நன்
றந்தணர்க் காபத்தி லுதவா திருப்பதனி
 லாருயிர் விடுத்த னன்று
வஞ்சக ருடன்கூடி வாழ்தலிற் றனியே
 வருந்திடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே.

நிலையாதவை.

சொற்றவர்கள் ராணுவமு மாறுகே ராகிய
 குளங்களும் வேசை யுறவுங்
குணமிலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
 குலவுநீர் விளையாட லும்
பற்றலார் தமதிடை வருந்தூ விசுவாசமும்
 பழையதா யாதி கிணறும் *
பரதார மாதரது போகமும் பெருகிவரு
 பாங்கான வாற்று வரவும்
மற்றுமொரு தூர்ப்புத்தி கேட்கின்ற பேருறவு
 நல்லமத யானை நட்பும்
நாவினல் லுறவுமொரு நாள்போ லிராதிவகை
 னம்பப் படாது கண்டாய்
மற்றுமொரு துணையில்லை நீதுணையெ னப்பரவும்
 வானவர்கள் சிறைமீட்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே.

* கிணறு-உக்ருகம்.

## நற்புலவர் தீப்புலவர்செயல்.

ங்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்க ளெக்கனி யிருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும்
ங்காலும் வரிவண்டு பங்கே ருகத்தினி
லிருக்கின்ற தேனை நாடு
மெத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்
டினங்துர் மலத்தை நாடும்
க்கோர் பொருட்சுவை நயங்களெங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கணர் குற்றமெங் கேயென்று
தமிழிலா ராய்வர் கண்டாய்
மக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. அரு

## தாழ்தற் பெருமை.

வங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்
மேடம தகன்றிடலும் யானைக ளொடுங்குதலும்
வெள்விடைக டுள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
முனிவர்க ளயர்ந்து கொளலும்
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்களடங்கு
முதலினர் பயந் திடுதலும் [தலு

ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர் குழல் சூடி படலு
மம்புலிபி லைவகாரி யங்களுக் கல்லாம
லதற விளைட்பு வருமோ

மாங்கனிக் காவரனை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## தெய்வச் செயல்.

சோடாய் மரத்திற் புறாரண் டிருந்திடத்
துறவு கண்டே வேடுவன்
றோலாமலவையெய்ய வேண்டுமென் றொருகணை
தொடுத்துவில் வாங்கிநிற்க
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவுரா சாளி கூட
வுயரம் பறந்துகொண் டேதிரிய வப்போ
துதைத்தசிலை வேடனடியில்
சேடாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலையிற் றொடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புறா வாழ்ந்த வன்றோ
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

## பாட லியல்பு.

எழுத்தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டு மப்பா
வீறாரம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமையவேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல் வேண்டுமு
னலங்கார முற்ற துறையில்

பழுத்துள மூவந்தோசை யுற்றுறால் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச்சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளனரு
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௮௬

விபூதிதரிக்கு முறைமை.

பத்தியொடு சிவசிவா வென்றுதிரு நீற்றைப்
பரிந்து கையா லெடுத்துப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீதி லொழுக
நித்தமு விரல்களா னெற்றியி னழுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகமரி சுத்தமா
நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வாராதுபர கதியுதவு மிவரையே
சத்தியஞ் சிவனென்னலாம்
மத்தினிய மேருவென வைத்தமு தினைக்கடையு
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௮௭

விபூதிவாங்குமுறைமை.

பரி*தனி லிருந்துமியல் சிவிகையி லிருந்துமுயர்
பலகையி லிருந்து மிகவே
டாங்கான வம்பலந் தனிலே யிருந்தும்
பருத்ததின் ணையிலிருந் தும்

* பரி-குதிரை.

தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
திருநீறு வாங்கி யிடினுஞ்
செங்கையொன் றாலும்விரன் மூன்றாலும்வாங்கி
திகழ்தம் பலத்தி னோடும் [னுந்

அரியதொரு பாதையி னடக்கின்ற போதினி
லசுத்தநில மான வதிலு
மங்கே தரிக்கிலுந் தந்திடிற் றள்ளினு
மவர்க்குநர கென்பர் கண்டாய்

வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சகநாதனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. அஅ

இவ்வுறுப்பாற் பயனில்லெனல்.

தேவால யஞ்சுற்றி டாதகா லென்னகால்
தெரிசியாக் கண்ணென்ன கண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதா னென்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணமவை கேளாமல்
விட்டசெவி யென்னசெவிகள்
விமலனை வணங்காத சென்னியென் சென்னிபணி
விடைசெயாக் கையென்ன கை
நாவார நினையேத் திடாதவா யென்னவாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
லிலத் தென்னவுடல் பாவியா கியசனன
நண்ணினாற் பலனேது காண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. அ௯

## நற்பொருளொடு தீப்பொருள்பிறத்தல்.

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுபாட் டினங்கைதான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்றுமென்ன
மாக*ரமு தினொடு நஞ்சும் பிறந்தென்ன
வல்விரும் பிற்றுருத் தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின்மொக் குள்
வளையொடு பிறந்தென்ன வுண்
பாகமிகு செங்கலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னுமொரு தாய் வயிற்றிற்
பண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றே
மாகனக மேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. கூ௰

## தன்னினத்தா லழிவு.

குலமான சம்மட்டி குறடுகைக்குதவியாய்க்
கூடிரும் புகளை வெல்லுங்
கோடாலி தன்னுள்ளே மரமது நுழைந்துதன்
கோத்திர மெல்லா மழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவர்து
நண்ணுபற வைகளை யார்க்கு
நட்புடன் வளர்ந்தகலை மானென்று சென்றுதன்
னவில்சாதி தனை யிழுக்கும்
உலவுகற் குடிதனிற் கோளர்க ளிருந்துகொண்
டுற்றுரை யீடழிப்ப
ருளவனில் லாமலூ ரழியா தெனச்சொல்லு
முலகமொழி நிஜமல்லவோ

* மாகர்-தேவர்.

வலமாக வந்தரனிடத்தினிற் கனிகொண்ட
மதயானை தன்சோதரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௯௯

வீணுக்குழைத்தல்.

குயின்முட்டை தனதென்று காக்கையடைகாக்குங்
குணம்போலு மீச்சக * ளெல்லாங்
கூடியேதாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்
பயில்சோர o ருக்குப் பிறந்திடத் தாய்பெற்ற
பாலனென் றுட்கருதியே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
றெட்டுத் தெறித்திடாம
றொகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டுபோ
சொந்தமா னவர்வேறு காண் [கவரு
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௱

இதுசேரி னிதுபயன்படாதென்ல்.

அழலுக்குள் ளேவிட்ட நெய்யும் பெருக்கான
வாற்றிற் கரைத்த புளியு
மரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரு
மலகைகட் கிடுபூசை யும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிதரும் பனிநீரு நீள்
சொல்லரிய காட்டுக் கெறித்த நிலவுங்கடல்
சுழிக்குள்ளே விடுகப் பலும்

* ஈக்கள்-தேன்வண்டுகள். o சோரர் - கள்ளப்
புருஷர்.

ழலுக் கிறைத்திட்ட தண்ணீரு முகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியுப்பலனிலை
விருதாவி தென்பர் கண்டாய்
மலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௫

கைவிடத்தகாதவர்.

ன்னைசுற் றங்களையு மற்றைநாண் முதலா
வடுத்துவரு பழையோரையு
மடுபகைவ ரிற்றப்பி வந்தவொரு வேந்தனையு
மன்பான பெரியோரை யும்
ன்னைநம் பினரையு மேழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தம்மை யுந்
தருணமிது வென்றுநல் லாபத்து வேளையில்
சரணம் புகுந்தோரை யும்
ர்னாயம தாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந் தனக்குறுதி யாய்
நத்து சேவகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிட லாகாது காண
ன்னயினு மினியசெஞ் சேவலுஞ் செங்கமலர்
வைத்தசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. ௬௬

தகாதசெயல்.

ண்டிவரு முற்றூர் பசித்தங் கிருக்கவே
யன்னியர்க் குதவுவோரு
மாதுபெரு டெரியோர்செய் நேசத்தை விட்டுப்பி
னற்பரை யடுத்த பேரும்
கொண்டவொரு மனையாளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவுவோரும்

கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீய்ந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேருங்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டட்டர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே யருளாளனே
மயிலேறு விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

நல்லோர்முறைமை.

கூடியே சோதரர்கள் வாழ்தலா லுந்தரு
குழந்தைபல பெறுத லாலுங்
குணமாக வேபிச்சை யிட்டுண்கை யாலுங்
கொடும்பிதிர்க் கிடுத லாலுந்
தேடியேதெய்வங்க ளுக்கீத லாலுந்
தியாகங் கொடுத்த லாலுஞ்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப்பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்த லாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலு
நன்மையே தருமலாற் றாழ்ச்சிகள் வாராவிவை
நல்லோர்கள் செயுமுறைமைகாண்
வாடிமன நொந்துதமிழ் சொன்னநக் கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

அடைக்கலங்காத்தல்.

அஞ்சலென நாவினுட றருமன் சுமந்துமுன்
னாற்றைக் கடத்துவித்தா
னடைக்கல மெனுங்கயற் காகநெடு மாலுட
னருச்சுனன் சமர்புரிந் தான்

ந்சமெனை வந்திந் புறவுக்கு முன்சிபி
சரீரந் தனைக் கொடுத்தான்
றடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்
ன்சொலுட னேபூத தயவுடை ராயினோ
ரெவருக்கு மாபத்திலே
யினியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்ப ரன்றோ
ஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வள்சூர னுடல் கீண்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. கஎ

யோக்கியா யோக்கியம்.

வினோடு தேன்வந்து சேரில்ருசி யதிகமாம்
பருகுநீர் சேரி லென்னும்
பவளத்தி னிடைமுத்தை வைத்திடற் சோபிதம்
படிகமணி கோக்கி லென்னாம்
வினிய மன்னர்பால் யானைசேர் வதுகனத்தை
வேஷமது சேரி லென்னும்
மிக்கான தங்கத்தி னவமணி யுறிற்பெருமை
வெண்கல் லழுத்தி லென்னும்
லிப மினார்களுட னிளையார்கள் சேரினலம்
வளைகிழவர் சேரி லென்னும்
மருவுதல் லோரிடம் பெரியோர் வரிற்பிரியம்
வருகயவர் சேரி லென்னும்
விகை தரித்தமணி மார்பனே தெய்வயானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிமேலறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. கஅ

பெரியோ ரியல்பு.

ன்னதானஞ் செய்தல் பெரியோர் சொல்வழிநிற்ற
லாபத்தின் வந்த பேருக்

கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியன் வழி நின்றவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனை செயச்
சோம்பலில்லாம லுயிர் போகினும் வாய்மைமொ
தொல்புவியி னுட்டி யிந்தல் [பு
மன்னரைச் சேர்ந்தொழுதல் கற்புடைய மனைவி
வைகினுந் தாமரை யிலை [யொடு
மருவுநீ ரெனவுறு திவைவெலா மேலவர்த
மாண்பென் றுரைப்ப ரன்றோ
வன்னமயின் மேலுவர்ந் திவ்வுலகை யொருநொடியி
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே. சூகூ

## நூலின் பயன்.

வன்னமயி லேறிவரு வேலாயுதக் கடவுள்
மலைமே லுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமர மாகினோன்
வானவர்கள் சேனாபதி
கன்னன் மொழியுமையா டிருப்புதல்வ னரன்மகன்
கங்கைபெற் றருள் புத்திரன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுளா வினன்குடியி னோன்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேற்
பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தினறை
பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும் பெறுவரே.

குமரேசசதகம்-முற்றிற்று.

உ

முருகன் றுணை.

அம்பலவாணக் கவிராயரவர்கள் பாடிய

# சதுரகிரி

# அறப்பளீசுர சதகம்.



அமரம்பேடு

ரங்கசாமிமுதலியார் அண்டுசென்ஸ்

அவர்களாற்றமது

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

நெ. 24. தாண்டவராயப்பிள்ளைவீதி

சென்னை.

தன்விலை] 1908. [அணா-1.

உ

முருகன் றுணை.

அம்பலவாணக் கவிராயரவர்கள் பாடிய

சதுரகிரி

# அறப்பளீசுரசதகம்.

திருத்தமான பதிப்பு.

அ. இரங்கசாமிமுதலியார் அண்டுசன்ஸ்

அவர்களாற் றமது

பூமகள்விலாசஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

நெ. 24. தாண்டவராயப்பிள்ளைவீதி,

சென்னை.

1909.

உ

கணபதி துணை.

# அறப்பளீசுர சதகம்.

---

## காப்பு.

### வெண்பா.

ம்பர்கோ னெம்பெருமா னேங்கறப்ப ளீசுரன்மேற்
ப்பொருள்சே ருஞ்சதகம் பாடவே—அம்புவியோர்
க்குந் துதிக்கையுளா னன்புடையார்க் கின்பருளிக்
ாக்குந் துதிக்கையுளான் காப்பு.

---

### உயர்பிறப்பு.

டலுலகில் வாழுமுயி ரெழுபிறப் பினுண்மிக்க
கீர்ட்சிபெறு நரசென்ம மாய்க்
கருதப் பிறத்தலரி ததினுமுயர் சாதியிற்
கற்புவழி வருவ லரிது
டிவமுட னவயவங் குறையாது பிழையாது
வருதலது தனினு மரிது
வந்தாலு மிதுபுண்ய மிதுபாவ மென்றெண்ணி
மாசில்வழி நிற்ற லரிது
கடியதனவானாத லரித்தினி ரக்கமுள
நெஞ்சினோ னாத லரிது
நேசமுட னுன்பதத் தன்பனாய் வருதலிந்
நீணிலத் ததினு மரிதாம்
டியவர்க் கமுதமே மோழைபூ பதிபெற்ற
வதிபனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௧)

### மனையாட்டி சிறப்பு.

கணவனுக் கினியளாய் ம்ருதுபாஷி யாய்மிக்க
கமலநிக ரூப வதியாய்
காய்சினமி லாளுமாய் நோய்பழியி லாததோர்
கால்வழியில் வந்த வளுமாய்
மணமிக்க நாணமட மச்சம் பயிர்ப்பென்ன
வருமினிய மார்க்க வதியாய்
மாமிமா மற்கிதஞ் செய்பவளு மாய்வாசல்
வருவிருந் தோம்பு பவளாய்
இணையின்மகிழ் நன்சொல்வழி நிற்பவளு மாய்வந்தி
யென்பெயரி லாத வளுமா [*
யிரதியென வேலீலை புரிபவளு மாய்ப்பிறர்த
மில்வழிசெ லாத வளுமாய்
அணியிழை யொருத்தியுண் டாயினவள் கற்புடை
ளாகுமெம தருமை மதவே [ய
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (உ)

### நன்மக்கட்பேறு.

தங்குலம் விளங்கிடப் பெரியோர்கள் செய்துவரு
தருமங்கள் செய்து வரலுந்
தன்மமிகு தாணங்கள் செய்தலுங் கனயோக
சாதக னெனப் படுதலும்
மங்குத லிலாததன் றந்தைதாய் குருமொழி
மறுதுவழி பாடு செயலும்
வழிவழி வருந்தமது தேவதா பத்திபுரி
மார்க்கமுந் தீர்க்கா யுளும்
இங்கித குணங்களும் வித்தையும் புத்தியு
மீகையுஞ் சன்மார்க்க மு
முவையெலா முடையவன் புதல்வனு மவனையே
யீன்றவன் புண்ய வானும்

---

* வந்தி-மலடி.

அங்கச * விரோதியே சோதியே நீதிசே
　　ராசனெம தருமை மதவே
ளானுதினமு மனதினினே தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுரதேவ னே.　　(௩)

## சகோதரரொருமை.

உடப் பிறந்தவர்க் கெய்துதுயர் தமதுதுயர்
　　கொள்சுகந் தஞ்சுக மெனக்
கொண்டுதாந் தேடுபொரு ளவர்தேடு பொருளவர்கொள்
　　கோதில்புகழ் தம்புக ழெனக்
கெடுற்ற வவர்நிந்தை தந்நிந்தை தந்தவந்
　　தீதிலவர் தவமா மெனச்
சீவனொன் றுடல்வே றிவர்க்கென்ன வைந்தலைச்
　　சிறரவ மணிவாய் தொறும்
உடுற்ற விரையெடுத் தோருட னிறைத்திடுங்
　　கொள்கைபோற் பிரி வின்றியே
கூடிவாழ் பவர்தம்மை யேசகோ தரனெனக்
　　கூறுவது வே தருமமாம்
அடிச் சிவந்தசெந் த மரைப் பாதனே
　　யண்ணலெம தருமை மதவே
ளானுதினமு மனதினினே தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுரதேவனே　　(௪)

## சற்குருவியல்பு.

வதாந்த சித்தாந்த வழிதெரிந் தாசார
　　விவரவின் ஞான பூர்ண
வித்யாவி சேஷசற் குணசத்ய சம்பன்ன
　　வீரவை ராக்ய முக்ய
தார ணப்பிரிய யோகமார்க் காதிக்ய
　　சமாதிநிஷ் டானு பவராய்ச்
சட்சமய நிலைமையும் பரமந்த்ர பாதந்த்ர
　　தருமமும் பர சமயமும்

---

* அங்கசன்-மன்மதன்.

நீதியி லுணர்ந்துகத் துவமார்க்க ராய்ப்பிரம
நிலைகண்டு பாச மிலராய்
நித்தியா னந்தசை தன்யரா யாசையறு
நெறியுளோர் சற்குருவராம்
ஆதார மாயுயிர்க் குயிராகி யெவையுமா
மமலசிவம தருமை மதவே
ளனுதினமு மன்றினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ரு)

நன்மாணுக்கரியல்பு.

வைதாலு மோர்கொடுமை செய்தாலு மோசீறி
மாறா திகழ்ந்தாலு மோ
மனதுசற் றாகிலுங் கோணாது நாணாது
மாதா பிதாவெனக்குப்
பொய்யாம னீயென்று கனிவொடும் பணிவிடை
புரிந்து பொருளுட லாவியும்
புனிதவுன் றனதெனத் தத்தஞ்செய் திரவுபகல்
போற்றி மல ரடியில் வீழ்ந்து
மெய்யாக வேபரவி யுபதேச மதுபெற
விரும்புவோர் சற் சீடராம்
வினைவே ரறும்படி யவர்க்கருள்செய் திடுவதே
மிக்கதேசிக ரதுகடன்
ஐயா புரம் *பொடி படச்செய்த செம்மலே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சு

பொருள்செயல்வகை.

புண்ணிய வசத்தினுந் செல்வமது வரவேண்டும்
பொருளைரட் சிக்க வேண்டும்
புத்தியுட னதுவொன்று நூறாகவேசெய்து
போதவும் வளர்க்க வேண்டும்

* புரம் - திரிபுரம்.

உண்ணவேண்டும் பின்பு நல்லவஸ்த் ராபரண
முடலிற் றரிக்க வேண்டு
முற்றபெரியோர் கவிஞர் தமரா துலர்க் * குதவி
யோங்குபுகழ் தேடவேண்டும்
மண்ணில்வெகு தருமங்கள் செயவேண்டுமுபர்மோ
வழிதேட வேண்டு மன்றி
வறிதிற் புதைத்துவைத் தியாதபேர்களே [கூஉ
மார்க்கமறி யாக் குருடராம்
அண்ணலே கங்கா குலத்தலைவன் மோழைதரு
மழகனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (எ)

## தீவழிவிலக்கு.

வஞ்சகர் தமைக்கூடி மருவொணு தன்பிலார்
வாசலிற் செல்லொ ணுது
வாதெவ ரிடத்திலும் புரியொணு தறிவிலா
மடையர்முன் னிற்கொ ணுது
கொஞ்சமே னுந்தீது செய்யொணு தொருவர்மேற்
குற்றஞ்சொ லொணு தயற்
கோதையர்க ளோடுபரி காசஞ்செ யொணுது
கோளுரைகள் பேசொ ணுது
அஞ்சுதரு மரவொடும் பழகொணு திருள்வழி
நடந்துதனி யேகொ ணுது
நதிபெருக் காகினதி னீஞ்சல்செய் பொணுது
நல்வழி மறக்கொ ணுது
அஞ்சாம லரசர்முன் பேசொணு திவையெலா
மறியுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அ)

---

* ஆதுலர்-தரித்திரர்.

என்றற்கொன்றழகுசெய்வன.

வாழ்மனை தனக்கழகு குலமங்கை குலமங்கை
வாழ்வினுக் கழகு சிறுவர்
வளர்சிறுவ ருக்கழகு கல்விகல் விக்கழகு
மாநிலந் துதிசெய் குணமாம்
சூழ்குண மதற்கழகு பேரறிவு பேரறிவு
தோன்றிடி லதற் கழகுதான்
றூயதவ மேன்மையுப காரம்விர தம்பொறுமை
சொல்லரிய பெரியோர் களைத்
தாழ்தல்பணி விடைபுரிதல் சீலநே சங்கருணை
சாற்றுமிவை யாமென்பர் காண்
சௌரி * மலரோனமரர் முனிவர்முச் சுடரெலாஞ்
சரணமெனை ரட்சி யெனவே
ஆழ்கடலுதித்துவரு விடமுண்ட கண்டனே
யண்ணலெம தருமை மகவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (கூ)

ஒன்றில்லாமையாற் பயன்படாதவை.

கேள்வியில் லாதவூர் நாசியில் லாமுகங்
கொழுநனில் லாத மடவார்
குணமதில் லாவித்தை மணமதில் லாதமலர்
குஞ்சரமி லாத சேனை
காவலில் லாதபயிர் பாலரில் லாதமனை
கதிர்மதியி லாத வானம்
கவிஞரில் லாதசபை சுதிலயை யிலாதபண்
காவலரி லாத தேசம்
ஈவதில் லாததன நியமமில் லாதசெப
மிசைலவண மில்லாத வூ
ணிச்சையில் லாதபெண் போககல மிவைதம்மி
னேதுபல னுண்டு கண்டாய்

* சௌரி - விட்டுணு.

ஆவியனை யாட்கிடந் தந்தவா கற்பதரு
வாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ம)

ஒன்றற்கொன்று தகாதசேர்க்கை.

பூதயை யில்லாத லோபிய ரிடத்திலே
பொருளையருளிச்செய்தனை
புண்ணியஞ் செய்கின்ற சற்சன ரிடத்திலே
பொல்லாத மிடி* வைத்தனை
நீதியகன் மூடர்க் கருந்ததி யெனத்தக்க
நெறிமாத ரைத் தந்தனை
நிதானமுள வுத்தமர்க் கிங்கித மிலாதகொடு
நீலியைச் சேர் வித்தனை
சாதியி லுயர்ந்தபே ரீனர்பின் னேசென்று
தாழ்ந்துடர வச் செய்தனை
தமிழருமை யறியாத புல்லர்மேற் கவிவாணர்
தாமபாட வே செய்தனை
ஆதரவி லாமலிப் படிசெய்த தென்சொலா
யமலவெம் தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (மக)

குணக்கேட ரியல்பு.

சருத கலைகற்று நிலைபெற்ற சபையிலே
வாயிலா தவனொரு பதர்
வாள்பிடித் தெதிரிவரி னோடிப் பதுங்கியே
மனக்கோழை யானொரு பதர்
ரு வழக்குரைத் தனைவருஞ் சீசீயென்
றிகழப் பானொரு பத
ரில்லாள் புறஞ்செலச் சம்மதித் தவளோ
டிணங்கிவாழ் பவனொரு பதர்

* மிடி-வறுமை.

வேறொருவர் மெச்சாது தன்னையே தான்மெச்சி
வீண்பேசு வானொரு பதர்
வேசையர்க ளாசைகொண் டுள்ளளவு மனையா [ளை
விட்டுவிடு வானொரு பதர்
ஆறாத துயரையும் மிடிமையுந் தீர்த்தருள்செ
யமலவெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே (அஉ)

செயத்தக்கவை.

வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டுங்கற்ற
வழியிலே நிற்க வேண்டும்
வளைகட றிரிந்துபொரு டேடவேண் டுந்தேடி
வளறஞ் செய்ய வேண்டும்
சீலமுடை யோர்களைச் சேரவேண் டும்பிரிதல்
செய்யா திருக்க வேண்டுஞ்
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் டுங்கொ [ண்டு
த்யாகங் கொடுக்க வேண்டும்
ஞாலமிசை பலதரும நாட்டவேண் டும்நாட்டி
நன்றாய் நடத்த வேண்டும்
நம்பனிணை யடிபூசை பண்ணவேண் டும்பண்ணி
னாலுமிகு பத்தி வேண்டும்
ஆலமமர் கண்டனே பூதியணி * முண்டனே
யனகவெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (அக)

மேன்மேலுயர்ச்சி.

தன்மட்டி லிரவாது சீவனஞ் செய்பவன்
சாமர்த்திய முள புருடனுஞ்
சந்ததம் பதின்மரைக் காப்பாற்று வோன்மிக்க
தரணிபுகழ் தரு தேவனும்

* முண்டம்-நெற்றி.

பொன்மட்டி லாமலீந் தொருநூறு பேரைப்
புரப்பவன் பொருவி லிந்த்ரன்
புவிமீதி லாயிரம் பேர்தமைக் காப்பாற்று
புண்யவா னே பிரமனும்
கன்மைதரு பதினா யிரம்பேர் தமைக்காத்து
ரட்சிப்ப வன் செங்கண்மா
லுமிவன் மேலதிக மாகவெகு பேர்க்குதவு
நரனே மகா தேவனும்
அன்மட்டு * வார்குழலி பாகனே யேகனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவ னே. (൰௪)

செயற்கருமஞ் செயல்.

ர்மே லடக்கலா மெட்டியுந் தின்னலா
நெருப்பைநீர் போற் செய்யலாம்
நெடியபெரு வேங்கையைக் கட்டியே தழுவலா
நீளரவி னைப்பூண லாம்
ார்மீது மணலைச் சமைககலாஞ் சோறெனப்
பட்சமுட னே யுண்ணலாம்
பாணமொடு குண்டுவில கச்செய்ய லாமரப்
பாவைபே சப் பண்ணலாம்
ர்மேவு காடியுங் கடையுற்று வெண்ணெயு
மெடுக்கலாம் புத்தி சற்று
மில்லாத மூடர்த மனத்தைத் திருப்பவே
யெவருக்கு முடியாது காண்
ர்மேவு கொன்றைபுனை வேணியா சுரர்பரவு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (൰௫)

* அல்-இருள், மட்டு-தேன்.

## உத்தமராவோர்.

செய்நன்றி மறவாத பேர்களும் மொருவர்செய்
தீமையை மறந்த பேருந்
திரவியந் தரவரினு மொருவர்மனை யாட்டிமேற்
சித்தம்வை யாத பேரும்
கைகண் டெடுத்தபொருள் கொண்டுபோய்ப் பொரு
கையிற்கொடுத்த பேருங் [ளாளர்
காசினியி லொருவர்செய் தருமங்கெடாதபடி
காத்தருள்செய் கின்ற பேரும்
பொய்யொன்று நிதிகோடி வரினும் வழக்கழிவு
புகலாத நிலைகொள் பேரும்
புவிமீது தலைபோகு மென்னினுங் கனவிலும்
பொய்ம்மையுரை யாத பேரும்
ஐயவிங் கிவரெலாஞ் சற்புருட ரென்றுலகி
லகமகிழ்வ ருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள (மசு
ரறப்பளீ சுரதேவ னே.

## இதுவுமது.

அடைக்கல மெனத்தேடி வருவோர் தமைக்காக்கு
மவனே மகா புருடனு
மஞ்சாம லெதுவரினு மெதுபோகி னுஞ்சித்த
மசைவிலான் மகா தீரனும்
தொடுத்தொன்று சொன்னசொற் றப்பாது செய்கி
தோன்றலே மகா ராஜனுந் [ன்
தூறிக் கலக்கின்ற பேர்வார்த்தை கேளாத
துரையே மகா மேருவாம்
அடுக்கின்ற பேர்க்குவரு மிடர்தீர்த்து ரட்சிக்கு
மவனே மகா த்யாகியா
மவரவர் தராதர மறிந்துமறி யாதைசெயு
மவனே மகா வுசிதனும்

அடர்க்கின்ற முத்தலைச் சூலனே லோலனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (கஎ)

ஒன்றிலொன்றில்லாமை.

காமிக்கு முறையில்லை வேசைக்கு நாணில்லை
கயவர்க்கு மேன்மை யில்லை
கன்னமிடு கள்வருக் கிருளில்லை விபசார
கன்னியர்க் காணை யில்லை
தாமெனு மயக்கறுத் தோங்குபெரி யோர்க்குவரு
ஜாதிகுல மென்ப தில்லை
தாக்ஷிணிய முடையபேர்க் கிகலில்லை யெந்து
சார்பிலார்க் கிடம தில்லை [மொரு
பூமிக்கு லீயாத லோபர்க்கு வளமான
புகழென்ப தென்று மில்லை
புலைபர்க்கு நிசயில்லை கைப்பொரு ளிலாதவோர்
புருடருக் கொன்று மில்லை
யாமினி * தனக்கு நிகர் கந்தரத் திறைவனே
யன்புடைய வருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவ னே. (கஅ)

யாக்கைநிலையாமை முதலியவை.

காயமொரு புற்புதம் வாழ்வுமலை சூழ்தருங்
காட்டிலாற் றின் பெருக்காங்
கருணைதரு புதல்வர்கிளை மனைமனைவி யிவையெ
கானல்காட் டும்ப்ர வாகம் [லாங்
மேயபுஜ பலவலுமை யிளமையழ கிவையெலாம்
வெயின்மஞ்ச ளுயிர் தானுமே

* யாமினி - இராத்திரி.

வெட்டவெளி தனில்வைத்த தீபமெனவேகருதி
வீண்பொழுதுபோக் காமலே
மெய்முடனேதெளிந் தன்பொடுன் பாதத்தி
னினைவுவைத் திருபோதிலு
நீர்கொண்டு மலர்கொண்டு பரிவுகொண் டர்ச்சி
நிமலனே யருள்புரிகுவாய் [க்க
ஆயும்றி வாளர்பணி பாதனே போதனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுரதேவனே. (கக)

திருமங்கையிருப்பிடம்.

நற்பரி முகத்திலே மன்னவ ரிடத்திலே
நாகரிகர் மா மனையிலே
நளினமலர் தன்னிலே கூவிளந் தருவிலே
நறைகொண்ட பைந் துளவிலே
கற்புடையர் வடிவிலே கடலிலே கொடியிலே
கலியாண வாயி றனிலே
கடிநக ரிடத்திலே நற்செந்நெல் விளைவிலே
கதிர்பெறு விளக்க தனிலே
பொற்புடைய சங்கிலே மிக்கோர்கள் வாக்கிலே
பொய்யாத பேர் பாலிலே
பூந்தடந் தன்னிலே பாற்குடத் திடையிலே
போதகத் தின் சிரசிலே
அம் * பெருங் கோதைமலர் மங்கைவ ழிடமென்ப
ரண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுரதேவனே. (உ௰)

* அல் - பெரும்.

## மூதேவியிருப்பிடம்.

மிதமின்றி யன்னம் புசிப்போ ரிடத்திலும்
மிருபாஷை யோ ரிடத்தும்
மெய்யொன்றி லாமலே பொய்பேசி யேதிரியு
மிக்கபா தக ரிடத்தும்
அதியொன்று மிலர்போல மலினங் கொளும்பழைய
கந்தையணி வோ ரிடத்துங்
கடினா யெனச்சீறி யெவரையுஞ் சேர்க்காத
கன்னிவாழ் மனை யகத்தும்
ததி * சேர்கடந்திலுங் கர்த்தபக் திடையிலுஞ்
சாரந்தவாட் டின் றிரளிலுஞ்
சாம்பிண முகத்திலும் மிவையெலாங் கவலைபுரி
தௌவை * வா ழிடமென்பர் காண்
அதிரூப மலைமங்கை நேசனே மோழைதரு
மழகனெம் தருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (உக)

## குணகுணமிரண்டினும் பயன்படாமை.

ணமற்ற பேய்முருங் கைத்தழை தழைத்தென்ன
குட்டநோய் கொண்டு மென்ன
குரைக்கின்ற நாய்மடி சுரந்தென்ன சுரவாது
கொஞ்சமாய்ப் போகி லென்ன
ணமற்ற செம்முருக் கதுபூத் தலர்ந்தென்ன
மலராது போகி லென்ன
மதுரமில் லாவுவர்க் கடனீர் கறுத்தென்ன
மாதெண்மை யர்கி லென்ன
ணவற்ற பேய்ச்சுரை படர்ந்தென்ன படரா
துலர்ந்துதான் போகி லென்ன

* ததி-தயிர் * தௌவை-மூதேவி.

வுதவாத பேர்க்கு வாழ்வுவந் தாலென்ன
வோங்குமிடி வரிலென்னகாண்
அணியுற்ற பைங்கொன்றை மாலிகா பரணனே
யாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௨௨)

குறைவுற்றுங் குணங்கெடாமை.

தறிபட்ட சந்தனக் கட்டை பழுதாயினுஞ்
சார்மணம் பழுதாகுமோ
தக்கபால் சுவறிடக் காய்ச்சினும் மதுகொண்டு
சாரமதுரங் குறையுமோ
நிறைபட்ட கதிர்மணி யழுக்கடைந் தாலுமதி
னீள்குண மழுங்கி விடுமோ
நெருப்பிடை யுருக்கினு மடிக்கினுந் தங்கத்தி
னிறையுமாற் றுக் குறையுமோ
கறை*பட்ட பைம்புயன் மறைத்தாலு மதுகொண்
கதிர்மதி கனம் போகுமோ [டு
கற்றபெரி யோர்மகிமை யற்றபாறி கிலரேனுங்
காசினி தனிற் போகுமோ
அறிவுற்ற பேரைவிட் டகலாத மூர்த்தியே
மைபனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௨௩)

இதற்குதவிசெய்வதிதுவெனல்.

வானவர் பிதிர்க்கண்முச் சுடர்மூவர் கோள்கட்கும்
வாழ்வுதரு முதவி புவனம்
வளமிக்க புவனந் தனக்குமேன் மேலுதவி
வாழ்வுபெற் றிடுமன்னராம்

* கறை - இருள்.

தேனமர் நறுந்தொடையல் புனைமன்னவர்க்குதவி
சேர்ந்தகுடி படைவர்க்கமாஞ்
சேர்குடி படைக்குதவி விளைபயிர்பயிர்க்குதவி
சீர்பெற வழங்கு மழையாம்
மேனிமிர் மழைக்குதவி மடமாதர் கற்பொன்று
வேந்தர்தந் நீதி யொன்று
வேதிய ரொழுக்கமொன் றிம்மூன்றுமேயென்று
மிக்கபெரி யோ ருரைசெய்வார்
ஆன*மர் நெடுங்கொடி யுயர்த்தவெம் மிறைவனே
யதிபனே யருமை மதவே
ளனுதினமு முனதினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (உச)

இதனைக்கண்டுமகிழ்வ திதுவெனல்.

தந்தைதாய் மலர்முகங் கண்டுநின் றாலிப்ப*
தவர்தந்த சந்ததியதாஞ்
சந்த்ரோ தயங்கண்டு பூரிப்ப துயர்வாவி
தங்குபைங் குமுத மலராம்
ந்துமகிழ் வாயிரவி வருதல்கண் டகமகிழ்வ
பொங்குதா மரை மலர்களாம்
பேதவும் புயல்கண்டு கண்களித் தேநடம்
புரிவது மயூர மினமாம்
ங்கைமகிழ் வாயுறவு தாதா வினைக்கண்டு
சீர்பெறுவ திரவலர் குழாந்
திகழ்நீதி மன்னரைக் கண்டுகளி கூர்வதிச்
செகமெலா மென்பர் கண்டாய்
ந்தியம் வானனைய செஞ்சடா டவியனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (உரு)

* ஆன - இடபம். * ஆலிப்பது - களிப்பது.

## அதுவதுவாகாமை.

உள்ளன்பி லாதபேர் தித்திக்க வேபேசி
யுறவாடு முறவு முறவோ
உப்சரித் தன்புடன் பரிமா றிடாதசோ
றுண்டவர்க கன்ன மாமோ
தள்ளா திருந்துகொண் டொருவர்பேரய்ப் பார்த்து [வரு
தக்கபயிர் பயிராகு மோ
தளகர்த்த னொருவனில் லாமன்முன் சென்றிடுந்
தானையுந் தானை யாமோ
விள்ளாத பேரகமில் லாதபெண் மேல்வரு
விருப்பமும் விருப்ப மாமோ
வெகுகடன் பட்டபேர் செய்கின்ற சீவனமு
மிக்கசீ வனமாகு மோ
அள்ளா*திருங்கருணை யாளனே தேவர்தொழு
மாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (உ௬)

## நற்குணங்களுக் கிடமாகாதவர்.

வெறிகொண்ட மற்கடம் * பேய்கொண்டுகள்ளுண் (...
வெங்காஞ் சொறிப் புதரிலே
வீழ்ந்துதேள் கொட்டிடச் சங்மார்க்க மெள்ள [...
மேவுமோ மேவாதுபோல்
குறைகின்ற புத்தியா யதிலற்ப சாதியாய்க்
கூடவே யிளமை யுண்டாய்க்
கொஞ்சமா மகங்கார முங்கிடைத் தான்மிக்க
குவலயந் தனி லவர்க்கு
நிறைகின்றபத்தியுஞ் சீலமும் மேன்மையு
நிதானமும் பெரியோர்கண் மே

* அள்ளாது - குறையாது. * மற்கடம்-குரங்கு

னேசமும் மீகையும் மிவையெலாங் கனவிலு
 மினைவிலும் வராது கண்டாய்
அறைகின்ற சுருதியின் பொருளான வள்ளலே
 யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீசுரதேவனே. (உஎ)

இதனு வின்னமுறையனுமெனல்.

தன்னுன் முடிக்கவொண் ணுதகா ரியம்வந்து
 தான்முடிப் போன் றமையனுந்
தன்றலைக் கிடர்வந்த போதுமீட் டுதவுவோன்
 ருய்தந்தை யென்ன லாகும்
ஒன்னார் செயுங்கொடுமை யான்மெலிவு வந்தபோ
 துதவுவோ னிட்டதெய்வம்
யுத்திபுத்திகள் சொல்லி மேல்வருங்காரிய
 முரைப்பவன் குரு வென்னலாம்
எந்நாளும் வருநன்மை தீமைதன தென்னவே
 யெண்ணிவரு வோன் பந்துவா
மிருதய மறிந்துதன் சொற்படி நடக்குமவ
 னெவனெனினு மவனே சுதன்
அந்நார*மும்பணியு மெந்நாளுமே புனையு
 மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீசுரதேவனே. (உஅ)

அவரவரிடத்து நடக்குமுறை.

மாதா பிதாவினுக் குள்ளன் புடன்கனிவு
 மூறுத நல்லொழுக்கம்
மருவுகுரு வானவர்க் கினியவுப சாரமுள
 வார்த்தைவழி பாடடக்கம்

* நாரம் - கங்கை.

காதார்* கருங்கண்மனை யாடனக்கோசயன
காலத்தி னய பாஷணங்
கற்றபெரி யோர்முதியர் வருமாதுலர்()கொலாங்
கருணைசே ரருள்வி தானம் *
நீதிபெறு மன்னவ ரிடத்ததிக பயவினைய
நெறியுடைய பேர்க் கிங்கிதம்
நேயமுள தமர்தமக் ககமகிழ்வுடன்பரிவு
நேரல ரிடத்தில் வயிரம்
ஆதிமனு நூல்சொலும் வழக்கமிது வாகுமெம
தையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே (உகூ)

குணத்தைவிட்டுக் குற்றத்தைக்கவர்தல்.

துட்டவிக டக்கவியை யாருமே மெச்சுவார்
சொல்லுநற் கவியை மெச்சார்
துர்ச்சனர்க் ககமகிழ்ந் துபசரிப் பார்வருந்
தூயரைத் தள்ளி விடுவார்
இட்டமுள தெய்வந்தனைக்கரு திடார்கறுப் *
பென்னிலோ போய்ப் பணிகுவா
ரீன்ற தாய்தந்தையைச் சற்றுமதியார் வேசை
யென்னிலோ காலில் வீழ்வார்
நட்டலா பங்களுக் குள்ளான பந்துவரி
னனருகவே பேசிடார்
நாளுமொப் பாரியாய் வந்தபுத் துறவுக்கு
நன்மைபல வே செய்குவார்
அட்டதிசை சூழ்புவியி லோங்குகலி மகிமைகா
ணத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௩0)

---

* காது-கொலை. ()ஆதுலர்-தரித்திரர். *விதானம்-வணக்கம் () கறுப்பு-அற்பதேவதை.

## குணங்காண்குறி.

கற்றோர்க ளென்பதைச் சிலமுகி னேசொலுங்
 கனவாக்கி னாற் காணலாங்
கற்புள்ளா ரென்பதைப் பார்க்கின்றபார்வையொடு
 காணடையி னுங் காணலாம்
அற்றோர்க ளென்பதனை யொன்றிலும் வாரா
 வடக்கத்தி னாலறியலா
மறமுளோ ரென்பதைப் பூததயை யென்னுநிலை
 யதுகண்டு தா னறியலாம்
வித்தோங்கு பயிரைக் கிளைத்துவரு துடியினால்
 விளையுமென் றே யறியலாம்
வீரமுடை யோரென்ப தோங்கிவரு தைரிய
 விசேடத்தி னாலறியலாம்
அத்தா குணத்தினாற் குவலயந் தெரியலா
 மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுரதேவ னே. (கூக)

## கூடிற்பயன்பாடல்.

செத்தைபல கூடியொரு கயிறுபி னதுகொண்டு
 திண்கரியை யுங்கட்ட லாந்
திகழ்ந்தபல துளிகூடி யாறுயின் வாவியொடு
 திரளேரி நிறை விக்கலாம்
ஒத்தநுண் பஞ்சுபல சேர்ந்துநூ லாயிடி
 னுடுத்திடுக் கலை யாக்கலா
மோங்கிவரு கோலு ன் சீலையுங் கூடினா
 லுயர்கவிகை யாக் கொள்ளலாம்
மற்றுமுயர் தண்டுலத் தோடுகவி நிமி கூடின்
 மல்குமுளை விளை விக்காலம்

மனமொத்த நேயமொடு கூடியொரு வர்க்கொரு
வாழின்வெகு வெற்றி பெறலாம் [வர்
அற்றகனி யைப்பொருத் தரிபிரமர் தேடரிய
வமலனை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௩உ)

அதனதற்கு வெற்றியிடம்.

கலைவலா ருக்கதிக சயமதுர வாக்கிலே
காமுகர்க் கதிக சயமோ
கைப்பொருளி லேவரு மருத்துவர்க்*கோசயங்
கைவிசே டந் தன்னிலே
நலமுடைய வேரைபர்க் கழகிலே யரசர்க்கு
நாளும்ரண சூரத்தி லே
நற்றவர்க் கதிகசய முலகுபுகழ் பொறையிலே
ஞானவே தியர் தமக்கோ
குலமகிமை தன்னிலே வைசியர்க் கோசயங்
கூறிய துலாக் கோலிலே
குற்றமில் லாதவே ளாளருக் கோசயங்
குறையாத கொழு () முனையிலே
அலைவில்குதி ரைக்குநடை வேகத்தி லதிகசெய
மாமென்ப ருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௩௩)

ஒன்றில்லாமையாற் பாழ்படல்.

தாம்பூல தாரண மிலாததே வருபூர்ண
சந்த்ரனிகர் முக சூனியஞ்
சற்சன ரிலாததே வெகுசனஞ் சேர்ந்துவாழ்
தரும்பெரிய நகர் சூனியம்

* மருத்துவர்-வைத்தியர். () கொழு காறு.

மேம்பா டிலாதமன் னவர்கள்வந் தாள்வதே
மிக்கதே சச் சூனியம்
மிக்கசற் புத்திர னிலாதததே னலமான
வீறுசேர் க்ரக சூனியம்
சோம்பாத தலைவரில் லாததே வளமுடன்
சொல்லுயர் சபா சூனியந்
தொல்லுலகி லெவர்க்கு மாகிதிய மில்லதே
சுத்தசூ னியமென்பர் காண்
ஆம்பல்வத னத்தனைக் குகனையீன் றருள்செய்த
வத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்களீ சுரதேவ னே. (௩௪)

## மூடர்தார தன்மியம்.

பெண்புத்தி கேட்கின்ற மூடருந் தந்தைதாய்
பிழைபு றஞ்சொலு மூடரும்
பெரியோர்கள் சபையிலே முகடேறி * வந்தது
பிதற்றிடும் பெரு மூடரும்
ண்புற்ற சுற்றஞ் சிரிக்கவே யிழிவான
பழிதொழில்செய் திடு மூடரும்
புற்றற்ற பேர்க்குமுன் பிணைநின்று பின்புபோய்
பரதவித் திடு மூடரும் [ப்
ண்கெட்ட மாடென்ன வோடியிர வலர்மீது
காய்ந்துவீழ்ந் திடு மூடரும்
கற்றறி விலாதமுழு மூடருக் கிவரெலாங்
கான்மூட ரரை மூடர்காண்
ண் () கற்ற நாவலர்க் காகவே தூதுபோ
மையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௩௫)

* முகடு - முக்கிய இடம். () அண் - மேன்மை.

## இதற்கிது வேண்டுமெனல்.

தனக்குவெகு புத்தியுண் டாகினும் வேறொருவர்
தம்புத்தி கேட்க வேண்டுந்
தானதிக சூரனே யாகினுங் கூடவே
தளசேகரங்கள் வேண்டும்
கனக்கின்ற வித்துவா னாகினுந் தன்னினுங்
கற்றோரை நத்த வேண்டுங்
காசினியை யொருகுடையி லாண்டாலும்வாசவி
கருத்துள்ள மந்த்ரி வேண்டும்
தொனிக்கின்ற சங்கீத சாமர்த்திய னாகினுஞ்
சுதிகூட்ட வொருவன் வேண்டுஞ்
சுடர்விளக் காயினு நன்றாய் விளக்கிடத்
தூண்டுகோ லொன்று வேண்டும்
அனற்கண்ண னேபடிக சங்கநிகர் வண்ணனே
யையனே யருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (கூ

## வறுமையின் கொடுமை.

மேலான சாதியி லுதித்தாலு மதிலென்ன
வெகுவித்தை கற்றுமென்ன
மிக்கவதி ரூபமொடு சற்குண மிருந்தென்ன
மிகுமானி யாகிலென்ன
பாலான மொழியுடைய னாயென்ன வாசார
பரனாயிருந்து மென்ன
பார்மீது வீரமொடு ஞானவா னாயென்ன
பாக்கிய மிலாத போது
வாலாய மாப்பெற்ற தாயுஞ் சலித்திடுவள்
வந்த சுற்றமு மிகழுமே

மரியாதை யில்லாம லனைவரும் பேசுவார்
மனைவியுந் தூறு சொல்வாள்
ஆலால முண்டகனி வாயனே நேயனே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௧௭)

ஈனத்துவம்.

இரப்பவன் புவிமீதி லீனனவ னுக்கில்லை
யென்னுமவ னவனி லீன
னீகின்ற பேர்தம்மை யீயாம லேகலைத்
திடுமூட னவனி லீனன்
உரைக்கின்ற பேச்சிலே பலனுண் டெனக்காட்டி
யுதவிடா னவனி லீன
னுதவவே வாக்குரைத் தில்லையென் றேசொலு
முலுத்தனோ வவனி லீனன்.
பரக்கின்ற யாசகர்க் காசைவார்த் தைகள் சொலிப்
பலகா லலைந்து திரியப்
பண்ணியே யில்லையென் றிடுகொடிய பாவியே
பாரிலெல் லோர்க்கு மீனன்
அரக்கி*தழ்க் குமுதவா யுமைநேச னேயெளிய
ரமுதனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௧௮)

மறைப்பனவும் வெளிப்படுத்துவனவும்.

சென்மித்த வருடமுங் முண்டான வத்தமுந்
தீதில்கிர கச்'சாரமுந்
தின்றுவரு மௌடதமு மேலான தேசிகன்
செப்பிய மகா மந்த்ரமும்

* அரக்கு-சிகப்பு.

புன்மைபவ மானமுந் தானமும் பைம்பொனணி
புனையுமட வார் கலவியும்
புகழ்மேவு மானமு மிவைபொன் பதுந்தமது
புந்திக்கு ளேவைப்பதே
தன்மமென் றுரைசெய்வ ரொன்னார்க ருத்தையுந்
தன்பிணியை யும் பசியையும்
தான்செய்த பாவமு மிவையெலாம் வேறுருவு
தஞ்செவியில் வைப்ப தியல்பாம் [ர்
அன்*மருவு கண்டனே மூன்றுலகு மீன்றவுமை
யன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௯௧)

தேவர்கள் காலவளவை.

சதுரயுக மோரிரண் டாயிரம் பிறபடிந்
சதுமுகற் கொரு தினமதாஞ்
சாற்றுமித் தினமொன் றிலேயிந்த்ர பட்டங்க
டாமுமீ ரேழ் சென்றிடும்
மதிமலியி மித்தொகையி னயனுயு ளூறுபோய்
மாண்டபோ தொரு கற்பமாம்
மாறிவரு கற்பமொரு கோடிசென் றொனெடிய
மாறனக் கோர் தினமதாம்
துதிபரவு மித்தொகையி லொருகோடி நெடியமா
றோன்றியே போய் மறைந்தா
றேகையோர் பாகனே நீநகைத் தணிமுடி
துளக்கிடுங் காலமென்பார்
அதிகமுள பலதேவர் தேவனே தேவர்கட்
கரசனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௯௨)

* அல்-மருவு.

தூய்மையிடமும் தூய்மைசெய்வனவும்.

பாம்பரி தனக்கதிக புனிதமுக மதனிலே
மன்றயவர்க் குபர் புனிதமோ
மலரடியி லேபுனித மொளிகொள்கண் ணுடிக்கு
மாசின்முற் புறமத னிலே
ம்படும் பசுவினுக் குப்பிற் புறத்திலே
மிக்கமட மாத ருக்கோ
மேனியெல் லாம்புனித மாருமா சௌசமொடு
மேவுவனி தையர் தமக்குந்
ாம்பிரம் தற்குமிகு வெள்ளிவெண் கலமயந்
தங்கமீ யந்த மக்கும்
தரும்புனிதம் வருபெருக் கொடுபுளி சுணஞ்சா
சாருமண் டாது சாணம் [ம்பல்
ம்புனித மிவையென்பர் மாமேரு வில்லியே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (சக)

அடங்காதவற்றை யடக்குமுபாயம்.

...யபுளி யெருதையிரு மூக்கிலுங் கயிறென்று
கோத்துவச விர்த்தி கொள்வார்
துவலயந் தனின்மதக் களிறதனை யங்குசங்
கொண்டுவச விர்த்தி கொள்வார்
யில்விட வரவைமந்திர தந் திரத்தினும்
பற்றிவச விர்த்தி கொள்வார்
ாய்பரியை நெடியகடி வாளமது கொடுநடை
பழக்கிவச விர்த்தி கொள்வார்
முடைய துட்டரைச் சோர்பந்த கைக்கொண்டு
வீசிவச விர்த்தி கொள்வார்

மிக்கபெரி யோர்களுங் கோபத்தை யறிவால்
விலக்கிவச வித்திகொள் வார்
அடியவர் துதிக்கவரு செந்தா மரைப்பதத்
தையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுஉ)

ஒளியினுயர்வு.

செழுமணிக் கொளியதன் மட்டிலே யதினுமோ
செய்பச் சோத*மெனவே
செப்பிடுங் கிருமிக்கு மிச்சமொளி யதனினுந்
தீபத்தி னொளி யதிகமாம்
பழுதிலாத் தீவர்த்தி தீபத்தி னதிகமாம்
பகல்வர்த்தி யதி லதிகமாம்
பாரமத் தாப்பினொளி யதிலதிக மதிலுமோ
பனிமதிக் கொளி யதிகமாம்
விழைவுதரு பரிதிக்கு மனுநீதி மன்னர்க்கும்
வீரவித ரணிக ருக்கும்
மிக்கவொளி திசைதொறும் போய்விளங் கிடுமெ
விரகுளோ ருரை செய்குவார் [ன்
அழல்விழிகொ டெரிசெய்து மதனவேடனைவென்
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ச

குணங்குற்றமாதல்.

வான்மதியை நோக்கிடிற் சோரர்கா முகருக்கு
மாறாத வல் விடமதாம்
மகிழ்நன் றனைக்காணி விதமிலா விபசரிய
யாதருக் கோ விடமதாம்

* கச்சோதம்-மினமினி.

மன்மைதரு நற்சுவை பதார்த்தமுஞ் சுரரோக
மிக்கபேர்க் கதிக விடமாம்
வித்தியா திபர்தமைக் கண்டபோ தநிலோப
வீணர்க் கெலாம் விடமதாம்
ணமிகு புன்கவிவ லோர்க்கதிக சபைகாணி
லேலரத கொடிய விடமா
மேற்றமில் லாதபடு பாவிகட் கறமென்னி
லெந்நாளு மதிக விடமாம்
தவ யோகியர்க ளிதயதா மறையுறைய
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுச)

உயர்வன்றித் தாழ்வும்சிறக்குமிடம்.

பகுமான மாகிலு மவமான மாகிலும்
மேன்மையோர் செய்யி னழகாம்
விரகமே யாகிலுஞ் சரசமே யாகிலும்
விழைமங்கை செய்யி னழகாம்
தாழ்வு வாழ்வுவெகு தருமங்க ளைச்செய்து
சாரிலோ பேரழக தாஞ்
சரீரத்தி லோரூன மானமெது வாகிலுஞ்
சமர்செய்து வரிலழக தாம்
மெவ்வு மதகிரியி லேறினுந் தவறினு
நாளுமது வீரமழக தாம்
ாய்மீதி லேறினும் வீழினுங் கண்டபேர்
நகைசெய்தழ கன்றென்பர்காண்
மாயு நற்றவர்க் கருள்புரியு மையனே
யாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சரு)

நல்வினைசெய்தோர்.

சரணெனக் காத்தவன் மெய்யினால் வென்றவன்
றனமினை யாதுதவி னோன்
றந்தைசொன் மறுதவன் முன்னவற் கானவன்
றுய்ப்பழி துடைத்த நெடியோன்
வருபிதிர்க் குதவினோன் றெய்வமே துணையென்ற
மைந்தன்மனை விழைய வதைத்தோன்
மாறான தந்தையைத் தமையனைப் பிழைகண்டு
மாய்த்துலகின் மகிமை பெற்றோன்
கருதரிய சிபியரிச் சந்திரன் மாபலி
கணிச்சியோன் சுமுத்திரை சுதன்
கருடன் பகிரதனுடன்சிறுத் தொண்டனொடு
கானவன் பிரகலாதன்
அரியவல் விபீஷண னெனுமகா புருடரா
மத்தனை யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (சு...

தீவினைசெய்தோர்.

வாயிகழ்வு பேசிமிகு வாழ்விழந் தோன்சிவனை
வைதுதன் றலை போயினோன்
மற்றொருவர் தாரத்தி விச்சைவைத் துடலெல...
மாறுத வடுவாயினோன்
தாயத்தி னோர்க்குள்ள மங்கைக் கொடாமலே
சம்பத் திழந்து மாய்ந்தோன்
றக்கபெரி யோர்தமை வணங்கா மதத்தினாற்
றந்திவடி வாயலைந் தோன்
மாயதனைச் சபையதனி னிந்தனைசெய் தொளி...
மணிமுடி துணிந்து மாய்ந்தோன் [...

வருகுட னெடுதக்க னயிராவ தன்குருடன்
மகன்வெழுதி சிசுபால னும்
ஆயுமறி வாளரொடு தேவர்பணி தானனே
யவனிபுக ழருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சஎ

நன்னகர்.

வாவிபல கூபமுட னாறருகு சேர்வதாய்
மலைகாத வழியி லுள்ளதாய்
வாழைகமு கொடுதெங்கு பயிராவதாய்ச்செந்நெ[ல்]
வயல்கள்வாய்க் கால்க ளுளதாய்
காவிகம லங்குவளை சேரேரி யுள்ளதாய்க்
கல்வர்த்த கர்கண் மறைவலோர்
காணரிய பலகுடிக ணிறைவுள்ள தாய்நல்ல
காவல னிருக்கை யுளதாய்த்
தேவரா லயமாடல் பாடலணி மாளிகை
சிறக்கவுள தாய்ச் சற்சனர்
சேருமிட மாகுமோ ரூர்கிடைத் ததிலதிக
சிவனமு மேகிடைத்தால்
ஆவலொ டிருந்திடுவ தேசொர்க்க வாசமென்
றறையலா மருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சஅ)

தீநகர்.

ஈனசா திகள்குடி யிருப்பதாய் முள்வேலி
யில்லில்லி லுக்கு முளதாய்
யிணைமுலை திறந்துதன தலைவிரித் திடுமாத
ரெங்குநட மாட்ட முளதாய்க்
கானமொரு பக்கமாய் மலைபோர மாய்முறைக்
காய்ச்சறப் பாத விடமாய்க்

கள்ளர்பயம் மாய்கெடிய கயிறிட் டிறைக்கின்ற
 கற்கேணி நீருண்ப தாய்
மானமில்லாக்கொடிய துர்ச்சனர் தமக்கேற்ற
 மணியமொன் றுண்டானதாய்
மாநிலத் தோர்தல மிருந்ததனில் வெகுவாழ்வு
 வாழ்வதிலு மருநரகிலே
ஆனநெடு நாள்கிடந் தமிழ்தலே சுகமாகு
 மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுரதேவனே (சக)

முழுக்குநாள்.

வருமாதி வாரந் தலைக்கெண்ணெ யாகாது
 வடிவமிகு மழகு போகும்
வளர்திங்க ளுக்கதிக பொருள்சேரு மங்கார
 வாரந் தனக் கிடர்வரும்
திருமேவு புதனுக்கு மிகுபுத்தி வந்திடுஞ்
 செம்பொனுக் குயரறிவு போஞ்
தேடிய பொருட்சேத மாம்வெள்ளி சனியெண்
 செல்வமுண் டாயு ளுண்டாம் [ணெய்
பரிகார முள்ததாதி வாரந் தனக்கலரி
 பௌமனுக் கான செழுமண்
பச்சறுகு பொன்னவற் காமெருத் தொளொளிப்
 பார்க்கவற் காகு மெனவே
அரிதா வரிந்தபே ரெண்ணெய்சேர்த் தேமுழுக்
 காடுவா ருருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுரதேவனே. (௫0)

மருத்துவன்.

தாதுப் பரீக்ஷைவரு காலதே சத்தொடு
 சரீரலட் சண மறிந்து

தன்வந்த்ரி கும்பமுனி தேரர்கொங் கணர்சித்தர்
தமதுவா கட மறிந்து
பேதப் பெருங்குளிகை சுத்திவகை மாத்திரைப்
பிரயோக மோடுபஸ்பம்
பிழையாது மண்டூர செந்தூர லட்சணம்
பேர்பெறுங் குண வாகடம்
சோதித்து மூலிகா விதங்கண் டுங்கண்டு
தூயதை லம் லேகிபஞ்
சொல்பக்கு வங்கண்டு வருரோக நிண்ணயந்
தோற்றியே யமிர்த கரமாய்
ஆதிப் பெருங்கேள்வி யுடையவனு யுயர்வேத
னாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௫௧)

உண்மையுணர்குறி

சோதிடம் பொய்யாது மெய்யென்ப தறிவினிய
சூழ்கிரக ணஞ் சாட்சியாஞ்
சொற்பெரிய வாகடம் நிஜமென்கை பேதி
தூயமாத் திரைசாட்சி யாம்
ஆதியிற் செய்ததவ முண்டில்லை யென்பதற்
காளடிமை யேசாட்சியா
மரிதேவ தேவனென் பதையறிய முதனூ
லரிச்சுவடி யேசாட்சி யாம்
நாதனே மாதேவ னென்பதற் கோருத்ர
நாகசம கஞ்சாட்சி யாம்
நாயேனை ரட்சிப்ப துன்பார மரியபன்
னூளுமர்ச் சனைசெய் சரணத்
தாதிநா யகமிக்க வேதநா யகனான
வண்ணலே யருமை மதவே

ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௫௨)

பிறவிக்குணமாருமை.

கலங்காத சித்தமுஞ் செல்வமுஞ் ஞானமுங்
கல்வியுங் கருணைவிளைவுங்
கருதரிய வடிவமும் போகமுந் தியாகமுங்
கனரூப முளமங்கையும்
அலங்காத வீரமும் பொறுமையுந் தந்திரமு
மாண்மையு மமுதமொழியு
மானவிச் செயலெலாஞ் சனனவாசனையினா
லாகிவரு மன்றிநிலமேல்
நலஞ்சேரு மொருவரைப் பார்த்ததுபெறக்கருதி
னண்ணுமோ ரஸ்தாவிநன்
னற்சுவை தனக்குவர வேம்புதவ மேசெய்து
நாள்செயினும் வாராது காண்
அலங்கார மாகமலர் கொன்றைமாலிகைசூடி
மண்ணலே யருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுரதேவனே. (௫௩)

ஊழ்வலி.

கட்டளை யுரைத்திடுவ ரர்பிரம ரூருவமுங்
காணும்படிக் குரைசெய்வார்
காசினியி னளவுபிர மாணமது சொல்லுவார்
காயத்தி னிலைமையறிவார்
விட்டரிய சிவநிலை காட்டுவர் மூச்சையும்
விடாமற் றடுத்தடக்கி
மேன்மேலும் யோகசா தனைவிளைப் பார்ட்டி
விண்மீதி னுந்தாவுவர்
தொட்டரிய பிரமநிலை காட்டுவா ரெண்வகைத்
தொகையான சித்தி யறிவார்

சூழ்வினைவரும்பொழுது சிக்கியுழல்வாரது
துடைக்கவொரு நான்முகற்கும்
அடைவல வெனத்தெரிந் தளவில்பர நூல்சொல்லு
மண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௫௪)

## ஒப்புயர் வில்லாமை.

வேதியர்க் கதிகமாஞ் சாதியுங் கனகமக
மேருவுக் கதிக மலையும்
வெண்டிரை கொழித்துவரு கங்கா நதிக்கதிக
மேதினியி லோடு நதியும்
சோதிதரு மாதவர்க் கதிகமாங் காந்தியுஞ்
சூழ்கனற் கதிக சுசியுந்
தூயதாய் தந்தைக்கு மேலான தெய்வமுஞ்
சுருதிக் குயர்ந்த கலையும்
ஆதிவட மொழிதனக் கதிகமா மொழியுநுக்
ரன்னதா னந்த னிலுமோ
ரதிகதா னமுமில்லை யென்றுபல நூலெலா
மாராய்ந்த பேருரை செய்வார்
ஆதவன் பிரமன்விண் ணவர்முனிவர் பரவவரு
மண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௫௫)

## வீண்செயல்.

வட்டகஞ் சேர்வோரும் வீணரே வீணுரை
விரும்புவோ ரவரின் வீணர்
விருந்துகண் டில்லா டனக்கஞ்சி போடிமறை
விரகிலோ ரவரின் வீணர்

நாட்டந்தருங்கல்வி யில்லோரும் வீணரே
நாடியவர் மேற்கவி சொல்வார்
நானிலந் தனில்வீண ரவரினும் வீணரே
நரரைச் சுமக்கு மெளியோர
தேட்டறிவி லாதபெரு வீணரே யவரினுஞ்
சேரொரு வரத்து மின்றிச்
செலவுசெய் வோரதிக வீணராம் வீணனுய்த்
திரியுமெளி யேனை யாட்கொண்
டாட்டஞ் செயும்பதாம் புயமுடியின் மேல்வைத்த
வமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ரு௬)

உதவியின்றிக்கெடுவன.

மூப்பொருவ ரில்லாத குமரிகுடி வாழ்க்கையும்
மூதரணி லாத நகரும்
மொழியும்வெகு நாயகஞ் சேரிடமும் வருமெது [கை
மோனையில் லாத கவியும்
காப்பமைவி லாததோர் நந்தவனமும் நல்ல
கரையிலா நிறை யேரியுங்
கசடறக் கற்காத வித்தையு முபதேச
காரண மிலாத தெளிவும்
கோப்புள வினைதமுடை யோரருகு புகழாத
கோதையர்செய் கூத்தாட்ட முங்
குளிர்புனனிறைந்துவரு மற்றோர மதினின்று
கோடியர்ந் தோங்கு தருவும்
ஆப்பதில் லாததே ரிவையெல்லா மொன்றுகு
மையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ரு௭)

## இவையே போதுமெனல்.

பொய்யாத வாய்மையுஞ் சீலமுஞ் சார்ந்துளோர்
பூவலஞ் செயவேண்டு மோ
யொல்லாத கொலைகளவி லாதநன்னெறியுளோர்
புகழறஞ் செயவேண்டு மோ
நயாத காமத்தை லோபத்தை விட்டபேர்
நல்லறஞ் செயவேண்டு மோ
நன்மனசுத்தியுண் டானபேர் மேலுமொரு
நதிபடிந் திடவேண்டு மோ
மய்யாநி னடியரைப் பரவுலோருன்பதம்
விரும்பிவழி படவேண்டு மோ
வேதியர் தமைப்பூசை பண்ணுவோர் வானவரை
வேண்டியர்ச் சனை செய்வரோ
பாறு டன்மகலை சோணாச லந்தில்லை
யதிபனே யருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (௫௮)

## அரியராவோர்.

ன்மரி லொருத்தர்சபை மெச்சிடப் பேசுவோர்
பாடுவோர் நூற்றி லொருவர்
பார்மீதி லாயிரத் தொருவர்விதி தப்பாது
பாடிப்ர சங்க மிடுவோர்
னருமை யறிகுவோர் பதின யிரத்தொருவ
ரிதையறிந் திதய மகிழ்வா
ரிகின்ற பேர்புவியி லுலயருமை யாகவே
யிலட்சத்தி லேயொருவ ராம்
பெருக வருமூன்று காலமு மறிந்த மெய்த்
தூயர்கோ டியி லொருவராந்
தால்லுலகு புகழ்காசி யேகாம் பரங்கைலை
சூழுமவி னாசி பேரூர்

அதிகமுள வெண்காடு செங்காடு காளத்தி
யத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுரதேவனே. (ருக)

## கற்பு மேப்பாடு.

தன்கணவ னுருவமாய்த் தற்புணரவந்தோன்
றணக்கிணங் காத கிறையா
டழுங்கதிரெழாமனும் பொழுதுவிடியாமனுந்
சாபங்கொடுத்த செயலாள்
மன்னிவள ரழுன்மூழ்கி யுலகறிய வேதனது
மகிழ்நனைச் சேர்ந்து பரிவாள்
மைந்தனைச் சுடவந்த விறைவன் றடிந்தவடி
வாண்மாலை யான கனிவாள்
நன்னதி படிந்திடுவ தென்னவா ரழுன்மூழ்கி
நாயகனை மேவு தபவா
ஞானிலம் புகழ்சாவி பேர்பெறு நளாயினி
நளினமலர் மேல்வை தேகி
அன்னமென வருசந்த்ர மதிதுரோ பதியென்ப
ராதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுரதேவனே. (சு

## கோடி யுடுக்குநாள்.

கறைபடா தொளிசேரு மாதிவா ரந்தனிற்
கட்டலாம் புதிய சீலை
கலைமதிக் காகாது பலகாலு மழையினிற்
கழிதுநனை வுற்றெறிதரும்
குறைபடா திடர்வரும் விரியம் போமரிய
குருதிவா ரந்த னக்குக்
கொஞ்சநா ளிற்கிழியும் வெற்றிபோம் பந்தியி
குருவார வதிலணிந் தால்

மறைபடா தழகுண்டு மேன்மேலு நல்லாடை
வருமினிய சுக்கி ரற்கோ
வாழ்வுண்டு திருவுண்டு பொல்லாத சனியற்கு
வாழ்வுபோ மரண முண்டாம்
அறைகின்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவாழ்
அறப்பளீ சுரதேவ னே. (௬௧)

சகுனம்.

சொல்லரிய கருடன்வா னரமரவ மூஞ்சூறு
சூகரங் கீரிகலைமான்
றுய்யபா ரத்வாச மட்டையெலி புன்கூகை
சொற்பெருக மருவு மாந்தை
வெல்லரிய கரடிகாட் டான்பூனை புலிமேல்
விளங்குமிரு நாவுடும்பு
மிகவுரைசெ யிவையெலாம் வலமிருந் திடமாகில்
வெற்றியுண் டதிக நலமாம்
ஒல்லையின் வழிப்பயண மாகுமவர் தலைநாக்க
லொருதுடை யிருத்தல் பற்ற
லொருதும்ம லாடையிட விருமல்போ கேலென்
வுபசுருதி சொல்லிவை யெலாம் [...
அல்லறரு நல்லவல வென்பர்முதி போர்பரவு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவ னே. (௬௨)

இதுவுமது.

நரிமயில் பசுங்கிள்ளை கோழிகொக் கொடுகாக்கை
நாவிசிச் சிலியோந்தி தான்
நரையான் கடுத்தவாய்ச் செம்போத் துடன்மேழி
நாடரிய சுரபி மறையோர்

வரியுழுவை முயலிவை யனைத்தும்வல மாயிடின்
வழிப்பயண மாகை நன்றே
மற்றுமிவை யன்றியே குதிரையனு மானித்தல்
வாய்ச்சொல்வா வாவென் றிடல்
தருவளை தொனித்திடுதல் கொம்புகிடு முடிமுரசு
தப்பட்டை யொலிவல் வேட்டுத்
தனிமணி முழக்கெழுத லிவையெலா மூர்வழி
தனக்கேக நன்மை யென்பார்
அருணகிர ணோதயத் தருணபா னுவையனைய
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுரு)

இதுவுமது.

தலைவிரித் தெதிர்வருத லொற்றைப் பிராமணன்
றவசிசன் னாசி தட்டான்
றனமிலா வெறுமார்பி மூக்கறைபுல் விறகுதலை
தட்டைமுடி மொட்டைத் தலை
கன்கழி மடந்தையர் குசக்கலஞ் செக்கான்
கதித்ததில தைல மிவைகள்
காணவெதிர் வரவொணா நீர்க்குட பெருக்கூடை
கனிபுலா லுபய மறையோர்
நல்மிகு சுமங்கலை கிழங்குகூ தகமங்கை
நாளும்வண் ணானழுக் கும்
நகைபெருகு பாற்கலச மணிவளையன் மலரிவைக
ளொடியெதிர் வர நன்மையாம்
அலைகொண்ட கங்கைபுனை வேணியாய்ப்பரசணியு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுச)

உணவில் விலக்கு

கைவிலக் குக்கொ லும் பாலசப் பால்வருவ
    காராக் கறந்த வெண்பால்
காளான் முருங்கைசுரை கொம்மடிப் பழஞ்சோறு
    காந்திக் கரிந்த சோறு
செவ்வையில் சிறுகீரை பீர்க்கத்தி வெள்ளுப்பு
    தென்னைவெல் லமலா வகஞ் *
சீரிலா வெள்ளுள்ளி யீருள்ளி யிங்கு || வொடு
    சிறப்பில்வெண் கத்தரிக்காய்
எவ்வமில் சிவன்கோயி னிர்மாலி யங்கிரண
    மிலகுசுட ரில்லாத வூ
ணிவையெலாஞ் சீல்முடை யோர்களுக் காகா
    வெனப்பழைய நூலுரை செயும்
ஐவகைப் புலன்வென்ற முனிவர்விண் ணவர்போற்று
    மமலனே யருமை மதவே
ள்னுதின்மு மனதினினை தருசதுர கிரிவள
    ரறப்பளீ சுரதேவ னே. (சுரு)

நற்பொருளிற் குற்றம்.

பேரான கங்கா நதிக்குமதன் மேல்வரும்
    பேனமே § தோஷ மாகும்
பெருகிவளர் வெண்மதிக் குள்ளுட் கலங்கமே
    பெரிதான தோஷ மாகும்
சீராங் தபோதனர்க் கொருவர்மேல் வருகின்ற
    சிற்றமே தோஷ மாகுந்
நீதின்முடி மன்னவர் விசாரித் திடாதொன்று
    செய்வதவர் மேற்றோஷமாம்
தாராள மாய்மிகத் தந்துளோர் தாராமை
    தானிரப் போர் தோஷமாஞ்
சாரமுள நற்கருப் பஞ்சாறு கைப்பதவர்
    தாலஞ் ‡ சேய் தோஷ மாகும்

---

* மலாவகம்-பிண்ணாக்கு. || இங்கு-பெருங்காயம்
§ பேனம்-நுரை. ‡ தாலம்-நா.

ஆராயு மொருநான் மறைக்குமெட் டாதொளிரு
மண்ணலே யருமை மதவே
ளானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (சுசு)

## மணைகோல்வதற்கு மாதம்.

சித்திரைத் திங்கள்வரின் மனைகோல மனைபுகச்
செல்வமுண் டதினு நலமே
சேருமவை காசிக்கு மேனு ளரன்புரக்
தீயிட்ட தானியாகா
வெற்றிகொ ளிராவகன் றேவிசிறை சேர்சடகம்
விறல்லவா வணிசுகம்
மேவிடுங் கன்னியிர ணியன்மாண்ட தாகாது
மேன்மையுண் டைப்பசிக்கே
உத்தமங் கார்த்திகைக் காகாது மார்கழியி
லோங்குபா ரதம் வந்ததா
லுயர்வுண்டு மகரத்தின் மாசிமா தத்தில்விட
மும்பர்கோ ளுண்ட தாகா
தத்தநீ மாரனை யெரித்தபங் குனிநாளு
மாகுமோ வருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (சுஎ)

## விருந்துவாரம்.

செங்கதிர்க் குறவுபோம் பகைவரும் விருந்தொருவ
செய்யொணா துண்ணொணாது
திங்களுக் குறவுண்டு நன்மையாம் பகைவருஞ்
செவ்வாய் விருந் தருந்தார்
பொங்குபுத னன்மையுண் டுறவாம் விருந்துணப்
பொன்னவற் கதிக பகையாம்
புகரவற் காகிலோ நெடுநாள் விரோதமாய்ப்
போனவுற வுந் திரும்பும்

மந்த்ரிகர் சனிவார நல்லதாமி தனிலு
மனமொத் திருந்த விடமே
வாலாய மாய்ப்போய் விருந்துண விருந்துதவ
வாய்ந்தநா ளென் றறியலாம்
அங்கையில் விளங்கிவளர் துங்கமழு வாளனே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௫௮)

## பூப்புவாரம்.

அருக்கனுக் கதிரோகி யாவளாற் சோமனுக்
கானகற் புடைய ளாவா
ளங்கார கற்குவெகு துக்கியா வாள்புந்தி
யளவில்லைக் குழவி பெறுவாள்
திருத்தகு வியாழத்தின் மிக்கசம் பததினொடு
சிறுவரைப் பெற்றெடுப் பாள்
சிருடைய பார்க்கவற் கதிபோக வதியுமாந்
திருவுமுண் டாயி ருப்பாள்
கருந்தழிந் தெழில்குன்றி வருமைகொண் டலைகு
காரிவா ரத்தி லாகில் [வாள்
களபமுலை மடமாதர் புட்பவதி யாம்வார
காலபல னென்றுரை செய்வார்
அருத்தியுட னெனியேனை யாட்கொண்ட சோதியே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (௫௯)

## பூப்பிலக்னம்.

றுமைதப் பாதுவரு மேடத்தி விடபத்தின்
மாறாது விபசாரி யாம்
வாழ்வுண்டு போகமுண் டாகுமி துனங்கட கம்
வலிதினிற் பிறரை யணைவாள்

சிறுவைசெயு மிடிசேர்வண் மிருகேந்தி ரற்கெனிற்
சேர்பெறுவள் கன்னி யென்னில்
செட்டுடைப் டுலேபெனிற் யிணியான் மெலிந்திடு
டேளினுக் குத் தனுசெனில்
நெறிசிதைவள் பூருவத் தபரநெறி யுடையளா
நீண்மகர மான மிலளா
நிறைபோகவதிகும்ப பெனின்மீன மென்னிலோ
நெடியபே ரறி வுடையளாம்
அறிவாளர் மடமாதர் தமையறி யிராசிபல
னதுவென்ப ரருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர் கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (எ0)

## தீவுங் கடலும்.

பாவலர் தீவினைச் சூழ்கருங் கடலளவு
லட்சம்யோ சனையி தனையே
நாடோறுஞ் சூழ்வதில வந்தீ வதைச்சூழ்தன்
னற்கழைச் சாற்றின் கடல்
மேவுமிது சூழ்வது குசத்தீ வதைச்சூழ்தன்
மிகுமதுக் கடல தனையே
விழைவொடுஞ் சூழ்தல்கிர வுஞ்சதீவம்மிதனின்
மேற்சூழ்த னெய்க் கடலாம்
பூவிலிது சூழ்தல்சா கத்தீவ மிங்கிதைப்
பேர்ப்பது திருப்பாற் கடல்
போதாவது சூழ்தல்சான் மலிதீவ மாந்தயிர்ப்
புணரியப் பாலு மப்பால்
ஆவலுறு புட்கரத் தீவா மிதைச்சூழ்வ
தரும்புனற் றருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (எக

## மேலான பொருள்.

கழிசுத்த மாயிருக் ததிலும் படைக்காண
துரகமோர் மாணிக்க மாஞ்
சூழ்புவிக் கரசனு யதிலே விம்வேழுள்
துரையுமோர் மாணிக்க மாம்
பழுதற்ற வதிரூப வதிபுமாம் கற்புடைய
பாவையோர் மாணிக்க மாம்
பலகலைகள் கற்றறி யடக்கமுள பாவலன்
பார்க்கிலோர் மாணிக்க மாம்
ஒழிவற்ற செல்வனு யதிலே யாகிபா
முசிதனோர் மாணிக்கமா
முத்தம குல்துதித் ததிலுமோ மெய்ஞ்ஞான
முடையனோர் மாணிக்கமா
அழிவற்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவ னே. (எ௨)

## உண்டியிலையும்முறையும்.

பாழையிலை புன்னைபுர சுடனற் குருக்கத்தி
மாப்பிலாத் தெங்கு பன்னீர்
மாசிலமு துண்ணலா முண்ணுத வோவரசு
வசனஞ் செழும்பா டலம்
ரண்டியிலை யத்திப் லேரண்ட பத்திரஞ்
சகந்தவ முண் முருக்குச்
சாருமிவை யன்றிவெண் பாலெருக் கிச்சிலிலை
தனிலுமுண் டிடவொணு தால்
ாழ்விலாச் சிற்றுண்டி நீரடிக் கடிமருகல்
சாதங்கள் பல வருந்தல்
சற்றுண்டன் மெத்தவு ணித்தனையு மெய்ப்பிணி
தனக்கிட மெனப் பருகிடார்

ஆழிபுடை சூழுலகில் வேளாளர் குலதிலக
னருமைபெறு தருமை மதவேள
னனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (எகூ)

## கவிஞர் வருமை.

எழுதப் படிக்கவகை தெரியாத மூடனை
வித்தையிலாச் சேட னென்று
மீவதில் லாதகன லோபியைச் சபையதனி
லீகையிலாக் கர்ண னென்று
அழகற்ற வெகுகோர ரூபத்தை யுடையோனை
யதிவடிவ மார னென்று
மாயுத மெடுக்கவுந் தெரியாத பேடிதனை
யாண்மைமிகு விஜய னென்று
முழுவதும் பொய்சொல்லி யலைகின்ற வஞ்சகனை
மொழியரிச் சந்த்ர னென்றும்
மூதுலகி லிவ்வண்ணஞ் சொல்லியே கவிராஜர்
முறையின்றி யேற்ப தென்னே
அழிவிலா வுதித்துவரு மடமூண்ட கண்டனே
யமலனே யருமை மதவேள்
னனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (எஅ)

## கவிஞன்.

தெள்ளமிர்த தாரைபெண் மதுரங் கதித்தபைக்
தேன்மடை திறந்ததெனவே
செப்புமுத் தமிழினொடு நாற்கவிதை நாற்பொரு
டெரிந்துரைசெய் திறமையுடனே
வெள்ளரிய காவியத் துட்பொரு ளலங்காரம்
விரியிலக் கண விகற்பம்
வேறுமுன் றொன்னூல் வழக்குமுல கத்தியல்பு
மிக்கப்ர பந்த வண்மை

உள்ளமெல் லாமறிந் தலைபடங் குங்கடலை
யொத்ததிக சபைகண்டபோ
தோங்கலை யொலிக்கின்ற கடல்போற்ப்ர சங்கம
துரைப்பவன் கவிஞனாகும்
அள்ளிவிட முண்டகனி வாயனே நேயனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே (எரு)

கற்சார்பு.

காணரிய பெரியோர்க டெரிசனம் லபிப்பதே
கண்ணிணைகள் செய் புண்ணியங்
கருணையா யவர்சொன்மொழி கேட்பிட லபிப்ப
காதுசெய் திடு புண்ணியம் [திரு
பேணியவர் புகழையே துதிசெய்ய லபித்திடுதல்
பேசில்வாய் செய் புண்ணியம்
பிழையாம லவர்தமைத் தொழுதிட லபிப்பதுகை
பெரியதுசெய் திடு புண்ணியம்
விணைறிசெ லாமலவர் பணிவிடை லபிப்பதுதன்
மேனிசெய்திடு புண்ணியம்
விழைவொடவர் சேர்ப்படி நடந்திட லபிப்பதே
மிக்கபூ ருவ புண்ணியம்
ஆணவ மெனுங்களை களைந்தறி வினைதந்த
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (எசு)

பிறந்தநாளோடு வருகிற வாரபலம்.

சென்ம நக்ஷத்திரத் தாதிவா ரம்வரிற்
றீரா தலைச்ச லுண்டாந்
திங்களுக் காகில்வெகு சுகயோச னத்திறனுடு
திருமாதி னருளு முண்டாம்

வன்மைதரு மங்கார வாரம்வர் தாற்சிறிதும்
வாரா்து சுகமதென்பார்
மாசிப்பல கலைபயில்வர் மேன்மைபாம் புந்தியெ
வாரத் துடன் கூடினல் [னும்
நன்மைதரு குருவார மதுசேர்ந்து வரிலாடை
நன்மையுடனேவந் திடும்
நாரிபருப பண்போக மிகவுமுண் டொருவெள்ளி
நல்லவா ரத்தில் வந்தால்
அன்மருவு பீடையுண் டாமெண்பர் சநியனுக்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (எஎ)

இதனையுடையவர்க் கிதுவில்லையெனல்.

பொன்னசை யுல்லவர்க் குறவேது குருவேது
பொங்குபசி யுல்ல பேர்க்குப்
போதவே சுசியேது ருசியேது மயல்கொண்டு
பொதுமாதர் விழி வலையிலே
எந்நாளு மலைபவர்க் கச்சமொடு வெட்கமே
தென்றென்று முறு கல்விமே
லிச்சையுள பேர்க்கதிக சுகமேது துயிலேது
வெளிதா யிருந்து கொண்டே
பன்னாளு மலைபவர்க் கிகழேது புகழேது
பாரிலொரு வர்க் கதிகமே
பண்ணியிடு மூடருக் கறமேது மறமலாற்
பகர்கிரைய மொன்றுளது காண்
அன்னண * வருகரி யுருத்தணியு மெய்யனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (எஅ)

---

* அல்-நாண.

மழைநாட் குறிப்பு.

சித்திரைத் திங்கள்பதின் மூன்றுக்கு மேனல்ல
சீரான பரணி மழையுந்
தீதில்லை காசியிற பூரணை கழித்தபின்
சேருநா ளாநாளி னில்
ஒத்துவரு மழையுமவ் வாணியிற் றேய்பிறையி
லோங்குமே காதசி யினி
லொளிர்பரிதி வீழ்பொழுதின் மந்தார மும்மழை
முண்டா யிருந் தாடியில் [யு
பத்திவரு தேதியைந் தினிலாதிவாரமுக்
பகருமா வணிமூல நாள்
பரிதியு மறைந்திடக் கனமழை பொழிந்திடப்
பாரில்வெகு விளைவு முண்டாம்
அத்தனே பைங்குவளை மாலைபணிமார்பனு
மண்ணலெம யருமை மதலை
வனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவ னே. (எக)

இருந்துமுதவாமை.

சமயத்தி லுதவாத நிதியமேன் மிக்கதுயர்
சார்பொழுதி லாத கிளையேன்
சபைமுகத் துதவாத கல்வியே னெதிர்வரு
சமையத்தி லாத படையேன்
விமலனுக் குதவாத பூசையே னுளுமிருள்
வேளைக்கி லாத சுடரேன்
வெம்பசிக் குதவாத வன்னமே னடுகுளிர்
வேளைக்கி லாத கலையேன்
தமதுதளர் வேளைக்கி லாதவோர் மனைவியேன்
சரசத்தி லாத நகையேன்
சாமரண காலத்தி லுதவாத புதல்வனேன்
றரணிமீ தென்பர் கண்டாய்

அமரர்க்கு முனிவர்க்கு மொருவர்க்கு மெட்டாத
வாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அ௰)

மறையோர் சிறப்பு.

ஓராறு தொழிலையுங் கைவிடார் சௌசவிதி
யொன்றுதப் பாது புரிவா
ருதயாதி யிற்சென்று நீர்படிகு வார்கால
மொருமூன்றி னுக்கு மறவா
தாராய்ந்து காயத்ரி யதுசெபிப் பார்நாளு
மதிதிபூ சைகள் பண்ணுவார்
யாகாதி கருமங்கள் மந்த்ரகிரி யாலோப
மின்றியே செய்து வருவார்
பேராசை கொண்டிடார் வைதிகநன் மார்க்கமே
பிழையா திருக்கு மறையோர் [ம்
பெய்யெனப் பெய்யுமுகி லவர்மகிமையெவர்களு
பேசதற் கரிதரிது காண்
ஆரார் நெடுஞ்சடில வமலனே யெனையாளு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அக)

அரசர் சிறப்பு.

மநுநீதி முறைமையும் பரராசர் கொண்டாட
வருமதிக ரண வீரமும்
வான்விஜய மொடுசரச சாதனவி சேஷமும்
வாசிமத கரி யேற்றமும்
கனமா மமைச்சரும் பலமான துர்க்கமுங் *
கைகண்ட போர்ப் படைஞருங்
கஜரத பதாதியுந் துரகப்பர வாகமுங்
காலதே சங்க ளவையும்

---

* துர்க்கம்-கோட்டை.

இனிதா யறிந்தஸ்தா னுபதிக ளொடுசமர்க்
கிளையாத தளகர்த்தரு
மென்றும்வற் றாதகன தானிய சமுத்திரமு
மேற்றமுள குடிவர்க்கமும்
அனைவோரு மெச்சவிங் கிவையெலா முடையபே
ரரசரா மருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அஉ)

வைசியர் சிறப்பு.

நீள்கடல் கடந்திடுவர் மலையாள மும்போவர்
நெடிது தூரந் திரிந்து
நினைவுதடு மாறார்கள் சலியார்கள் பொருடேடி
நீணிலத் தரசு புரியும்
வாளுழவ ரைத்தமது கைவசஞ் செய்வார்கள்
வருமிடம் வராத விடமும்
மனதையு மறிந்துதவி பொன்றுநா ருயிட
வளர்ப்பர்வரு துலை துலைக்கும்
ஆள்விடுவர் மலிவுகுறை வதுவிசா ரித்திடுவ
ரளவில்பற் பல சரக்கு
மமைவுறக் கொள்வர்விற் பார்கணக் கதிலனுவு
மறைவிடார் செலவு வரிலோ
ஆளியொத் தேமலையி னளவுங் கொடுத்திடுவ
ரருள்வசிய ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அ௩)

வேளாளர் சிறப்பு.

டசனுதி கருமமுந் தப்பாமல் வேதிய
ரியற்றிநல் லோர் பெறுவதும்
இராச்சபா ரஞ்செய்து முதிமன்னர் வெற்றிகொ
டென்றுநல்லோர்பெறுவ தும்

[ண்

வசனாதி தப்பாது தனதா னியந்தேடி
வசியர்நல் லோர்பெறு வதும்
மற்றுமுள பேரெலா மிடியென் றிடாததிக
வண்மைபெற் றோர்பெறுவ தும்
திசைதோறு முள்ளபல தேவாலயம் பூசை
செய்யநல் லோர்பெறுவ துஞ்
சீர்கொண்ட பைங்குவளை மாலைபுனை வேளாளர்
செய்யுமே ழிப்பெருமை காண்.
அசையாது வெள்ளிமலை தனின்மேவி வாழ்கின்ற
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அச)

தானாதிபதி மந்திரி சேனாதிபதிகளி னியல்பு.

தன்னரசர் வலுமையும் பரராச ரெண்ணமுஞ்
சால்மேல் வரு கருமமுந்
தானறிந் ததிபுத்தி யுத்தியுண் டாயினேன்
றானாதி பதியாகு வான்
மன்னவர் மனத்தையுங் காலதே சத்தையும்
வாழ்குடி படைத் திறமையும்
மந்திரா லோசனையு மெல்லா மறிந்தவன்
வளமான மதி மந்திரி
துன்னிய படைக்குணங் கரிபரி பரீக்ஷையே
சூழ்பகைவர் புரி சூழ்ச்சியுந்
தோலாத வெற்றியுந் திடமான சித்தியுள
சூரனே சேனாதி பன்
அன்னையிலு நல்லமலை மங்கைநா யகனே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (அரு

இராயச கருணிகர் சிறப்பு.

வருமோலை யுத்தரத் தெழுதிவரு பொருளினால்
வரவுடிப் போன் மனதையும்

மருவிவரு கருமமும் தேசகா லத்தையும்
வருகர தலாம லகமாம்
விரைவா ரறிந்தரச ரெண்ணிலெண் ணிணையளா
விடவெழுத வாசிக்க வும்
வெற்றிகொண் டேபெரிய புத்திமடையோன்புவி
மேன்மைரா யசகார னும் [யின்
கருவா யறிந்துதொகை யீராறு நொடியினிற்
கடிதேற்றி டக்குறைக் கக்
கடுகையொரு மலையாக்க மலையையொரு கடுகு
காட்டுவோன் கரு ணீகனும் [மாக்
அருவாகி யுருவாகி யொளியாகி வெளியாகு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ,சுரதேவ னே. (அசு)

## கோபத்தின் கொடுமை.

கோபமே பாவங்க ளுக்கெலாந் தாய்தந்தை
கோபமே குடி கெடுக்குங்
கோபமே யொன்றையுங் கூடிவர வொட்டாது
கோபமே துயர் கொடுக்கும்
கோபமே பொல்லாது கோபமே சீர்கேடு
கோபமே யுற வறுக்குங்
கோபமே பழிசெயுங் கோபமே பகையாளி
கோபமே கருணை போக்கும்
கோபமே யீனமாங் கோபமே யெவரையுங்
கூடாம லொருவ னுக்குங்
கோபமே மறுமையின் கொண்டுபோய்த் தீயநர
கக்குழியி னிற்றள்ளு மால்
ஆபத்தெ லாந்தவிர்த்,தென்னையாட் கொண்டருளு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அஎ)

## பல் துறை.

நான்புரி தவத்தையுங் கொடையையும் புகழுவோர
தங்களுக் கவை தழைவுறா
ச்சற்றுமறி வில்லாம லந்தணரை நிந்தனைசெய்
தயவிலோ ராயுள் பெருகார்
மேன்படு நறுங்கலவை மாலைதயிர் பால்புலால்
வீடுநற் செந்நெ லிவைகள்
வேறொருவர் தந்திடினு மநுமொழி யறிந்தபேர்
விலைகொடுத் தேகொள்ளு வார்
தேன்கனிகிழங்குவிற் கிலையிவை யனைத்தையுந்
தீண்டரிய நீச ரெனினுஞ்
சீர்பெற வளிப்பரே லிகழாது கைக்கொள்வர்
சீலமுடையோ ரென்பரால்
ஆன்கொடி யுயர்த்தவுமை நேசனே யீசனே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (அஅ)

## தத்துவத் திரயம்.

பூதமோ ரைந்துடன் புலனைந்து ஞானம்
பொருந்துமிந் திரிய மைந்து
பொருவில்கன் மேந்திரிய மைந்துமன மாதியாம்
புகலரிய கரண நான்கே
ஓதினோ ரிவையாத்ம தத்துவ மெனச்சொல்வ
ருயர்கால நியதி கலையோ
யோங்கிவரு வித்தைரா கம்புருடன் மாயையென்
றுரைசெய்யு மோ ரேழுமே
நீதில்வித் யாதத்வ மென்றிடுவ ரிவையெலாற்
றிகழ்சுத்த வித்தை யீசன்
சீர்கொள்சதா தாக்கியஞ் சத்திசிவ மைந்துமே
சிவதத்வ வென் றறைகுவார்
ஆதிவட நிழலிற் சனகாதி யர்க்கருள்செ
யண்ணலே யருமை மதவே

ளனுதினமு மனதினினே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (அசு)

## மன்மதபாணமும் அவற்றின் குணமுதலியவும்.

வனசஞ் செழுஞ்சூத முடனசோ கந்தளவ
மலர்நீல மிவை யைந்துமே
மாரவேள் கணைகளா மிவைசெயுங் குணமுளரி
மனதிலா சையை யெழுப்பும்
வினவிலொண் சூதமலர் மொய்ப்பசலை யுண்டாக்கு
மிகவசோ கந்துயர் செயும்
வீழ்ந்திடுங் குளிர்முல்லை நீலமுயிர் போக்கிவிடு
மேவுமிவை செயு மவத்தை
நினைவிலது வேநோக்கம் வேறொன்றி லாசையற
நெட்டுயிர்ப் பொடுபி தற்ற
னெஞ்சந் திடுக்கிடுத லனம்வெறுத் திடல்காய்ச்ச
னேர்தன்மௌ னம்புரிகு தல்
அணையவுயி ருண்டில்லை யென்னவீ ரைந்துமா
மத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுஎ)

## மன்மதனுபகரணங்கள்.

வெஞ்சிலை செழுங்கழைவி ஞரிகருவண் டின
மேல்விடுங் கணைக ளலராம்
வீசிடுந் தென்றறேர் பைங்கிள்ளை யேபரிகள்
வேழங் கெடாத விருளாம்
வஞ்சியர் பெருஞ்சேனை கைதையுடை வாணெடிய
வண்மைபெறு கடன் முரசமாம்
மகரம் பதாகைவரு கோகிளங் காகளம்
மனதே பெரும் போர்க்களம்
சஞ்சரிகை விசைபாடல் குமுதநே யன்கவிகை
சாரிரதியே மனைவி யாந்

தறுகண்மட மாதரிள முலைமகுட மாமல்கு
றவுறு திருக்கு மிடமாம்
அஞ்சுகணை மாரவேட் கென்பரெலி யோர்க்கெலா
மமுதமே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுக)

பகைகொளத் தகாதவர்.

மன்னவர மைச்சர்துர்ச் சனர்கோளர் தூதரொடு
மாறுத மர்ம முடையோர்
வலுவர்கரு ணீகர்மிகு பாகஞ்செய் தன்னமிடு
மடையர்மந் திர வாதியர்
சொன்னமுடை யோர்புலைய ருபதேச மதுசெய்
சூழ்வயித் தியர் கவிதைகள் [வோர்
சொற்றிடும் புலவரிவர் பதினைந்து பேரொடுஞ்
சொற்பனந் தனி லாகிலும்
நன்னெறி யறிந்தபேர் பகைசெய் திடார்களிந்
நானிலத் தென்பர் கண்டாய்
நாரியோர் பாகனே வேதாக மம்பரவு
நம்பனே யன்பர் நிதியே
அன்னமூர் பிரமனும் கண்ணனுங் காணுத
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (சுஉ)

இதாகிதஞ்செய்து பயன்கொள்வன.

சுவைசேர் கரும்பைவெண் பாலை'ப் 'பருத்தியைச்
சொல்லுநன் னெல்லை யெள்ளைத்
தூபதெங் கின்கனியை யெண்ணாத துட்டரைத்
தொண்டரைத் தொழு தொழும்பை
நவைதீரு மாறுகண் டித்தே பயன்கொள்வர்
நற்றமிழ்க் கவி வாணரை
நலமிக்க செழுமலரை போவிய மெனத்தகக
நயமுள்ள நாரியர் தமைப்

புவிமீதி லுபகார நெஞ்சரைச் சிறுவரைப்
 ப்பார்வீர ரைத் தூயரைப்
போதவும் பரிவோடிதயஞ்செய்ப மிகுபயன்
 புகழ்பெறக் கொள்வர் கண்டாய்
அவமதி தவிர்த்தென்னை யாட்கொண்ட வள்ளலே
 யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுரதேவ னே. (கூங)

## தருமம்.

பெறுமில்பெறு வித்தலொடு நாளோலை நாடொறும்
 பிள்ளைக ளருந்திடும் பால்
பேசரிய சத்திரமடமா வுரிஞ்சுகல்
 பெண்போக நாவிதன் வணன்
மறைபொழிக ளுடிதண் ணீர்தலைக் கெண்ணெய்ப
 வாயினுறை பிண மடக்கல் [சு
வாவியிறு முயிர்மீட்ட நின்பொரு ளடைக்காய்
 வழங்கல்சுண் ணும்பு தவுதல்
சிறையுருபவர்க்கமுது வெற்றிலங் காத்தல்பொழில்
 செய்தன்முன் னூலின் மணங்
திகழ்விலங் கூண்பிச்சை யறுசம யருக்குண்டி
 தேவராலய மவுஷதம்
அறைதல்கற் போர்க்கன்ன சாலெட்ட றங்களுமு
 னன்னைசெய லருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுரதேவ னே. (கூச)

## இல்லறம்.

தந்தைதாய் சற்குருவை யிட்டதெய் வங்களைச்
 சன்மார்க்க முள மனைவியைத்
தவறாத சுற்றத்தை யேவாத மக்களைத்
 தனைநம்பி வருவோர்களைச்
சிந்தைமகிழ் வெய்தவே பணிவிடைசெய் வோர்களை
 தென்புலத் தோர் வறிஞரைத்

நீதிலா வதியைப் பரிவிடைய துணைவுடைத்
தேனுவைப் பூசுரர் தமைச்
சந்ததஞ் செய்கடனை யொன்றுமிவை பிழையாது
தான்புரிந் திட வில்லறஞ்
சாருநல முடையராந் துறவறத் தோருமிவர்
தம் முடன் சரியாயிடார்
அந்தரி யுயிர்க்கெலாந் தாய்தனினு நல்லவட்
கன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே (கூ௫)

புராணம்.

தலைமைசேர் பௌடிக மிலிங்கமர்க் கண்டமெழில்
சாரும்வா மன மச்சமே
சைவம் பெறுங்கூர்மம் வரும்வரா கங்காந்த
சரிதமே பிர மாண்டமும்
நிலைமைசே ரிப்பத்து முயர்சிவ புராணமா
நெடியமால் கதை வைணவம்
நீதிசேர் காருட நாரதம் பாகவத
நீடிய புராண நான்காம்
கலைவலர்சொல் பதுமமொடு பிரமவகை வத்தமே
கமலா லயன் காதையாம்
கதிரவன் காதைசூ ரியபுராணமாங்
கனல்காதை யாக்கினேயம்
அலைகொண்ட நதியும்வெண் மதியுமறு கும்புனையு
மத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே (கூசு)

புகழ்ச்சி.

பருகாத வமுதொருவர் பண்ணாத பூஷணம்
பாரின்மறை யாத நிதியம்
பரிதிகண் டலராத நிலவுகண் டுலராத
பண்புடைய பங்கே ருகம்

கருகாத புல்கலைக ளருகாத திங்கள்வெங்
காளிலுறை யாத சியங்
கருதரிய விக்குணமனைத் துமுண் டானபோ
காசினியி லருமை யாகும்
தெரியவுரைசெய்யின்மொழி கீர்த்திவருக்கல்விபொ
சீரிதய மீகை வதனங் [டு
திடமான வீரமிவை யென்றறிகு வார்களிச்
செகமெலாங் கொண் டாட்டவே
அருள்கற்ப தருவென்ன வோங்கிடுந் தானதுரை
யாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினிலை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (கள)

## திருமாலவதாரம்.

கோமுகா சுரனைமுன் வதைத்தமரர் துயர்கெடச்
சுருதித் தது மச்சமாஞ்
சுரர்தமக் கமுதீந்த தாமையாம் பாய்போற்
சுருட்டிமா நில மெடுத்தே
போமிரணி யாக்கதனை யுயிருண்ட தேனமாம்
பொல்லாத கனக னுயிரைப்
போக்கியது நரசிங்க முலகளந் தோங்கியது
புனிதவா மன மூர்த்தியாம்
ஏழுறு மிராவணனை வென்றவ னிராகவ
னிரவிகுலம் வே ரறுத்தோ
னேர்பரசு ராமன்வரு கண்ணனொடு பலராம
னிப்புவி யுபந்த விர்த்தோர்
ஆமினி பகற்கினி மேல்வருவ திவைபத்து
மரிவடிவ தருமை மதவே
ளனுதினமு மனதினிலை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (கஅ)

## சிவமூர்த்தி.

பிறைசூடி யுமைநேசன் விடையூர்தி நடமிடும்
பெரியனூர் வதுவை வடிவன்

பிச்சாட னன்காம தகனன்மற லியைவென்ற
பெம்மான் புரந் தகித்தோன்
மறமலி சலந்தரனை மாய்த்தவன் பிரமன்முடி
வெளவினோன் வீரே சுரன்
மருவுநர சிங்கத்தை வென்றவ ருமைபாகன்
வணசரன் கங்கா ளனே
விறன்மேவு சண்டேச ரக்ஷகன் கடுமாந்தி
மிக்கசக் கர முதவினோன்
விநாயகற் கருள்செய்தோன் குகனுமையுடன்கூ
மினிரேக பாதன் சுகன் [டி
அறிவரிய தக்ஷிணா மூர்த்தியொ டிலங்கமா
மையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. (கூகூ)

கவிவணக்கம்.

மலரிதழி பைங்குவளை மென்முல்லை மல்லிகை
மருக்கொழுந் துபர் கூவிளம்
மற்றுமுள வாசமலர் பத்திரஞ் சிலசூடி
மணிமுடி தனிற் பொறுத்தே
சிலெருக் கொடுவனத் துட்பூளை பச்சறுகு
செம்முள்ளி மலர் சூடவே
சித்தம்வைத் திடவுமங் கீகரித் திடுமகா
தேவ தேவா தெரிந்தே
கலைவல ருரைக்குநன் கவியொடம் பலவான
கவிராய னுகு மென்புன்
கவியையுஞ் சூடியே மனமகிழ்ந் திடுவதுன்
கடனாகு மடனாக மும்
அலைபெரு கங்கையுஞ் செழுமதிய மும்புனை
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவ னே. (ர

அறப்பளீசுரசதகம்-முற்றிற்று.

ளசிலை இட்டவன் ஏகாதசியிலுபவாசஞ் செய்தவனை
போல் இருவினைப்பயனை யொழித்திடுவான். பாத்திர
களில் அந்தணரைப்போன்ற பாத்திரமும், கோதானத்
தைப்போன்ற தானமும், கங்கைக்குச் சமானம்போன்ற
ீர்த்தமும, துளசிக்குச் சமானமான பத்திரமும் உலகத்
ிலில்லை. அன்புடன் கொடுத்தது பலம் பத்திர புஷ்பம்,
ல், தண்ணீரேனும் அதைக்கேசவன் ஏற்றுக்கொள்வான்''
'ன்று சொல்லுகின்றார். பாத்மபுராணத்தில் நல்ல
றவிலையும் மற்றை எந்த நைவேத்தியத்தையும் தே
னுக்குக் கொடுக்கவேண்டும். நைவேத்தியங் கிடைக்
ாவிடம் பழங்களேனும, அவைகளும் கிட்டாவிடத்துப்
ுல் பூண்டுகளேனும், அதுவுங் கிட்டாவிடத்துத் தண்
ணீரேனும் நிவேதனஞ் செய்யவேண்டியது. மோகத்தி
னலாவது சோம்பலினலாவது தேவதார்ச்சனம் செய்
யாதவர்கள் கடோமாகிய நரகத்தையும், பறவைகள் மிருக
ிபவைகளின் ஜன்மத்தையுமடைவார்கள். எவர்கள்கள
ங்கமற்ற மனத்தால் விஷ்ணுவைப்பூஜிக்கிறார்களோ அவ
ர்களுக்கு மீண்டும் ஜனனமில்லை. சாண்டில்லியர் கூறு
வதாவது:—"பூஜாகாலத்தில் ஹுங்காரமில்லாமலும்
பேசாமலும் மௌனமாக விஷ்ணுவை அர்ச்சிக்கவேண்
டும்'' என்பது. பூஜைக்கு வேண்டிய உபகரணங்கள்
அகப்படாவிடத்து மனத்தினலேயாவது தியானித்தல்வே
ண்டும். அங்ஙனஞ் செய்கிறவர்களுக்குத் திருமால் எல்
லாவற்றையும் அனுக்கிரகிப்பார். விஷ்ணுபூஜை செய்யா
தவர்களின் தானம் ஹோமம் தபசு இவைகள் பிரேதத்தி
ற்குச் செய்த அலங்காரம்போல் வாளாமுடியும். வேற்
றுமைப்படாத ஒரே குடும்பத்திலிருக்கும் சகோதரர்களு
க்குக் கடவுள் வழிபாடொன்றே. அதாவது ஒருவனே

செய்தாற்போதியது. சங்கிரகமென்னும் புத்தகத்தில் ஓர் சமையற்சோற்றைக்கொண்டு பிழைக்கும் குடும்பத்தினர்க்குப், பிதுர்கள், தேவதைகள், பிராமணர்கள் இவர்களின் பூஜை ஒன்றே போதுமானது. வேற்றுமைப்படின் அவர்களுக்கு வீடுகடோறும் வெவ்வேருகவே செய்தல் வேண்டும். "வஸ்திரம், அலங்காரம், தைலமுதலியமற்றைய பொருட்கள், மருந்து இவைகளைக்கடவுளுக்கு அர்ப்பித்தே யுட்கொள்ளல்வேண்டும்" என்று சாண்டில்லிய மகரிஷியினுடைய கருத்து. நாரதர் சாற்றுவதாவது:—"புருடசூக்தமென்னும் மகாமந்திரத்தால் புஷ்பங்களேனும், மற்றைத் தண்ணீரேனும் கடவுளுக்குக் கொடுத்தால் இதனாலுண்டாகும் பயன் அளவிறந்தது" என்பதே. பூஜைக்குப்பிறகு'ஜிதந்தே புண்டரீகாக்ஷ' என்று தொடங்கிய தோத்திரத்தால் நாடோறுங் கடவுளைத் துதித்து அவரது மலரடி பணிந்து தன்னை அவருக்கு அர்ப்பித்திடுவாராக. வியாசர் கூற்றியாதெனில்:— "விட்டுணுவினது பாததீர்த்தமானது பற்பல பாவங்களையொழிக்கும். அதே தண்ணீரைத் தரையில் காரணமின்றி வீழ்த்தினல் எண்மடங்கு பாபங்களை விளைவிக்கும். கடவுளது திருவடித் தீர்த்தத்தை யுட்கொண்டு கையைக் கழுவுதல் கூடாது. கழுவின் அதுகொடிய தீவினைக்கிடமாகும்" என்பது. சந்திரிகை யென்னும் புத்தகத்தில் உள்ளத்தில் கடவுளது திருமேனியும் முகத்தில் அவரது திருநாமமும் வயிற்றில் அவரது நைவேத்தியமும் சிரசில் அவருக்கு அர்ப்பித்த புஷ்பமும் பாதோதகமும் எவனிடமிருக்குமோ அவனே அச்சுதன். பக்விருசடரிசிஷ்டத்தில் "தேவதைகள், சித்தர்கள், இருடிகள் இவர்களால் விட்டுணு'நைவேத்தியம் மிகச்சிறப்புடைத்தென்றும் மற்

றைப் தேவதைகளுக்களித்த நைவேத்தியம் அங்ஙனமல்லவெனவும், அதை யுட்கொள்ளின் சாந்திராயண விரதமனுட்டிக்க வேண்டுமெனறும் சொல்லப்பட்டிருக்கின்றது. வியாசாசாரியர் நித்தியம் ஹரியைப் பூசித்தபிறகு ஸ்ரீபஞ்சாக்ஷரமுதலிய பற்பல மந்திரங்களால் மலபரிபாகிபாகிய ஒருவலே கண்ணுதர்பிரானைப் பூசிக்கவேண்டுமென்றார்.' சாளக்கிராம முதலிய கற்களில் கடவுளை வழிபடவேண்டுமேயன்றிப் பிரதிமைகளிற் பூசித்தற்கு விதி எங்குங்காணேமே எனின் "மாபாரதத்தில அழகிய திருமுகமும் திருக்கண்களுமமைந்த ஓர் பிமபத்தைத் தமது கருத்திற்கியைய வமைத்து அதை யர்ச்சிக்கவேண்டும், அதை வணங்கவேண்டும், அதைத் தரிசிக்கவேண்டும், அதையே தியானிக்கவேண்டும்'' என்று பிரதிமாராதனத்தை நேரில் விதித்திருப்பதால் அதைப்பற்றி இங்கு விரிவாக வரையவேண்டியதொன்றுமில்லை. எவ்விதத்திலும் கடவுள் பூஜையின்றிப் புசித்தல்கூடாது. "ஒவ்வொரு தினத்திற்கும் ஸ்நானம், ஸந்தியை, ஜபம், ஹோமம், கடவுள் வழிபாடு, அதிதிகளைப் பூஜித்தல், வைசுவதேவஞ்செய்தல், ஆகிய ஆறு நித்தியக்கிரியைகள்'' என்று பாராசரர் முதலிய ஆன்றோர்களால் கடவுள் பூஜை நித்தியமென எடுத்தோதப்படலாலென்க. தேவலரென்பவர் கூறுவதாவது:—"தேவர்களுக்கெனவும் அந்தணர்களுக்கெனவும பாகஞ்செய்யாது தனக்கெனப்பாகஞ்செய்பவுன் யாண்டும் பாவியாவான்'' என்றார். மனுவும் "தேவர்கள், இருடிகள், மானுடர்கள், பிதுர்க்கள், வீட்டிலுள்ள தேவதைகள் இவர்களைப் பூசித்துப் பிறகே இல்லறத்தவன் புசிப்பானுக'' என்று சாற்றியிருக்கின்றார். சூரியன் உதித்தபிறகு பத்துநாழிகையளவு முற்பகலென்

றும் ஏற்படுகின்றது. அங்கப்பகலில் மாத்தியாங்கிகானு ட்டானஞ்செய்தல்வேண்டும். பிறகு வைசுவதேவமனு டடிக்கவேண்டும். அதைத் தத்தஞ் சாகைகளிற் கூறிய படி அனுட்டித்து முடித்தல்வேண்டும். அவ்விதமே ஸ்மிருதிகளின் கருத்து. "வைசுவதேவஞ்செய்யாது பொழுத்தினங்களில் புசிக்கும் அந்தணர் காலசூத்திரமென்னும நரகத்தைப்பெறுவார்" என்று வசிஷ்டர் அறைகின்றார். பிறகு அதிதியைப் பூசித்தல்வேண்டும். அதிதியினிலக்கணம். தூரத்தினின்று வந்தவனும், வைசுவதேவகாலத்தில் நிகழ்ந்தவனும், சுயகிராமத்தவனல்லாதவனும், தன்னை முன்னறியாதவனு மென்பதே. "அதிதியும், பிரமசாரியும் பக்குவஞ்செய்த அன்னத்திற்கு உரியவராதலால் அவருக்கு அன்னங் கொடாது புசித்தல் கூடாது" என்று பாராசரர் மொழிகின்றார். எங்கு 'ஓர் துறவி புசிக்கின்றாரோ அங்கு ஹரியே புசிக்கின்றார். எங்கு ஹரி புசிக்கின்றாரோ அங்கு உலகமெலாம் புசிக்கின்றது" என்று கௌதமர் சொல்லுகின்றார். சாதாதபரின் அபிப்பிராயம்: "எவன் வீட்டிலுட்புகுந்த அதிதி தான் விரும்பியதை யடையாது திரும்புவான் அங்கு தம் பாபத்தை யொழித்து அவனது புண்ணியத்தை யடைந்து செல்வான்" என்றார். ஸ்மிருதி ரத்தினத்தில் "சூரியோடம்' என்னும் அதிதி திரும்பும் பாபம், கன்னில்லத்தினின்று அன்னம் பெறாத அதிதி பகற்காலத்திற் றிரும்புவதாலுண்டாகும் பாபத்தினும் எண்மடங்கு அதிகம்." சூரியோடனென்றால் இரவில் வரும் அதிதி. "புல்லும், நிலமும், தண்ணீரும், நல்வார்த்தையும் பெரியோர் வீடுகளில் எக்காலமும் குடிகொண்டிருக்கும்" என்று மனு

டுத்தோதியதின் கருத்து யாதெனில், பெரியோர் புகு தவிடம் ஆசனமில்லாவிடில் புல்லும், படுக்கையில்லா விடத்துப் பூமியும், அர்க்கியபாத்திரங்களில்லாவிடத்துத் ண்ணீரும், அன்னமில்லாவிடத்து நல்ல வார்த்தையும் ன்பது.

வெண்கலப்பாத்திரத்தில் இளநீரும், தாமிரப்பாத்திரத் ில் தயிர், மோர் நெய், பால், கரும்பின் சாறு, தேன், ப்புடன்சேர்ந்த பொருட்கள் ஆகிய இவைகள் கள்ளுக் குச் சமானமாகுமாதலால் அதை யுட்கொள்ளுதல் கூடாது. அவ்விதங்கொள்ளின் இறுதியில் "கூஜூதா" ன்றற்றொடக்கத்தின் மந்திரத்தை யுச்சரித்துச் சிறிது தண்ணீருட்கொள்ளல் வேண்டும். அடியிற் குறிப்பிட்ட பிரகாரம் போஜனஞ்செய்தவன் கடையில்உத்தராபோச னம் வாங்கி அதில் மிகுதியான தண்ணீரைக் கீழே வரை யப்படும் மந்திரத்தால் பூமியில் விடவேண்டும். அம்மந் திரம்: 'ரௌரவெ வுணு) மிஷெவஷூாவெ-ூஷ மிவா வலி நாம|கு-ூ நாஜொஷகூஂஷ தூஂ கூக்ஷய)ஜெ வெ-தி ஷதை' என்பது. உத்தராபோசனத்திற்குமுன் கையைக் கழு வுதல்கூடாது. அதற்குப்பின் கையால் போஜன பாத் திரத்தைத் தொடக்கூடாது. தொடின் கட்டிய துணி யுடன் ஸ்நானஞ்செய்தல்வேண்டும். பிறகு கையைச் சுத்திசெய்து பன்னிருமுறை தனது இடதுபுறத்தில் வா ய்கொப்பளிக்கவேண்டும். அங்ஙனஞ்செய்யும்பொழுது முகத்திலுள்ள நீரை யுட்கொள்ளல்கூடாது. முழங்கால் வரையில கால்களைக் கழுவிச் சிறு குச்சிகளால் பற்களைக் கிளையவேண்டும். பிறகு ஆசமனீயஞ்செய்தல்வேண்டும். ஆசமனீயஞ்செய்வதற்குமுன் சூத்திரர் முதலியவர்களை

ப்பார்த்தல் கூடாது. "ஆசமனீயஞ்செய்து கோமூஷு ஈ து' என்னும் மந்திரத்தால் வலதுகாற் பெருவிரலில் தனது கையினின்றுதீர்த்தத்தை விடல்வேண்டும். பிறகு உட்கார்ந்து அசைவற்ற மனத்தை யடைந்து கடவுளைத் தியானித்தல்வேண்டும். பிறகு தாமபூலாதி யுட்கொள்ளல்வேண்டும். வெற்றிலையின் அடியை யென்றால் வியாதியும் நுனியை யுட்கொண்டால் பாபமு முண்டாகும். சுண்ணும்பு வைக்கப்பட்ட வெற்றிலையை யெல்லின் ஆயுளைக்குறைக்கும். அதன் நரம்பு புத்தியை ஒழிக்கும். ஆதலின், அடி நுனி நரம்புகளையொழித்தும் சுண்ணும்பு வைத்திருந்ததை நீக்கியும் பிறவற்றையுட்கொள்ளுதலும வேண்டும். வெட்டாத பாக்கும தண்ணீரில் விட்டுக் கழுவாத வெற்றிலையும், நன்றாகச் சோதித்துப்பிர்க்காத சுண்ணும்பும் உட்கொள்வதால் குற்றங்கள் பலவுள. வாயில் வெற்றிலையில்லாமல் வெறும் பாக்கை யென்றால் அவன்ஏழுஜன்மத்திற்கு தரித்திரனும் ரோகத்திற்கும் பாத்திரமாவான். எக்காலத்திலும் தாம்பூலம உட்கொள்ளலாகாது. அவ்விதஞ்செய்தால் ஆயுள், பிரக்ஞை, பலம், விந்துசக்தி இவைகள் குன்றும். நாவில் ஓர்வித சுவையுமறியமுடியாது. அத்திரிபகவான் கூறுவதாவது:— பகல் தூக்கமும் பெண்களுடன் உறவும் கூடாது. நித்திரை செய்தால் ஆயுட்குறைவும், பெண்களுடன் புணரின் புண்ணியக்குறைவு முண்டாகும். அக்காலத்தில் இதிகாசம், புராணம், தர்மசாஸ்திரம் இவைகளைப் படிக்கவேண்டும். வீண்வார்த்தைகளையும் மற்றவரைக் குற்றங் கூறுதலையும நீக்கவேண்டும் என்பது. வியாசாசாரியார் கூற்று:—சூரியன் அஸ்தமனகாலத்தில் அவசியம் வீட்

டவிட்டு வெளிப்பட்டு மாலைக்கடனை முடிக்கவேண்
ம். எவன் குசங்களைக் கைக்கொண்டு கருத்தைக் கட
ள்பாலிருந்தி வெளியில் மாலைக்கடனை முடிப்பான் அவ
பொய், கள் காற்றம், பகலில் தூக்கம், பெண்ணுறவு,
த்திரான்னபோசனம் இவ்வகைக் குற்றங்களை விட்
டாழிவான். மாலைக்கடனை முடித்தபிறகு ஔபாசன
செய்து கடவுளை வழிபட்டு அதிதிகளைப்புசிப்பிக்கவே
ாடும் என்பது. சௌனகர் கூறுவதாவது:—

"ஜபம், ஹோமம், பூஜை, வேதாத்தியயனம் இவைகளை
ரவின் முற்பாதியிற்றானே செய்தல்வேண்டும். பிறகு
கந்தம், தாம்பூலம் முதலியவற்றைக்கொண்டு குடியி
லா வீடு, தேவாலயம், கடப்பு வழி, தானியசாலை, தே
ர், பிராமணர்கள் இவர்களின் முன்னிலை முதலியவிடங்
ளை யொழித்துக் கிழக்கு அல்லது தென்பாகத்தில் தன
ு சிரசை வைத்துத் தம்மில்லாளுடன் நித்திரை செய்த
வேண்டும். மேற்புறமும் வடபுறமும் சிரசைவைத்து
ங்கல்கூடாது. தன்னூர்விட்டு வெளியூரில் மேற்கே
லைவைப்பினும் வைக்கலாம். எக்காலத்தும் வடக்கில்
லையை வைத்தல்கூடாது. தனது மூங்கிற்றடியைச்
மீபத்தில் வைத்துக் கருடமந்திரங்களால் ரக்ஷை செய்
து சயனித்தல்வேண்டும். தலைப்புறத்தில் தண்ணீர்பா
த்திரம் ஒன்று வைத்துக்கொள்ளல்வேண்டும் என்றுரைக்
கின்றார். ரத்நாவலி என்னும் புத்தகத்தில் நித்திரை
செய்யும்பொழுது பகவானைத் தியானித்து நித்திரை செ
ய்யவேண்டுமென்றும் "இரவும் பகலும் நிர்மதைக்கு நம
ஸ்கரித்து விஷசர்ப்பங்களினின்றுந் தன்னைக்காக்கவேண்
டுமென்றுஞ் சொல்லியிருக்கின்றது. பெண்களுடன் ருது

காலத்திற் கூட்டுறவு செய்யவேண்டும். ருதுகாலமென்பது மாதவிடாய் கண்டதுமுதல் பதினாறு தினங்களாம். அவற்றுள் முதனான்கு தினங்களைத் தள்ளவேண்டும். ருதுகாலங்களில் உபவீதமாகவும், மற்றையகாலங்களில் நிவீதியாகவுமிருக்கவேண்டும். இருவரும் உடையின்றியிருத்தல் கூடாது. இரண்டு யாமங்களுக்குமேல் பெண்களுடன சயனித்தல்கூடாது. அக்காலம் மட்டில் அவர்கள் முகத்திற்குச் சுத்தியுண்டு. மிதமாகப்புசித்து நூறுமுறை ஜபித்து நூறடி நடந்து இடதுபுறத்தைக்கீழ் வைத்துப் படுப்பவனுக்கு வைத்தியத்தாற் பலன் யாதிருக்கின்றது என ஓர் மகரிஷி கூறுகின்றார். பாரதத்தில் ஒருவனை இனிய பொருளை அறுதல்கூடாதென்றும், ஓர் பொருளைப்பற்றி ஆலோசித்தல் கூடாதென்றும், வழிநடக்கக்கூடாதென்றும், பலர் தூங்க ஒருவன் விழித்திருக்கக்கூடாதென்றுஞ் சொல்லியிருக்கின்றது. இனிச் சயனகாலத்தில் அடியிற்கண்ட செய்யுளைப் படிக்கலாம்.

"க்ஷீரஸாகர தரங்க ஶீகராஸார தாரகித சாரு மூர்த்தயே| போகிபோகஶயநீயஶாயிநே மாதவாய மதுவித்விஷே நம:"

முற்றிற்று.

# விளம்பரம்.

ப்ரம்மவித்தியா அச்சியந்திரசாலையில் அச்சிட்டுத் தயாராயிருக்கும் புத்தகங்கள்.

---

| | |
|---|---|
| சிதம்பர மான்மியம் | 0—4—0 |
| சிதம்பர இரகசியம் | 0—0—3 |
| மும்மணிக்கோவை | 0—0—6 |
| ஆனந்தநடராஜர்பேரில் அழகிய குயிற்பண் | 0—0—6 |
| விபூதிமான்மியம் | 0—0—9 |
| சதாசார தீபிகை | 0—1—0 |
| ஆனந்த நடராஜர்பேரில் ஜாவளி | 0—0—2 |
| ஆன்மாவும் சரீரமும் | 0—0—3 |
| மறுபிறப்பு | 0—0—6 |
| அஷ்டாங்க யோகம் | 0—3—0 |
| மாதர்நீதி | 0—6—0 |
| மகாதேவமாலை | 0—0—6 |
| சிவசங்கர தீக்ஷிதர்கீர்த்தனை | 0—0—6 |
| Transmigration of souls (English) | 0—2—0 |

உ

கணபதிதுணை.

சைவ - எல்லப்பநாவலரால்

அருளிச்செய்யப்பட்ட

# திருவருணைக்கலம்பகம்

## மூலபாடம்

ரு-ம் பதிப்பு.

இஃது,

ஸ்ரீ-புஷ்பரத செட்டியாரால்

கலாரத்நாகரம்

என்னுந் தமது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1891.

௨

கணபதிதுணை.

# திருவருணைக்கலம்பகம்.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

அன்னவயல் சூழருணை யண்ணு மலையார்மேல்
மன்னுங் கலம்பகப்பா மாலைக்குத் - துன்னியசீர்
மெய்க்கோட்டு மேருவெனும் வெள்ளேட்டின் மீதெழுதும்
கைக்கோட்டு வாரணமே காப்பு.

### கட்டளைக்கலித்துறை.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொரு
மைவைத்த சீர்த்திருத் தேவார முந்திரு வாசகமும் [ள்வாய்
உய்வைத்த ரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே.

### மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

இது எட்டடித்தரவு - க.

மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரு மாதவனும்
அணிகொண்ட புண்டரிக மகலாத சதுமுகனும்
ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே
ஏனத்தின் வடிவாகி யெகினத்தின் வடிவாகி
அடிதேடி யறிவலெனா வவனியெலா முழுதிடந்தும்
முடிதேடி வருவலென மூதண்ட மிசைப்பறந்தும்
காணரிய வொருபொருளாய்க் களங்கமற விளங்குபெருஞ்
சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்.

## இவை ஈரடித்தாழிசை - எ.

மலைமிசையி லிருப்பதற்கோ மலைசிலையா வெடுப்பதற்கோ
மலையரையன் மகிழ்வதற்கோ மலையுருவ மெடுத்தனையே. (க)

இத்தலத்தி லைந்தொழிலு மிருபிறப்போ ரறுதொழிலுந்
தத்துவமுந் திருமேனி தரித்திலையே லியலாவே. (உ)

இருக்காதி சதுர்வேத மிசைப்பதுநின் பலபேத
மொருக்காலு மொன்றுரைத்த தொன்றுரைக்க வறியாதே. (ங)

கருமுடிவைத் தருகால கற்பமெலாங் கடக்கவுநின்
றிருமுடியிற் பிறைசிறிதுந் தேயாது வளராதே. (ச)

தானவரைக் கடிந்துமலர்ச் சதுமுகனை யொழித்துமற்றை
வானவரை யழித்துநின்கை மழுப்படைவாய் மழுங்காதே. (ரு)

அண்டருக்கு முனிவருக்கு மழலான கொடுவிடத்தைக்
கண்டமட்டு நுகர்ந்திடவுங் கண்டமட்டிற் கடவாதே. (சு)

மூவாமை தனக்குநின்றன் முதனடுவீ றிலாதமைக்குஞ்
சாவாமை பிறவாமை தமக்குமிவை சான்றன்றே. (எ)

## இவை நாற்சீரோரடியிரண்டுகொண்ட அம்போதரங்கம் - உ.

தடவரை நடைகெழு தரமென வருமொரு
கடகரி யுரிவிரி கலையென மருவினை. (க)

படமுடை யரவொடு பகைபடு முடுபதி
தடையற வுடனுறை சடைநெடு முடியினை. (உ)

## இவை முச்சீரோரடி அம்போதரங்கம் - ச.

சிலையென மலையை வளைத்தனை. (க)

திரிபுர மெரிய நகைத்தனை. (உ)

கலைமறை யிவுளி படைத்தனை. (ங)

கதிரவ னெயிறு புடைத்தனை. (ச)

## இவை இருசீரோரடி அம்போதரங்கம் - அ.

விதி சிரத்தினை (௧) நதி தரித்தனை (௫)
அகழ் கரத்தினை (௨) மதி பரித்தனை (௬)
விடை நடத்தினை (௩) நாள்க ளாயினை (௭)
பொது நடத்தினை (௪) கோள்க ளாயினை. (அ)

## இவ்வைபெயர்த்தும் ஈரடித்தாழிசை-௩.

பண்ணுநீ சுவையுநீ பரிதியுநீ பனிக்கதிர்நீ
யெண்ணுநீ யாணுநீ பேதமுநீ யபேதமுநீ. (௧)

செங்காலிற் கருங்காலன் சிரமுருள வுதைத்தனையே
சங்காழி முகுந்தனுக்குச் சங்காழி கொடுத்தனையே. (௨)

ஆராலு மளவிடுதற் கரியவனை யொருகரத்து
சீராலு மலராலு நெஞ்சுருகப் பணலாமே. (௩)

## இது தனிச்சொல்.

எனவாங்கு.

## இது பத்தடி நேரிசை ஆசிரியச்சுரிதகம்.

வேற்று மருந்தால் விடாதவெம் பிறவியை
மாற்று மருந்தா மலைமேன் மருந்தா
அழகிய நாயகி யருளுடை நாயகி
புழுகணி நாயகி பொருந்திய புனிதா
காசியி லிறந்துங் கமலையிற் பிறந்தும்
தேசமர் தில்லையுட் டிருநடங் கண்டும்
அரிதினிற் பெறும்பே றனைத்தையு மொருகால்
கருதினர்க் களிக்குங் கருணையை விரும்பி
அடைக்கலம் புகுந்தன னடியேன்
இடர்க்கடல் புகுதா தெடுத்தரு ளெனவே. (௧)

## நேரிசைவெண்பா.

வேதநுவல் சோணகிரி வித்தகர்க்கார் வேறுவார்
சோதியிய மானனிவர் சோமனிவர் - ஆதவனும்

மண்ணுங்கா லும்புனலும் வானுமழ லுனுமிவர்
எண்ணுங்கா லெல்லா மிவர். (௨)

## கட்டளைக்கலித்துறை.

எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசைவின்
அல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே
வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்த வந்நாள்
புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே. (௩)

## கலித்துறை.

போகம் விடுத்தே தாக மெடுத்தே புவிமீதே
யோகம் விளைத்தே யாக மிளைத்தே யுழல் வீர்காள்
ஆகமவித்தார் மோக மவித்தா ரருணேசர்
கோக னகத்தா ளாக நினைத்தே குழைவீரோ. (ச)

## அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

குழையடுத்த விழியிடத்தர் மழுவலத்த ரருணையத்தர்
குளிர்வெற் பூடே
மழையடுத்த துளிநனைக்க மடிசுருக்கி மயிர்பொடித்து
வருந்துஞ் சேதா
தழையடுத்த விடையர்பற்று குழலிசைக்கு மனமுருக்கித்
தளரு மாலை
பிழையடுத்த மொழியுணர்த்த தலைவருக்கு மிகவிரக்கம்
பிறப்பி யாதே. (ரு)

## எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

யாதவர் குலத்துநெடு மாதவன் மருப்புடைய
வேனமிரு கத்துருவ மாய்
வேதமொழி பெற்றவய னேதிம மெனப்பறவை
வேடமு மெடுத்த திலையோ

ஓதருணை வித்தகனா மூவரி லொருத்தனென
வோதியிடு மற்ப மதியீர்
சீதமதி வைத்தமுடி பாதமல னைச்சிறிது
தேடுதனி னைத்த பரமே. (சு)

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பரவை யாடினு நதிக ளாடினும்
படியெ லாநடந் தடிக டேயினும்
குரவ ராயினுங் கனலி னின்றதன்
கொதிபொ றுக்கினுங் கதிகி டைக்குமோ
அரவ மாடுசெஞ் சடில ரங்கணு
ரமுதர் தாணிணைந் தடியர் தம்மொடு
விரவி நீறணிந் தருணை சேர்வரேல்
வெற்ற ராயினு முத்த ராவரே. (எ)

பதின்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

முத்தமிழ்முறைமுறையன்பொடு
மப்பர்கவுணியர்சொல்சுந்தரர்
முப்பொழுதுமெதிர்புகழ்ந்திடு முதுநூலார்
அத்தரருணையினெடுந்திரை
தத்துதிருநதியின்மென்பெடை
யச்சமறவுடனணைந்துறை மடநாராய்
ஒத்தமனதொடுபுணர்ந்தவர்
சற்றுமகல்வதிலையென்றவ
ருற்றதுணையெனவிருந்தவ ருளம்வேறாய்
எத்தனைக்படநினைந்தவர்
கைப்பொருள்கருதிநடந்தன
ரெப்படியிறைவனைநம்புவ தினநாமே.(அ)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இனமகலு மருகர்மட மிசையிலிடு கனன்மதுரை
யிறைவனுடல் புகமொழிவரோ

கனகமுக படகவள கரடதட விகடமத
கரியின்மத மறகினைவரோ
வனமருவு மருமுதலை யொருமதலை தரவினிய
மதுரகவி மொழிமுதல்வரோ
அனகரபி னயாதுல ரமலரொம தருணைகிரி
யடிகட்டம தடியவர்களே. (கூ)

தலைவன் வினாவுதல்.

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அடியவர் சிந்தையி லினிதுறை சங்கா
ரருணைவ ளம்பதி யன்றோ
படியினெ டுங்கரி யனையம தங்கொடு
பதறிந டந்திடு மின்றோ
ஒடியு மருங்கென வுணர்கிலிர் நின்றினி
யொருவச னஞ்சொல வொண்ணதோ
கடியச ரங்களி னிளைஞரு டன்பல
கலகவி தம்பயில் கண்ணோ (கo)

அம்மானை - மடக்குத்தாழிசை.

நாரா யணனறியா நாதரரு ணேசருக்கு
வாரார் சிலைகலைமெய் மாதங்க மம்மானை
வாரார் சிலைகலைமெய் மாதங்க மாமாயின்
ஆராயுங் காலெடுப்ப தையமன்றோ வம்மானை
அன்னமறி யாரொடுப்ப தையமோ வம்மானை. (கக)

பாங்கி தலைவிக்குரைத்தல்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மானென்பார் கலையென் பார்கைம்
மலையென்பார் வழியே தென்பார்
ஏனென்பா ரிலையென் பார்யா
னேந்துமாந் தழைநன் றென்பார்

ஊனென்பார் கிறையுந் தாரா
 ருறையுந்தென் னருணை மானே
கானென்பார் குழலை வேந்தர்
 கருத்தென்னோ கருதுங் காலே. (௬௨)

புயவகுப்பு - ஆசிரியவண்ணவிருத்தம்.

கருணைமுக மண்டலத் தொளிர்மகர குண்டலக்
 கலன்மலிக வின்குழைக் குறவாயிசைந்தன
களபமகில் குங்குமத் தளறுகுடி கொண்டுதட்
 டியபுழுக ணைந்துமெய்ப் பனிநீர்துளைந்தன
கலைமதிம ழுங்கிநத் தினமிருள டைந்துமுத்
 தொளிகருக வெண்சுதைத் திருநீறணிந்தன
கனலிகைய ரிந்துகட் பரிதியைமு னிந்துதக்
 கனைமுடித டிந்துமைத் தலையேவழங்கின. (௬௨வ)
இரணியனு ரங்கிழித் தளவறும தங்கொழித்
 தெழுநரம டங்கலைத் தடமார்பிடர்ந்தன
இமயமட மங்கைபொற் புளகவிரு கொங்கையிற்
 சுவடுபட வின்பமுற் றதிலேகுழைந்தன
இரவிகிர ணங்கொழித் ததிசயமு டன்கிளைத்
 தெழுபவள வன்பொருப் பெனவேவளர்ந்தன
இதழியர விந்தமுற் பலமகிழ்செ ருந்திகட்
 குரவலரி சண்பகத் தொடையாணிறைந்தன. (௬௨௭)
தரியலர்பு ரங்கெடச் சுரர்நரர்ப யங்கெடத்
 தமனியகெ டுஞ்சிலைச் சிலைநாணெறிந்தன
தனுவலத கஞ்செயற் கமர்பொருச ரந்தரச்
 சரதமென வந்துமற் பொருபோர்புரிந்தன
சலசமலர் மண்டபச் சதுமுகவ யன்றிருத்
 தலையுடனி லங்குமுத் தலைவேலுவந்தன
தடவிகட கும்பமத் தகதவள தந்தநற்
 றறுகண்மத குஞ்சரத் துரிபோர்வைகொண்டன.(௬௨௮)

அருணகிர ணங்களிற் பலமணிநெ ருங்கிநச்
சரவமிளிர் கங்கணப் பணியான்மலிந்தன
அனவரத மம்பலத் தினிடமிடுந்தொழிற்
கபினயவி தங்கள்பெற் றழகோடிருந்தன
அருமறைதெ ரிந்தசொற் புகலியிறை-செந்தமிழ்க்
கரசினொடு சுந்தரப் பெருமாள்புகழ்ந்தன
அரிபிரமர் தங்களுக் கரியபத பங்கயத்
தருணையதி ருங்கழற் பெருமான்புயங்களே. (கரு)

## தலைவனைவேண்டல்

## மடக்கு-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

புயந்தழுவுங் கண்ணியுஞ்செவ் விதழி யேமால்
பூண்டகயற் கண்ணியுஞ்செவ் விதழி யேமால்
வியந்துசொலி னன்னதும்பொன் னிறமே யெங்கண்
மின்னிறமும் பொன்னிறமே புயம்பெ ருமல்
அயர்ந்திவள்வா டத்தகுமோ வருட்கண் பாரீ
ரருணகிரிப் பெரியீரோ யமல ரோகல்
வயந்தவிழா வழகரோ நினைக்க முத்தி
வரந்தருவா ரோமலைமேன் மருந்த னாரே. (கச)

## இரங்கல்-எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மலைமேன் மருந்த ரருணேச ரன்று வலைவீசி நின்ற வலையே, அலைமே னிறைந்து வருமீ னருந்தி யருகே யிடங்கொள் குருகே, முலைமேன் முயங்கு தலைநாளி லன்பர் மொழிகுண் மறந்த பிழையோ, தலைமேல் வனைந்த படியோ விருந்து தமியேன் வருந்து தகவே. (கரு)

## தலைவியைப்புகழ்தல்.

## எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தகனமுறுவலின்மதனைமுனிபவர் சடையிலணிபலதலையினர்
அகனலடியரொடுறையுமிறையவ ரருணைவளநகரரிவையார்

நிகரிறனதடவமுதநிறைகுட நிலவுமுகபடம்விலகினல்
ககனவமரருநரருமிகல்கொடு கலகமிடுவரிவ்வுலகிலே. (௬௬)

## இதுவுமது.

### மடக்கு - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

உலகமுண் டகனுய் வருசலந் தரனு
 ருடறடிந் திடுவார் கடல்விடங் கொளுவார்
குலவுசங் கரனு ரருணையங் கிரிசூழ்
 குளிர்புனந் தனிலே கிளிகடிந் திடுவார்
மலர்முகஞ் சசியே வடிவமுஞ் சசியே
 மகரமென் குழையே வருணமென் குழையே
முலையுமந் தரமே யிடையுமந் தரமே
 மொழியுமா சுகமே விழியுமா சுகமே. (௬௭)

## இரங்கல்.

### எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சுகமே சுகமே யிரும்வந் துபுனஞ்
 சூழ்கின் றவுமைத் தினமித் தினையுட்
புகமே யவிடா துகடிந் திடுமெம்
 பொல்லா மையுமின் றுபொறுத் திடுமின்
மகமே ருநெடுஞ் சிலையா ளரனு
 மலையா ரருணு புரிமால் வரைமேல்
அகமே செலுமா றுதுணிந் திதண்விட்
 டகறுன் பமுமன் பர்வரிற் சொலுமே. (௬௮)

### இதுவுமது-அறுசீர்க்கழிநெடில் ஆசியவிருத்தம்.

சொல்லா ரணத்திற் கரிவரியார்
 சோணு சலத்திற் சுகங்கடமைக்
கல்லா வெறிந்த பகைக்குவழி
 காட்டா தொழிதல் கண்டாயே

கொல்லா வம்புஞ் சமர்க்களத்திற்
குனியா வில்லுங் கொண்டுநிற்கும்
புல்லா டவனே யெமக்குறுதி
புகன்று ரெங்கே யகன்றுரோ. (ககூ)

பிரிவுவிலக்கல்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஆரும்வி ரும்பிய கல்விமே லாசையு மக்குள தாயிடின்
பாருற வென்பொரு பாவையாப் பாடிய பாவலர் போலவே
நீரும ருந்தமிழ் செப்பிடு நீர்மைய நிக்கிவ ணேகுவீர்
மேருநெ டுஞ்சிலை யத்தனுர் வீறரு ணுபுரி வெற்பரோ. (உO)

காலம்-மடக்கு.

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வெற்றிமதன் போர்க்காயம் பிறைக்குங் காலம்
வெங்கனலே போற்காயம் பிறைக்குங் காலம்
சற்றுமிரு கரமென்னே சங்கணியாக் காலம்
தலைவர்துறை மறந்தென்னே சங்கணியாக் காலம்
கற்றைநெடுஞ் சடைமுடியா ரடியார்மேன் முழுதுங்
கருணைநாட் டம்புரியு மருணைநாட் டுறையும்
பெற்றவிளக் தென்றன்மறு கிடத்தியங்குங் காலம்
பேதையேன் சிந்தைமறு கிடத்தியங்குங் காலம். (உக)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சாலிற் றுலங்கு நகத்தாலுங்
கையிற் பொலிகூர் நகத்தாலும்
சீலத் தரக்க னுரங்கொண்டீர்
திசைமா முகனைச் சிரங்கொண்டீர்
மேலைப் புரத்தை நகைத்தெரித்தீர்
வில்வேள் புரத்தைப் பகைத்தெரித்தீர்

சூலப் படையேன் மழுப்படையேன்
சுமந்தீ ரருணை யமர்ந்தீரே. (உஉ)

மாலையிரத்தல்-மடக்கு
அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அமர்ந்தரு ணைப்பதி வாழ்வீரே
யன்பர்க ளன்பிணி லாழ்வீரே
சுமந்தொளிர் சூலமெ டுப்பீரே
தோளணி மாலைகொ டுப்பீரேல்
இமந்தரு வெண்மதி காயாதே
யிருகணெ டும்புனல் பாயாதே
கமழ்ந்தகு ழற்கொடி வாடாதே
கங்குலு மிப்படி நீடாதே. (உங)

ஒன்பதின்சீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

நீடாழி ஞாலம் வானொடு தீகாலு லாவுமி யாவையு
நீறாய காலமாய் விடுநாள்
கோடாழி மால்பி தாமக னூறுன கோடி வீழ்தலை
கோடீர பாரமீ துறவே
சூடாத மாலை சூடுவர் தோளோடு தோளை வீசுவர்
சோணாச லேசர்சோ பனமா
ஆடாத வாட லாடுவர் பாடாத பாடல் பாடுவ
ராராத வோகைகூ ருவரோ. (உச)

புன்னாகங்கண்டிரங்கல் - கலித்துறை.

கூத்தாடுமருணேசர்வரையன்பர்பெரருள்ன்புகொண்டுன்னையும்
நீத்தார்கொனிழலாருமிலையாகின்றாய்நெடுங்காலமே
பார்த்தாலுமயலேகிளைத்தாய்சலித்தாய்பசுந்தென்றலால்
பூத்தாய்பொன்னிறமாகவென்னாகமேயன்னபுன்னாகமே. (உரு)

### இரங்கல் - மடக்கு.
### அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

நாகமெ டுத்தவ ரம்பானூர்
  நாலும றைக்குவ ரம்பானூர்
தோகையி டத்தவர் சேணூராய்
  சோணகி ரிப்பதி வாணூராய்
மாகம டுத்தவி ளங்காவே
  மன்னவ ரொண்ணம்வி ளங்காவே
கோகன கத்திமி ருந்தேனே
  கொண்கனை விட்டுமி ருந்தேனே. (உசு)

### ஊசல் - மடக்கு
### எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இருசரணச் சிலம்பாட வாடி ரூசல்
  லிளமுலைப்பொற் சிலம்பாட வாடி ரூசல்
மருவுகலை மருங்கசைய வாடி ரூசல்
  வரிவளைக்கை மருங்கசைய வாடி ரூசல்
அருமறைக ளளவிடுதற் கரிதா மைய
  ரருணகிரிப் பரமர்புக ழடைவே பாடிப்
பொருமிருகட் கயலுலவ வாடி ரூசல்
  புயமதனன் கயலுலவ வாடி ரூசல் (உஎ)

### பாங்கிசொல்லுதல்
### எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஊசலு கைத்திடுவார் குன்றெதிர் கூவிடுவா
  ரொன்டர ளங்கொளுவார் தண்டலை கொய்திடுவார்
ஆசில்பு னற்குடைவா ரம்மனை டங்குதழ்ங்
  காடிம கிழ்ந்திடுவார் சோடிம டங்கியரோ
ஈசர்வி டைக்கொடியார் பூசைசெ யற்கெளியா
  ரோரரு ணைப்பதிசூழ் மேருவி னிற்கவணே

வீசுதி ணைப்புனமே யாவமொ னத்தெளியேம்
வேலர்ம னத்திடையே மாலைவி ளைத்தவரே. (உஅ)

## மடக்கு - கலிவிருத்தம்.

மாலையென்பாங் கலத்தாரு மறைநாறுங் கலத்தாரும்
கோலமன்னே கலத்தாருங் குறைவில்பரி கலத்தாரும்
மாலைவில்வேள் சலத்தாரு மதர்த்தமதா சலத்தாரும்
மேலகலாச் சலத்தாரும் விளங்கருணை சலத்தாரே. (உகூ)

## தலைவியைப்புகழ்தல்

## அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அருணனொளி தனிலுமொளி ரருமலைம ருந்தாய
மலரதி ருங்கழலினர்
மருமலர்வி ரிந்துநதி பெருகருணை யம்பதியின்
மருவியம டந்தையிடையாம்
ஒருகொடியி லொன்றுகமு கொருபவள மொன்றுகுமி
ழொருமதிய மொன்றுபிறைதான்
இருசிலையி ரண்டுகணை யிருபணையி ரண்டுகுழை
யிருமுலையி ரண்டுமலையே. (ஙo)

## எழுதரிதென்றல்

## எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மலையாச னத்தர்மலை மயிலாச னத்தரொழு
மலையாநி லத்து வருவார்
அலையாச னத்தரொடு மமிர்தாச னத்தர்தொழு
மருணாச லத்தர் வரையீர்
முலையானை கட்டியிடை வெளிதோர்நி றுத்திமதி
முகமாய மைத்தரு குலாம்

இலைவேல்ப ரப்பியினி தெழுதோள மைப்பனினி
யெழுதேனி ருப்பு மனமே. (௩க)

## இரங்கல்-சிலேடை-கட்டளைக்கலித்துறை.

மேலாடை தோற்றணி சங்காழி கைவிட்டு மென்சிலம்பின்
காலால் வருந்தி நிலங்கீறுங் கோலத்தைக் கண்டிருந்தும்
ஆலால முண்டவ ரண்ணு மலையர் தமன்பர்க்கன்றி
மாலான வர்க்கிரங் காரிங்ஙனேயொரு வன்கண்ணரோ. (௩உ)

## நேரிசைவெண்பா.

கண்ணருக்கும் போதருக்குங் காண்பரிதாய்க் கண்பறித்த
திண்ணருக்கு நன்றாய்த் தெரிந்ததே - விண்ணருக்காப்
போற்றுவா ரண்ணூர் புரமெரித்தா ரென்பிறவி
மாற்றுவா ரண்ணு மலை. (௩௩)

## இரங்கல்-கலிவிருத்தம்.

அண்ணு மலையத் தரடற் கிரிமேல்
எண்ணு மலையத் தவரொய் திலரால்
கண்ணு மலையத் தனைநீர் கலுழும்
விண்ணு மலையத் தரும்வெண் மதியே. (௩ச)

## பாங்கன் துணிவு.

## எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மதுவானி றைந்தகுழன் மடவார்நெ ருங்கருணை
மலைமேன்ம ருந்தர் வரையில்
முதுநீரில் வந்தவவ ரடையாள மென்றிறைவர்
முதலேமொ ழிந்த படியே
இதுநாக மன்றுமுலை யிதுபூக மன்றுகள
மிதுமேக மன்ற ளகமே

அதுநீல மன்றுவிழி யதுசாப மன்றுநுத
லதுகோப மன்ற தரமே. (நக)

நாரைவிடுதூது.

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அருணை வெற்பின ரயனி ருக்கவு மரிபி ழைக்கவு மாகவே
திருமி டற்றொரு கருமை வைத்தவர் திருநிக்கய றேடியே
கருது நெட்டுட லசைவ றத்துயில் கபட நித்திரை நாரைகாள்
இருக ணித்திரை யிலையெ னச்சொல விறைவர் பக்கலி லேகுமே.

பாங்கிதலைவிக்குரைத்தல் - கட்டளைக்கலித்துறை.

ஏகார் புனத்துத் தழையாற் கரிபட்ட தென்பனொன்றும்
போகாத வூர்க்கு வழிதேடு வார்புலிக் கான்முனியும்
நாகா திபருந் தொழுமரு ணாசல நாட்டிலிளந்
தோகா யணங்கனை யாயவர்க் கேதுசொ லத்தக்கதே. (நஎ)

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சொர்க்கமெனு மொருபதவி யிருக்க மாலைத்
துளவணியு மரிபதவி யிருக்க மேலை
நற்கயிலை மலையிருக்க நினைத்தோர்க் கெல்லா
நயந்தமுத்தி நகரமொன்றே நல்கா நிற்பீர்
பொற்கையினு லுமைவணங்கிப் பரிந்து பூசை
புரிந்துதவந் தெரிந்துதினம் புகழ்வோர்க் கெல்லாம்
எற்குலவு புகழருணை யீச னாரோ
யினிதளிக்கும் பதவிதனக் கென்செய் வீரோ. (நஅ)

சித்து-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வீரத்தை யணிமருவா ருமைப்பங் காளர்
விளங்கருணைச் சித்தர்யாம் விளம்பக் கேளா
காரத்தை யெமக்கிடுகஞ் சத்தை யேகோ
கனகமெனக் காட்டிடுவோங் கரியோ ருக்குத்

தாரத்தைப் பொன்னாக வமைத்தோந் தம்பீ
தாம்பரமும் பொன்னாகச் சமைத்தோ மிந்தப்
பாரத்தை யாரறிவா ரயனா கத்தைப்
பசும்பொனிற மாகவுமே பாலித் தோமே. (௩௯)

இதுவுமது

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பாதமெமக் களித்தவரு ணேச னார்க்கின்
பச்சிலைபொன் செய்திமையோர் பசிநோய் தீர
ஓதுகடை மருந்தளித்த சித்த ரோம்யா
மொருபிடிசோ றல்லதுகூ ழுண்டோ வப்பா
மாதவர்தந் திருவாணை கரிக ளெல்லா
மாதங்க மாக்குகிற்போ மருந்தில் லாதே
ஏதமற நாகமொளித் தராவாச் செய்வோ
மிரும்பையும்பொன் னாகவுனைத் திசைவிப் போமே. (௪0)

தலைவியைப்புகழ்தல்

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இதழி யந்தொடைய ரருணையங் கிரியி
லிரத முந்திவிடு வலவனே
பதிய டைந்துமறு கினில்வ சந்தனதி
படையெ ழுந்தது பகருவேன்
புதிய கொம்புசிலை வளையி ரண்டருகு
பொழியும் வெம்பகழி போரரு
உதய தந்தமத களிறு டன்கதலி
யுபய தண்டுவரு கின்றதே. (௪க)

ஒன்பதின்சீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வரைக்கனக சாப சோண கிரிப்புனித கால கால
மதிக்குநெடு மாயர் போலவே

தாைக்குளினி யாரியாவ ரவர்க்குமுனி லாமனீடு
 தழற்சிகரி யாக னீதியோ
விாைக்கமல வோடை யாவர் புரத்தைமுனி பாண மாவர்
 விரித்தகொடி யாவ ரீதலால்
இரக்குமனே தோறு மேறி நடத்துமெரு தாவர் மேவி
 யிடத்திலுறை தேவி யாவரோ. (சஉ)

## கட்டளைக்கலித்துறை.

ஆனிட பக்கொடி சோணு சலனென்று மன்பர்மலர்
தானிட முத்தி தரும்பெரு மானென்றுஞ் சம்புவென்றும்
கானிட வேடன்முன் னூனிட வுண்டது கண்டுமொரு
மானிட மானவ னைத்தேவர் செய்வதென் வந்தனையே. (சங)

## களி - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தனையிருக்கு மறைதுதிக்கு மருணை நாதன்
 சரணமலர் புகழ்களியேஞ் சக்ர பூசை
வினையிருக்கு மவர்க்கெளிதோ வரிதா னையோ
 விதிவசத்தால் விவரமற்ற விதஞ்சொல் வேனே
பனையிருக்க நெடியகஞ்சா விருக்க வீணே
 பச்சையா லிலைதுயின்றான் பனையன் றேளி
யனையிருக்கப் பணிதுயின்றான் மதுவாந் தெய்வ
 வாழிவிட்டுப் பாற்கடன்மீ தழுந்தி னானே. (சச)

## களி - நேரிசைவெண்பா.

ஆனூர் கொடியா ரருணை புரிக்களியேம்
வானூட ரோனே மதியற்றார் - மேனாளில்
சும்மாகஞ் சாவிலையே தூளிடித்துத் தின்றாலும்
தும்மாகஞ் சாவிலையே தான். (சரு)

## பிச்சியார்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தாமணிவர் திரிசூல மெதிர்கண் டார்மேற்
 சக்கரத்தை விடுவர்சிவ சமயத் தாவர்

காமுகரை யாண்டுகொள்ளார் சிவநூல் கேட்பர்
கருத்தினின்மா றெரிசனமே காட்டா நிற்பர்
ஆமையர வணிதொடையார் விடையார் வாழு
மருணகிரி வளநாட்டி லகங்க டோறும்
சேமநிதி யெனவுலவும் பிச்சி யார்தந்
திருப்பெயரை வெளியாக்கித் திரிகின் றாரே. (சசு)

இதுவுமது - மடக்குக் கட்டளைக்கலிப்பா.

தில்லை மன்றுண டம்புரி பாதனூர்
தேவ ராயர் திருவரு ணைக்குளே
முல்லை மல்லிகை சண்பகம் பிச்சியார்
மொய்த்த வார்குழன் மோகனப் பிச்சியார்
நல்ல மேனியும் பொற்றிரு வேடமே
நாடி யிட்டதும் பொற்றிரு வேடமே
இல்லை யாயினு மிவ்விடை யையமே
யேற்க வந்தது மிவ்விடை யையமே. (சஎ)

கார்கண்டு பாகனொடுசொல்லல்.
கட்டளைக்கலித்துறை.

அயங்காட்டியமறையார்விடையாளரருணைவெற்பில்
புயங்காட்டியமணித்தேர்வலவாமுன்புபோனகொண்டல்
சயங்காட்டிக்கோபமுஞ்சாபமுங்காட்டித்தடித்திடித்துப்
பயங்காட்டினலஞ்சுமேதனியேநின்றபைங்கொடியே. (சஅ)

நேரிசைவெண்பா.

பைங்கட் புலிக்குப் பரிபவத்தைக் காட்டிநர
சிங்கத் தினையடர்த்துச் சீறியே - வெங்கைப்
புழைக்குஞ் சரமுரித்துப் போர்க்கு மருணைக்கே
தழைக்குஞ் சரபமொன்று தான். (சகூ)

குறம் - பதினன்குசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஒன்று மூன்று நாமு ளாக்க வந்து கேளு மிவைமீ
ருதய மான சுளகு நெல்லு மொற்றை பட்ட தாதலால்

கன்று மானு மழுவு மாக வொருவர் வந்து தோன்றினர்
கண்ட மட்டி லேக றுப்பர் கைக்க பால ரவரையும்
சென்று நாடி லருணை மீது காண லாகு நாமமுந்
தேவ ராய ரவர லாது தெய்வம் வேறு கண்டிலேம்
நின்று வாடு மிவட னுசை யிடர்த வீர்ப்ப ராதலா
னீறு கொண்டு மூன்றி ரேகை நெற்றி மீதி லெழுதுமே.()

## இரங்கல் - இதுவுமது.

நெற்றி மீது கண்ப டைத்த வும்மை மார னெய்வனோ
நீர ணிந்த வரவி ருக்க நெடிய தென்றன் முடுகுமோ
வெற்றி யான தாளி ருக்க மதிய மும்மை நலியுமோ
விரவு கங்கு லுமது கண்கள் வெயிலின் முன்பு நிற்குமோ
கற்றை யான குழலி யெந்த வுதவி கொண்டு பகைவெலும்
கருணை கூர்தெ னருணை மேவு கலியு கத்து மெய்யரோ
செற்ற லார்கள் புரமெ ரித்த புழுக ணிப்ர தாபரோ
தேவ ராய ரேசு கந்த தினவ சந்த ராயரோ. (ருக)

## கார்காலம்

## அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தினைப்போது தானே நினைத்தாலு மேலோர்
சிறப்பான பேறீகுவோர்
வனத்தாடு சோணு சலத்தாடு தீரா
மயிற்பேடை காளோடைகாள்
வினைப்பாவி யானேன் விழிப்பாயு நீரான்
மிகுத்தேறு கார்காலமே
தனித்தாவி சோர்வார் தமக்கால மேநீள்
சரற்கால மேகாலமே. (ருஉ)

## இளவேனில் - நேரிசை அகவற்பா.

காலையு மாலையுங் கைம்மலர் குவித்து
மாலு மயனும் வணங்குதற் கரியோன்

இமைக்குமு னுலக மியாவையும் படைத்தோன்
தனக்கொரு தாயுந் தந்தையு மில்லோன்
பழவினைக் கயிற்றிற் பல்லுயிர்ப் பாவை
அழகுற நடிக்கத் திருநடம் புரிவோன்
வினைவலை யறுக்கு மெய்த்தவ வேடன்
மனவலைப் பிணிக்கு மான்மத நாதன்
பேறு மறுபத் தாறு யிரம்பொன்
மாறுத் தியாக வசந்தவி நோதன்
அண்ணு மலைய னதிருங் கழலன்
கண்ணு ரமுதன் கைலைப் பொருப்பின்
மறலித் திசையின் மலயா சலமென
இருத்திய துருத்திகொண் டிளங்கால் பரப்பிக்
காவலைப் பல்லவக் கனலு வசைப்பக்
குறைவறு குயில்வாய்க் குறட்டினி லடக்கிப்
பொறிதிக ழரிக்கரி யதனிடைச் சொரிந்துள்
இசைத்திடு மஞ்சரிப் பசைக்கோ லசைத்து
மதவீ ரனுக்கு வசந்தக் கருமான்
பணிமலர்ச் சாயகம் பண்ணி நீட்டினன்
இன்னமும் வந்திலர் கேள்வர்
புன்னையங் கருங்குழ லன்னமென் னடையே. (ருரு)

மடக்கு - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அன்னியமா சடையாரும் பின்னியமா சடையாரு
மடிமாற நடித்தாரு முடிமாற னடித்தாரும்
உன்னுமற மொழிந்தாரும் பின்னுமற மொழிந்தாரு
முகைத்திடுமோ னேற்றாரு மிகைத்திடுமோ னேற்றாரும்
என்னகத்தா முரியாருங் கொன்னகத்தா முரியாரு
மெருக்கிதழி மணத்தாரு முருக்கிதழி மணத்தாரும்
வன்னிவடி வனத்தாருஞ் சென்னிவடி வனத்தாரும்
வருகருணைப் பதியாரும் பெருகருணைப் பதியாரே. (ருச)

சம்பிரதம்

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பரவைபொ ருக்கெழவுங் ககனம்வ டுப்படவும்
பரிதிவ டக்கெழவு நிருதிகு ணக்குறவும்
இரவுப கற்படவும் பகலிர வொத்திடவு
மெளிதினி யற்றிடுவோ மிவைசில வித்தைகளோ
அரவம ணிப்பணியா னனலகி ரிப்பெருமா
னருணகி ரிக்கிணையா வவனித லத்திடையே
கருதிம னத்தினிலே சிறிதுநி னைத்தளவே
கதியைய ளித்திடுமோர் பதியுமு ணர்த்துவமே. (ருரு)

கருணைச்சிறப்பு - நேரிசைவெண்பா.

உள்ளத்தின் ஞான முயர்ந்தவிடத் தன்றியிருட்-
பள்ளத்தி லென்றும் படராதே - வள்ளல்
அருணா சலப்பெருமா னம்பிகையோர் பாகன்
கருணா சலமாங் கடல். (ருசு)

பாண் - அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கங்கை வார்சடைப் பரமர்தென் னருணையிற்
கடைதொறு நீபாட
அங்கை யாலிரு செவிபுதைத் தேத்துவோ
மருச்சுனன் றிருநாமம்
ஏங்கை மார்செவி பொறுக்குநின் னிசையெனு
மிடிக்குரன் மகிழ்வாரார்
மங்கை மார்செய லறிந்துகொள் பாணனே
மயிலெனப் புகழ்வாயே. (ருஎ)

தலைவியைப்புகழ்தல்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

புடைசெறிந் தளிபாடு மிதழியந் தொடைமார்பர்
புலிபதஞ் சலிநாடுவார்

மடையிளங் கயலுவு மருணையங் கிரிமீது
மலரணங் கெனமேவுவார்
நடையுமிந் திரவேழ மிருகையிந் திரதாரு
நயனமிந் திரநீலமே
இடையுமிந் திரசால நுதலுமிந் திரசாப
மிதழுமிந் திரகோபமே. (ருஅ)

உருவெளி - கலிவிருத்தம்.

இந்திர கோபமா மிதழி பாகனூர்
செந்தமி ழருணைநந் தேருஞ் செல்லுமே
சந்திர ரேகையுஞ் சமர வாளியும்
மந்தர மேருவும் வளைந்து கொண்டவே. (ருகூ)

தலைவியைவியத்தல்
எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கொண்டலணி கண்டர்நிறை கங்கையணி செஞ்சடையர்
கொம்பரொரு பங்கி லுறைவார்
அண்டபகி ரண்டமள வங்கியென நின்றவதி
ருங்கழலர் தங்க ருணையீர்
கண்டுளது கொண்டன்மிசை திங்களெழு கின்றதிது
கண்டதிலை யுங்கண் முகமா
மண்டலமெ னும்புதிய திங்கண்மிசை கொந்தளக
மஞ்சுகுடி கொண்ட வடைவே. (சூ0)

நேரிசைவெண்பா.

அடுத்தமதிச் சென்னியின்மே லம்பிருக்கு மற்றோர்
இடத்திலே நாரி யிருக்கும் - தடக்கையிலே
ஏந்துசிலை விட்டிருக்கு மெம்மருணை நாதனூர்
போந்து புரமெரித்த போது. (சூக)

கார்காலம் - கலித்துறை.

போதற்குமரிதானவருணசலத்தீசர்பொன்மேருவாய்
ஏதப்படும்பாவிமனமேபிரிந்தாரிதெண்ணூர்கொலோ

ஓதத்தினீரோடுகனலுண்டுபுயன்மீளவுமிழ்தன்மைபோல்
காதற்குண்மடவார்மெய்பொன்பூசுமின்வீசுகார்காலமே. (௬௨)

## தலைவியைவேண்டல் - கொச்சகக்கலிப்பா.

கார்வந்தா லன்னகறைக் கண்டனூர் செங்கதிரோன்
தேர்வந்தா லும்பொழில்சூழ் தென்னருணை நன்னாட்டில்
ஆர்வந்தா லுந்தணியா தன்னமன் னீராறும்
நீர்வந்தா லாசை நெருப்பவியுங் காணுமே. (௬௩)

## பனிக்காலம் - கலித்துறை.

ஏணம்பரந்தோலினுடையாளருணேசர்கைலாசமேல்
தூணங்கணிகர்தோளருண்றகின்றநகரூடுசொரியாதரோ
பூணாக்கைவளைசிந்தமடவார்மனத்தேறுபுகைபோலவேள்
டாணாங்களுதிர்கின்றதுகள்போலவுறைகால்பனிக்காலமே. ( )

## நேரிசைவெண்பா.

டண்ணிறந்த வாசவரிற் பல்கோடி மாண்டாலும்
எண்ணிறந்த வேத ரிறந்தாலும் - கண்ணற்
கமைத்தவெலா மாண்டாலு மண்ணா மலையார்க்
கிமைப்பளவுங் கால மிலை. (௬௫)

## தலைவனைவேண்டல்
## ஒன்பதின்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இலைகொளி பரந்து மாரன் விடுகணை துரந்து நாடி
யிடுமிரு நெடுங்கண் மாதரார்
இலகரிய கொங்கை மீது பழநழுவி வந்து பாலின்
விழுவதென வந்து சேர்கிலீர்
மலகரி குறிஞ்சி தேசி வைரவி சுரும்பு பாடும்
வயலருணை மங்கை பாகரோ
பலமலர் கதம்ப தூளி மிருகமத சுகந்தம் வீசும்
பரிமள வசந்த ராசரோ. (௬௬)

## மதங்கு.

### ஒன்பதின்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வசிகரம் வயங்கு நீறு மபிநய புசங்க ராச
 வலயமு மணிந்த தோளினர்
அசலகுல மங்கை பாகர் பரிமள வசந்த ராச
 ரருணையின் வளங்கள் பாடியே
இசைபெற வரங்கி னூடு பவுரிகொண் மதங்கி யார்த
 மிலகிவளர் கொங்கை யானையே
திசைபெற விருந்த யானை பிறகிட முனிந்து போர்செய்
 திறலிப மனந்த மானவே. (சுஎ)

### இதுவுமது - மடக்குக்கட்டளைக்கலிப்பா.

நதியைச் சூடதி ருங்கழ லுதனர்
 நம்ப னாரரு ணபுரி வீதிமேல்
சதியிற் பாடிந டிக்கும தங்கியார்
 தந்த வாசைத ரிக்கும தங்கியார்
வதனத் தாற்சசி மண்டல மாறுமே
 வந்தி ருந்தவிம் மண்டல மாறுமே
கதியிற் கொண்டது மந்தக் கரணமே
 கண்ட பேர்க்கிலை யந்தக் கரணமே. (சுஅ)

### குறம் - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

அருணமணி முலைக்கிரிமேற் செங்கை வைத்தா
 யாகையா லருணகிரி யன்பன் மூதூர்
வருணமுலை கண்ணாரப் பார்த்தா யுன்றன்
 மகிழ்நனுங்கண் ணாமுதன் வந்து கேளாய்
தரணியிலுன் றனைச்சேர்வன் முருகர் போலத்
 தநயனையும் பெறுவையிவை தப்பு மாயின்
திருநிறைவண் டார்குழலாய் குறமும் பாடேன்
 சிறந்தகுறக் கூடையும்யான் றீண்டி லேனே. (சுகூ)

### மறம் - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தீண்டரிய மடற்பனையின் சருகை வாரிச்
சிற்றிரும்பாற் சுற்றிவரச் செருக்கிக் கூட்டி
நீண்டதுவுஞ் சுருண்டதுமா வளைந்து சுற்றி
நிருபமெனக் கொடுத்தெதிரோ நிற்குந் தூதா
தாண்டவமா டும்பரனு ரருணை நாட்டிற்
றருமறப்பெண் டனைவேண்டிச் சமரிற் போந்து
மாண்டவரோ டியகோணல் வளைக ணுங்கள்
வருங்கல்வழி வாயினடு மரங்க டாமே. (எ0)

### மடக்குக் கலிவிருத்தம்.

மறைக்கவனப்பரியாரும்வளைக்கவனப்பரியாரும்
எறித்துவிரும்பிறையாருமெவரும்விரும்பிறையாரும்
பொறுத்தசினவிடையாரும்பொருந்துசினவிடையாரும்
அறத்தவளம்பதியாருமருணைவளம்பதியாரோ. (எக)

### கலித்துறை.

ஆரணி துங்க னாரணி பங்க னருணேசன்
தாரணி யஞ்சுங் காரண நஞ்சந் தரியானேல்
வாரண னெங்கே சாரண னெங்கே மலர்மேவும்
பூரண னெங்கே நாரண னெங்கே போவாரோ. (எஉ)

### தழை - கட்டளைக்கலிப்பா.

போந்த போதக நல்லுரி யாடையார்
போர்வை யாளர் புகழரு ணைக்குளே
ரந்த சூத நறுந்தழை யையனே
யெங்கண் மாத ரெடுத்து மகிழ்ச்சியாய்
மோந்த போது துவண்டது மெய்யிலே
மொய்த்த போது புலர்ந்தது கண்ணினீர்
பாய்ந்த போது நனைந்தது மீளவும்
பார்த்த போது பசந்து மலர்ந்ததே. (எங)

## இரங்கல் மடக்கு
### எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மலரித ழித்தொடைபான் மதியணி வித்தகனுர்
மலைமக ளற்புதனுர் வயலரு ணைப்பதிசூழ்
குலவுமி டக்கழியே பலவுமி டக்கழியே
குறவையி னக்கயலே யுறவுமெ னக்கயலே
சலமிகு முற்பலமே தளர்வது முற்பலமே
சருவும னத்திடரோ தழுவும னத்திடரோ
இலைசெறி சற்பனையே யிவருனா சற்பனையே
யினியப ணித்திரையே யினியிலை நித்திரையே. (எச)

## சுவடுகண்டிரங்கல்
### எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

நித்த னம்பனரு ணுச லத்திருவை
நின்று தேடியுழ னெஞ்சமே
இத்த டஞ்சுரம டங்க வோவிதல
தில்லை வேறுமர மிதனிடை
அத்தி நின்றவிட மவ்வி டஞ்சிலைகொ
ளரசு நின்றவிட முவ்விடம்
எய்த்து ளஞ்சியிள வஞ்சி நின்றவிட
மிவ்வி டஞ்சுவடு மேவுமே. (எரு)

## மடல்விலக்கு - கலிவிருத்தம்.

ஏறுடை யண்ணலா ரேழை பாகனுர்
ஆறணி சென்னியா ரருணை வெற்பரோ
கூறொரு பெண்ணையே கூட வேண்டுவார்
வேறொரு பெண்ணையே வெட்டு வார்கொலோ. (எசு)

## தவம் - எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வாய்ந்தநல மருந்தருந்தி யரிய யோக
வகைபுரிந்து வாயுவுள்ளே யடக்கினுலும்

காய்ந்தவிருப் பூசியிலே தவஞ்செய் தாலுங்
காயம்வருந் திடுவதல்லாற் கதிவே றுண்டோ
ஆய்ந்ததிரு நீறணிந்தைந் தெழுத்தை யோதி
யகமகிழ்ந்து சிவாகமத்தி னடைவை யோர்ந்தே
ஏய்ந்தருணு சலத்தைவலங் கொண்டா ரன்றோ
விமைக்குமுன்னே கைலைமலை யிடங்கொண் டாரோ. (எஎ)

மாலையிரத்தல்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இலங்கியதிங்களெழுந்தாலெங்கண்மின்வெங்கதிரொன்பாள்
கலங்கினளாயினுமன்னுள்கட்கமலங்குவியாவோ
துலங்கியவெங்கதிர்தானேசோணகிரிப்பெருமானே
அலங்கலையென்றுகொடுப்பாயன்றதுவெண்மதியாமே. (எஅ)

நேரிசைவெண்பா.

ஆற்றுங்காற் கஞ்சத் தவர்தா மரைக்கண்ணர்
சாற்றுங்காற் கண்ணரவர் தந்தையார் - கீற்றுமதி
சூடும் பெருமானைச் சோணகிரி வித்தகனைத்
தேடுவதிங் கெப்படியோ சேர்ந்து. (எகூ)

கட்டளைக்கலித்துறை.

சேணுர்திருவுடைச்செல்வனைக்காணிற்சிறப்புச்செய்து
பேணுதவருமுண்டோபுவிமீதிற்பெருத்தெழுந்து
சோணசலவடிவாய்வெளியாய்நின்றசோதிதனைக்
காணுதகண்ணனைச்சொல்வர்செந்தாமரைக்கண்ணனென்றே. ()

தவம் - நேரிசைவெண்பா.

என்றுமதிக் கண்ணு ரிறைவரரு ணைபுரியில்
நின்றுதவம் புரியாய் நெஞ்சமே - பொன்றிரளான்
மாதனையா னுயிழைசூழ் மாதனையா னீதுவண்டு
மாதனையா னுமையென் சொல்வாய். (அக)

### இடைச்சியார்
### எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சொல்லாடி னுமக்கிரண்டு பசுவே யுண்டு
சுமந்திடுபாற் கலசமுமத் துணையா மீதும்
அல்லாம லிடையின்மிக விளைத்துப் போனீ
ராயிருந்து மிடைமதியோ வகந்தை தானோ
புல்லாரொன் பணிதொடையா ரருணை நாட்டிற்
பொதுவர்குல மங்கையரோ புவிமேற் கண்டோம்
எல்லாருந் தனித்தனியே யெடுத்தக் காலு
மிரண்டுமுளை யாமலகன் றேகுவீரோ. (அஉ)

### இதுவுமது-கட்டளைக்கலித்துறை.

வீரனை நல்கி மகமூறு செய்த விடைக்கொடியார்
காரணி கண்ட ரருணை சலத்திற் கலசங்கொண்டு
மோரது கூறு மிடையின மானுக்கு முண்டகம்போல்
ஈரடி மெல்லினம் வல்லின மாகு மிருதனமே. (அங)

### தலைவி யிளமை யுணர்த்தல்
### அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தடனாக மணிவெயிலும் பிறையுமிழு நிலவுமெதிர்
சடில நாதன்
அடனாக நெடுஞ்சிலையா னசுரர்புர மெரித்தபிரா
னருணை நாட்டில்
திடனாக மனையவரோ தனஞ்சிறிதுங் காணாத
சிறியார் தம்மைக்
கடனாக நீர்வினவிப் பிணைதேடி முறிதனையேன்
கைக்கொண் டீரோ. (அச)

### அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கையடைந்த மழுமானுஞ் செழுமானு முழைமானுங்
கயலு மானும்

மையடைந்த விழிமானு முடனாக வருணேசர்
வருகு வாரோ
மெய்யடைந்த நிறங்கருகி விழிகளும்பஞ் சடைத்துவர
மிடற்றி னூடே
ஐயடைந்து படர்ந்துவர யமனடர்ந்து தொடர்ந்துவரு
மன்று தானே. (அரு)

தலைவன்சொல்லல்-நேரிசைவெண்பா.

அண்ணா மலையா ரருணையனை யீரும்மைக்
கண்ணாலஞ் செய்தான் கமலத்தோன் - எண்ணா
திணைக்கோலஞ் செய்தமுலை யேந்திழையீ ரென்னை
யணைக்கோலஞ் செய்தான் மதன். (அசு)

கொற்றியார்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மழலைமொழி யிசையாலுங் கொடும்பார்வை யதனாலு
மயக்க மாகிச்
சுழலும்விட ரரவமெலாம் படமெடுத்து முன்னாடத்
தோன்றி னீரோ
அழலுருவ மணிகரத்த ரருணகிரி வளநாட்டி
லளிவந் தாதும்
குழலொருசற் றுண்டாயி னெப்படியோ வாட்டிடுவீர்
கொற்றியாரே. (அஎ)

இதுவுமது - கொச்சகக்கலிப்பா.

ஆரிதழி சூடு மருணேசர் நன்னாட்டில்
வாரிறுகு கொங்கை மலைசுமக்குங் கொற்றீரோ
பேரிருள்போய் நாமப் பிறைநிலவு கண்டொளிக்கச்
சூரியகண் ணில்லார் குழல்குறைந்தா ரென்பாரோ. (அஅ)

வஞ்சித்துறை.

பாணார் மொழிநிறை
சோணா சலரடி

பேணு தவனுறு
மாணு நரகமே. (அகூ)

## வஞ்சி விருத்தம்.

நரக வாதையில் வன்பிறுர்
தரணி மீதொரு கொன்பெறுர்
சுரரு லோகமு மின்புறுர்
அருணை நாயக ரன்பரூர். (கூ௦)

## வேற்றொலி வெண்டுறை.

அருணையதிருங்கழலராறணிசெஞ்சடையாளரரிவைபாகர்
கருணைநெடுங்கடலான்பெருமாஞர்தாடொழுதார்கதியைநாடின்
மரணமிலாவிமையவர்தம்வானுலகமன்றே
பொருணிறையுநான்மறையோர்புகலுமத்தாட்பூவே. (கூக)

## இரங்கல் - கலித்துறை.

பூவுண்டவிடையாளரருணசலத்தீசர்பொன்மேருவாய்
பாவுண்டபுகழாளர்பிரியேனெனச்சொன்னபருவத்திலே
காவுண்டுகுயிலுண்டுமயிலுண்டுகிளியுண்டுகனிதூவுதே
மாவுண்டுகுருகுண்டுதிருகுண்டமனனுண்டுமறவாமலே. (கூ௨)

## வெறிவிலக்கு-கலிவிருத்தம்.

வாங்குவில் லேர்நுதல் வயங்கு மாதரீர்
ஈங்கிவ ளொருவர்கை யேட்டை வாங்கினல்
ஆங்கடு வணிந்தவ ரருணை நாட்டிலே
நீங்கண்மை யழிப்பது நீதி யல்லவே. (கூ௩)

## தலைவியைப்புகழ்தல்-கட்டளைக்கலித்துறை.

அள்ளற்கடல்விடநீங்காதகண்டரருணைவெற்பிற்
பிள்ளைப்பிறையுஞ்சிலையுமொப்பாநுதற்பேதைநல்லாள்
வள்ளற்குழைபொருகண்ணுக்குத்தோற்றம்பும்வாரிதியுங்
கள்ளக்கயலுமிராசியின்மீனுங்கடைப்பட்டதே. (கூச)

வலைச்சியார்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தேவியிட மகலாத வருணகிரி வளநாட்டிற்
 றெருக்க டோறும்
மாவிரத முனிவரொலா மயல்கூரக் கயல்கூறும்
 வலைச்சி யாரே
காவிதிகழ் வாவியிலே மீன்பிடித்து வருவோரைக்
 கண்டோங் கண்டோர்
ஆவியெலாம் பிடித்திழுக்கு முமைப்போல வொருவரைக்கண்
 டறிந்தி லோமே. (௬௫)

வலைச்சியார்-நேரிசைவெண்பா.

மேலா றணிசடையார் வீறருணை வீதியிலே
மாலாக வந்த வலைச்சியரோ - காலா
லிருவரா லுங்காட்டும் யான்பிடிக்கக் காதல்
ஒருவரா லுந்திரு மோ. (௬௬)

செவிலி நற்றாயைத்தேற்றல்

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஒருவ ராலுமனு காத நாளிலே
 வுயிரி னனவொரு கேள்வ னுசையால்
மருவி னுமென தாகு நாளையே
 வழிக டோறுமினி நாடி மீளவே
அருணை நீதிமனை பேணு மாதுடன்
 கடல்க ளேழுமலை யேழு மேழுமா
வருணர் சூழுமுல கேழு மேழுமா
 வருணை நாதர்சர பாவ தாரமே. (௬௭)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தாரிலங்கு மறைமுடிவி னடித்தருளு மருணேசர்
 தமது நாட்டில்

நாரியர்மேன் மனமகிழு மளியினங்கா ளொருவார்த்தை
நவிலக் கேளீர்
ஏரிருக்கும் கைதையெலாஞ் சோறிருக்க நீரிருக்கு
மிடங்க டோறும்
வேரிமலர்த் தேனிருக்க விவர்கூழை விரும்பிவந்தேன்
விழுகின் றீரோ. (௯௮)

தலைவியவயவ வருமைசொல்லல்
அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஏமநெடுஞ் சிலைவளைத்த பெருமானு ரருணகிரி
யிறைவர் நாட்டிற்
றூமணிமண் டபத்துறையு மடந்தையிடை யெழுதவென்
றூற் றலைவ னோ
மாமுயற்கொம் பினிலேறி விசும்பலரைப் பறித்துமின்னம்
வடிவி லாதோன்
ஆமைமயிர்க் கயிறுகொடு தொடுத்தணிந்த புதுமையினு
மருமை யாமே. (௯௯)

தலைவிகையுறை யேற்றமைசொல்லல்
கட்டளைக்கலிப்பா.

ஆர்வ லர்க்கழி யாவர நல்குவா
ரத்த னாரு ணாபுரி வெற்பரோ
பார்வி யப்புற நீர்தரு மாமணி
பட்ட பாடு பகர்ந்திட லாகுமோ
கார்கு ழற்குமு டிமணி யாயிரு
கண்கண் மீதுறு கண்மணி யாய்முலை
சேர்த லுற்றபொ ழுதிரு குன்றிலுஞ்
சென்று லாவுந் தினமணி யானதே. (௧00)

திருவருணைக்கலம்பகம்
முற்றிற்று.

கடிவது மற

காப்பதுவிரதம்

கிழமைப்படவாழ்

கீழ்மையகற்று

குணமது கைவிடேல்

கூடிப் பிரியேல்

கெடுப்பதொழி

கேள்விமுயல்

கைவினைகரவேல்

கொள்ளைவிரும்பேல்

கோதாட்டொழி